*சத்தியம் வந்து விட்டது!*

*அசத்தியம் அழிந்துவிடும்!!*

*திடனாக அசத்தியம் அழிந்தே தீரும்!!!*
*அல்குர்ஆன் 17:81*

# தப்லீக் ஜமாஅத் என்றால் என்ன?


*உருதூ மூலம் :*

**கதீபுல் ஹிந்த், முஃப்தி, ஹாபிழ்,**

**காரீ, ஷைகுத் தரீகா, அல்லாமா,**

**ஷாஹ் சைய்யத் மழ்ஹர் ரப்பானி சாஹிப்**

*தமிழில்:*

**R. யஹ்யா மியான் M.Sc.,**



*வெளியீடு:*

**பஸ்மே ரப்பானி**

தமிழ்நாடு

நூல் விவரக் குறிப்பு

| | | |
|---|---|---|
| நூல் | : | தப்லீக் ஜமாஅத் என்றால் என்ன? |
| மூல நூலாசிரியர் | : | ஷைகுத் தரீகா, கதீபுல் ஹிந்த், காரீ, முஃப்தி, மவ்லானா, ஷாஹ் சையத் மழ்ஹர் ரப்பானி |
| தமிழாக்கம் | : | R. யஹ்யா மியான் |
| உரிமை | : | வெளியீட்டாளருக்கு |
| முதற்பதிப்பு | : | மே -1987 |
| இரண்டாம் பதிப்பு | : | மார்ச் - 2013 |
| ஒளியச்சு & வடிவமைப்பு | : | மாஸ் மீடியா பவர்<br>044 - 25593376<br>9962378699<br>massmediapower@gmail.com |
| வெளியீடு | : | பஸ்மே ரப்பானி, தமிழ்நாடு |
| விலை | : | இலவச வெளியீடு |


# பதிப்புரை

*லகல் ஹம்து யா அல்லாஹ்!*
*வஸ்ஸலாத்து வஸ்ஸலாமு அலைக்க யா ரஸுலல்லாஹ்!*

அகிலங்களுக்கெல்லாம் அருட்கொடையாம் எம்பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்களும் அவர்தம் உத்தம அஸ்ஹாபுகளான தோழர் பெருமக்களும் தீன்நெறி காக்கும் இமாம்களும் மனிதப் புனிதர்களாகிய வலிமார்களும் தமது உடல், பொருள் ஆவியனைத்தையும் அர்ப்பணித்த காரணத்தால், இன்று வையக முழுவதும் சத்தியச் சன்மார்க்கமாகிய இஸ்லாம் பரவியுள்ளது. ஏகவல்லோன் இறைவனும் தனது 'குர்பத்தென்ற' நெருக்கத்தையும் பேராற்றலையும் அவர்களுக்கு வழங்கி சங்கை மிகுந்த உயர்நிலைகளில் அவர்களை அமர்த்தியுள்ளான். இவ்வுலக வாழ்வை விட்டு நீங்கினாலும் உலக மாந்தர்களுக்கு அவர்கள் ஆற்றிவரும் தொண்டுகள் சொல்லிலடங்கா.

இப்புனிதர்கள் பேரில் நமது நன்றியையும், அன்பையும் வெளிப்படுத்துவதுதான் இறைக்கட்டளையும், மனிதப் பண்புமாகும். ஆனால் இந்நல்லடியார்களை நிந்தனைசெய்வதும், புறக்கணித்து உதாசீனப்படுத்துவதும் இகழ்வதும் தங்களின் ஈமானின் ஒரு அங்கமெனக் கருதுவோரும் இருக்கிறார்களென்றால் வியப்பு மேலிடலாம். அத்தகைய ஒரு நன்றி மறந்த கூட்டம்தான் 'வஹ்ஹாபிகள்' என்பதை இந்நூலில் தாங்கள் காணலாம்,

இப்னு தைமிய்யா, இப்னு அப்துல்வஹ்ஹாப் போன்றோரை இமாமாக ஏற்றுக் கொண்டு 'அஹ்லே ஹதீஸ்' என்ற பெயரில் இவ்வுபகண்டத்தில் நுழைந்த இவ்வியக்கத்தை நெறிகெட்டகூட்டமென முஸ்லிம் சமுதாயம் ஒதுக்கித்

தள்ளியது. ஒவ்வொரு காலத்திலும் ஒரு பெயருடன் இவ்வியக்கம் தொடர்ந்து செயல்பட்டுக் கொண்டேதான் வந்துள்ளது. தற்போது தௌஹீத் இயக்கம், I.S.M. (இத்திஹாதுஷ் ஷுப்பானுல் முஜாஹிதீன்) அன்ஜுமனே குத்தாமுத்தீன், மர்கஸுஸ் ஸலபி, ஜமாஅத்தே இஸ்லாமி, S.I.M. போன்ற இவையனைத்தும் மேற்கூறப்பட்ட வஹ்ஹாபிய இயக்கத்தின் அங்கங்களாகும். மேலும் இந்நன்றிகெட்ட கூட்டங்களுடன் தப்லீக் ஜமாஅத்திற்கு தொடர்பு உண்டா? என்பதை இந்நூலில் தெளிவாக அறிந்து கொள்ளலாம்.

மேற்கண்ட வஹ்ஹாபியக் கூட்டங்களின் கொள்கைகள் எவ்வாறு திருமறைக்கும் திருநபியவர்களின் வழிமுறைக்கும், முரண்பட்டவை என்பதை முஸ்லிம்களிடையே இனங்காட்டப்படாது போனதால் இன்று அவற்றின் தீய நெறிகளை நேரிய மார்க்கமென முஸ்லிம்கள் நம்பியுள்ளனர். இத்தவறான எண்ணங்களை நீக்கும் பொருட்டு யார் யார் எத்தகைய கொள்கையுடையோர் என்பதை தெளிவாக்கிட 'ஸையாஹே ஏஷியா, கதீபுல் ஹிந்த், அல்லாமா, மௌலானா சையத் மஜ்ஹர் ரப்பானி ஸாஹிப் மத்தலில்லஹுல் ஆலியவர்கள் உருதூ மொழியில் தப்லீக் ஜமாஅத் கியாஹே' என்று எழுதியுள்ள நூலை தமிழில் வெளியிடுகிறோம்.

தப்லீக் ஜமாஅத்தினரால் புகழ்ந்து கண்ணியப்படுத்தப்படும் மவ்லவீ இஸ்மாயீல் தெஹ்லவி, மவ்லவீ ரஷீத் அஹ்மத் கங்கோஹி, மவ்லவீ காசிம் நானூத்வி, மவ்லவீ கலீல் அஹ்மத் அம்பேட்டி, மவ்லவீ அஷ்ரப் அலீ தானவி ஆகியோர் திருநபியவர்களை இகழ்ந்து எழுதியுள்ள தரக்குறைவான வாசகங்களை அஹ்லுஸ்சுன்னத் வல்ஜமாஅத்தின் உலமாப்பெருமக்கள் எடுத்துரைத்தனர். ஆனால் தப்லீக் ஜமாஅத்தினரோ அவற்றில் சிலபொய்யென்றும், சில வாசகங்கள் உண்மையென ஒப்புக் கொண்டு தமக்கே உரிய பாணியில் தில்லுமுல்லுத்தனமான விளக்கங்கள் கொடுத்து அவ்வாசகங்களில் தவறில்லையெனவும் சப்பைக்கட்டு கட்டியுள்ளனர்.



மற்றும் சில வாசகங்களை பொறுத்தமட்டில் அவற்றை ஸுன்னத்வல் ஜமாஅத்தினர் தவறாக மேற்கோள் காட்டுகிறார்கள் என்று ஏறத்தாழ இதுபோல கூறுகின்றார்கள்......

உண்மையில் திருத்தூதரை நிந்தனை செய்யும் நோக்கம் எங்களுக்கு இல்லை என்ற கருத்தில் விளக்கங்களென்னும் பெயரில் ஏதோ ஒன்றை கூறுகிறார்கள். இந்த அடிப்படையில் வெளிவந்துள்ள புத்தகம்தான் 'தப்லீக் ஜமாஅத் பற்றி தவறான குற்றச்சாட்டுகளும், தக்க பதில்களும்' இதை ஷரீஅத்தின் அடிப்படையில் உலமாப்பெருமக்கள் நேரிடையாக ஆராய்ந்து பார்த்தால் இதில் செய்யப்பட்டிருக்கும் தில்லுமுல்லுத்தனங்கள் வெளிவரும். செம்மறியாடு கூட்டங்கள் போன்ற தங்கள் கூட்டத்தாரை திருப்திப் படுத்துவதற்கென்று எழுதப்பட்ட ஒரு புத்தகம்தான் தப்லீக் ஜமாஅத் பற்றி தவறான குற்றச்சாட்டுகளும் தக்க பதில்களும்.

தற்போது உங்களது கரங்களை அலங்கரிக்கும் இந்நூலை பார்த்தீர்களேயானால் நபிமார்களையும், வலிமார்களையும் திட்டமிட்டு இழிவுபடுத்துவதே தங்களது முழுநேர ஊழியமாக தப்லீக் ஜமாஅத்தினரால் போற்றப்படும் உலமாப்பெருமக்களெனப்படுவோர் செயல்பட்டு வந்துள்ளனர் என்பதை எளிதாக அறிந்து கொள்ள முடியும். சம்பந்தப்பட்ட நூல்களும் அந்தவாசகங்கள் காணப்படும் பக்கங்களும் ஆங்காங்கே தரப்பட்டுள்ளன. (தற்போது புதிதாக வரும் பதிப்புக்களில் வேண்டுமென்றே பக்கங்கள் மாற்றப்பட்டுள்ளன.)

இந்நூலை படித்தீர்களேயானால் அஹ்லுஸ் ஸுன்னத்வல் ஜமாத்துஅடைய உலமாப்பெருமக்கள் கூறும் குற்றச்சாட்டுகளிலுள்ள உண்மை தெரியவரும். அத்துடன் தப்லீக் ஜமாஅத் உலமாக்களின் தற்கால சீடர்கள் விளக்கங்கள் தருவதில் எவ்வளவு தில்லுமுல்லுக்காரர்களென்பதும் நீங்களே தெரிந்து கொள்ளலாம்.

அடுத்து, தப்லீக் ஜமாஅத் உண்மையிலேயே தொழுகைக்கு அழைக்கும் இயக்கம் தானா? அல்லது தொழுகைக்காக அழைப்பதை ஒரு சாதனமாக வைத்துக் கொண்டு தங்களது மூதாதையர்களின் கொள்கையைப் பரப்ப வேண்டும் என்பது நோக்கமா? என்பனபோன்ற விஷயங்கள் முழுமையாகவும் தக்க ஆதாரங்களுடனும் இந்நூலில் கொடுக்கப்பட்டுள்ளன. இந்நூலை முஸ்லிம் சகோதரர்கள் யாவரும் வாசித்து பயனடைவதுடன் சகலவற்றிற்கும் மேலான ஈமானை காப்பாற்றிக் கொள்ளும்படியும் தாழ்மையுடன் கேட்டுக் கொள்கிறோம்.

உண்மைகளை எடுத்துரைக்காமல் உலமாப்பெருமக்களில் பெரும்பாலோர் தமிழ் கூறும் முஸ்லிம் சமுதாயத்திற்கு செய்துள்ள வஞ்சனையை போக்குகின்ற முயற்சியில் காயல் மாநகர ஆன்மிகப் போதகரும், இறைநேசச் செல்வருமான ஸூஃபி ஹள்ரத் அவர்கள் முதன்முறையாக ஈடுபட்டனர். தங்களின் சீரிய எழுத்தாற்றலால் உண்மைகள் பலவற்றை வெளிப்படுத்தினர். அன்னாருக்குப்பின் அப்பணியை எவரும் தொடராதது மிகவும் வருத்தத்திற்குரியது. தற்போது இந்நூலை வெளியிடுவதன்மூலம் ‘பஸ்மே ரப்பானி’ அக்குறையை களைவது மட்டுமின்றி தனது தலையாய கடமைகளில் ஒன்றை முடித்துள்ளதென்பதையும் அன்புடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

**பஸ்மே ரப்பானி** , தமிழ்நாடு.



## மூல நூலாசிரியரைப் பற்றி...

தப்லீக் ஜமாஅத் கியா ஹே? என்னும் நூலை உருதூ மொழியில் எழுதியவர் ஆன்மிகத்தின் தாயகம், மெய்ஞானப் பொக்கிஷம், ஹள்ரத் ஆலிமுல் உலமா, அல்லாமா, முஃப்தீ, ஹாபிழ், காரீ, அல்ஹாஜ், ஷாஹ் **சைய்யத் மழ்ஹர் ரப்பானி** அவர்களைத் தமிழக முஸ்லிம்கள் சென்ற ஐம்பது ஆண்டுகாலமாக அறிகின்றனர். இருப்பினும் சம்பிரதாயம் கருதியும். தற்போதுள்ள இளைய தலைமுறையினர் ஹள்ரத் அவர்களைப் பற்றி அறிந்து கொள்ளவும் மூலநூலின் ஆசிரியரைப் பற்றிச் சுருக்கமான சில விபரங்களைத் தருவதில் தன்ஜீம் மகிழ்ச்சியடைகிறது.

அல்லாமா அவர்களின் தனிச்சிறப்பு என்னவென்றால் இஸ்லாத்தின் ஷரீஅத் மற்றும் தரீகத் இரண்டையுமே ஒருங்கிணைத்து ஒரு தலைசிறந்த மார்க்க மேதைக்கான முன்னுதாரணமாகத் திகழ்கின்றார்கள் என்பதுதான். ஷரீஅத்தில் ஹாபிழ், காரீ, முப்தீ, மவ்லானா என்ற சிறப்புகளுடன் தரீகத்தில் ஸில்ஸிலியே காதிரிய்யா ரப்பானியாவில் ஒரு தலைசிறந்த ஷைகாகவும் விளங்குகின்றார்கள். இந்திய உபகண்டத்தில் ஸுன்னத்வல் ஜமாஅத் மார்க்க மேதைகளுள் தலைசிறந்த ஒருவர் என்ற தனித்தன்மையுடையவர்களாகப் போற்றப்பட்டு மதிக்கப்படுகின்றார்கள்.

இப்பாரெங்கும் புகழ்பெற்ற இறைநேசச் செல்வரும் இறையருள் மெய்ஞானியுமான சைய்யிதினா சைய்யத் ஜலாலுத்தீன் ஜஹானியா ஜஹான் கஷ்த் வலியுல்லாஹ் (ரளி)

அவர்களின் அருமைச் சகோதரர் ஹள்ரத் சைய்யிதினா சையத் ஷாஹ் ஸத்ருத்தீன் ராஜுகந்தால் வலியுல்லாஹ் (ரளி) அவர்களின் உயர் பரம்பரையில் புகழ்பெற்ற உலமாப் பெருமக்கள் பலரும், வலிமார்கள் பலரும் தோன்றியுள்ளனர். இச்சிறப்புமிக்க சந்ததியில் இன்னும் சங்கைக்குரிய பல உலமாப்பெருமக்கள் ஷைகுமார்கள் இந்திய உபகண்டம் முழுவதிலும் உயர் இஸ்லாமியத் திருப்பணியாற்றி வருகின்றார்கள், அவர்களில் ஹஜ்ரத் அவர்கள் கதிரவன் போலமெய்ஞான ஒளிபரப்பி வருகின்றார்கள்.

இந்திய உபகண்டம் முழுவதும் மட்டுமின்றி, மலேஷியா, சிங்கப்பூர், சிலோன், பாகிஸ்தான், பங்களாதேஷ், இந்தோனேஷியா, ஹாங்காங், ஈரான், ஈராக், குவைத், ஸவூதி அரேபியா, யமன் முதலிய பலநாடுகளிலும் இஸ்லாமிய திருப்பணிகளை மேற்கொண்டதுடன் மெய்ஞான ஒளியையும் பரப்பி வருகின்றார்கள். மேற்கூறப்பட்ட நாடுகளின் உலமாப் பெருமக்களால் பாராட்டி சிறப்பிக்கப் பட்டிருக்கின்றார்கள். ஹள்ரத் அவர்களின் சிறப்பான நிர்வாகத்தின்கீழ் U.P. மாநில பாந்தா ஷரீஃபில் நடைபெற்று வரும் தாருல் உலூம் ரப்பானியா என்ற இஸ்லாமிய உயர் கல்விக் கூடத்தில் ஐநூறுக்கும் மேற்பட்ட மாணவர்கள் மார்க்கக் கல்வி பயின்று வருகின்றார்கள். இக்கல்லூரியிலிருந்து ஆண்டுதோறும் ஆலிம்களும், ஹாபிழ்களும், காரிகளும், முப்திகளும் மவ்லவிகளும் பட்டம் பெற்று, வெளியாகி இந்தியாவெங்கும் இஸ்லாமிய அறப்பணி புரிந்து வருகின்றார்கள்.

இத்தகைய உயர்கல்விக்கூடம் ஒன்றை நிர்வகித்து வரும் ஹள்ரத் அவர்கள் உணவு. உடை, உறைவிடம் இன்னும் பல வசதிகளுமுள்ள தாருல் யதாமா எனப்படும் அனாதை இல்லம் ஒன்றையும் நிர்வகித்து வருகின்றார்கள். ஹள்ரத் அவர்களின் ஆன்மீகச் சீடர்களாகிய முரீதீன்கள் இந்தியா முழுவதிலும் இருக்கின்றார்கள். தென்னாட்டில் குறிப்பாக சென்னை,



பெங்களூரு, சேலம், கோவை, ஈரோடு, கரூர், திருச்சி, மதுரை, தஞ்சை, கும்பகோணம், சிதம்பரம், பாண்டிச்சேரி முதலிய நகரங்களில் அதிக எண்ணிக்கையில் உள்ளனர்.

ஹள்ரத் அவர்களின் நல்லுபதேசங்களால் லட்சக்கணக்கான மக்கள் ஈர்க்கப்பட்டிருக்கின்றார்கள். எதிரிகளையும் மண்டியிடச் செய்யும் ஹள்ரத் அவர்களின் சொல்லாற்றலால் ஈர்க்கப்பட்டு இந்தியாவின் பல பகுதிகளிலிருந்தும் இஸ்லாமிய பெருங்குடி மக்கள் தங்களது பகுதிகளுக்கு அழைத்துச் சென்று நல்லுபதேசங்கள் பெற்று சிறப்படைந்திருக்கின்றார்கள்.

ஹள்ரத் அவர்கள் சொல்லாற்றல் வேந்தர் மட்டுமின்றி பன்னூல் ஆசிரியரும்கூட. ஹள்ரத் அவர்கள் 15க்கும் மேற்பட்ட நூல்கள் எழுதியுள்ளார்கள். அவைகளில் 'தஜல்லியாதே றப்பானீ' 'ஸாஇதயே றப்பானீ' மற்றும் தற்போது உங்களது கரங்களை அலங்கரித்துக் கொண்டிருக்கும் 'தப்லீக் ஜமாஅத் கியாஹே' முதலியன இந்தியாவின் பற்பல பகுதிகளிலும் பிரபலமானவை. ஹள்ரத் அவர்களுடைய நூலினைத் தமிழ்படுத்தி தமிழ் கூறும் முஸ்லிம் சகோதரர்களுக்கு சமர்ப்பிக்கும் சிறப்பான பணியினைச் செய்வதில் பஸ்மே றப்பானி தனது தலையாய கடமைகளில் ஒன்றினைச் செய்த உணர்வினை அடைகின்றது.

**பஸ்மே ரப்பானி**
**தமிழ்நாடு.**

# அணிந்துரை!

***காயல் மாநகர மஹ்ழறத்துல் காதிரிய்யா அரபுக் கல்லூரிப் பேராசிரியர்கள் அன்புடன் அளித்த அணிந்துரை.***

*அளவற்ற அருளாளனும் அன்புடையோனுமான அல்லாஹ்வின் திருநாமத்தால் ஆரம்பிக்கிறோம். சர்வ புகழும் ஏகவல்ல அல்லாஹுக்கே! கருணையும், சாந்தியும் அகிலத்தின் அருள்பிழம்பாக அவதரித்த அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் பேரிலும். அவர்களின் கிளைஞர்கள் தோழர்கள் அனைவர் பேரிலும் உண்டாவதாக! ஆமீன்.*

*இன்றைக்கு "தீன்வழிகாட்டும் இயக்கம்" என்று வெளிவேஷம் போட்டு வஹ்ஹாபிய்யத்தின் நச்சுக் கருத்துக்களை நமக்கு மத்தியில் பரப்பி, குழப்பிவரும் தப்லீக் ஜமாஅத்தின் அந்தரங்க கருத்துக்களை கொள்கைகளை அதன் தலைவர்களின் உண்மை நிலைகளை மிகத் தெளிவாக தப்லீக் ஜமாஅத் கியாஹே தப்லீக் ஜமாஅத் என்றால் என்ன? என்ற நூலில், சங்கைக்குரிய அல்லாமா முப்தி மவ்லானா மஜ்ஹர் ரப்பானி ஹள்ரத் தாமத் பரக்காத்துஹு அவர்கள் விளக்கி எழுதியுள்ளார்ர்கள். அதை அழகு தமிழில் அவர்களது சிஷ்யர் அருமைச் சகோதரர் ஜனாப் யஹ்யாமியான் அவர்கள் நல்ல திறமையாக மொழி பெயர்த்துள்ளார்கள், அல்ஹம்துலில்லாஹ்.*

*இந்நூலை அவசியம் வாங்கிப்படித்து. தப்லீக் ஜமாஅத்தின் உண்மை நிலை புரிந்து அதன் தீமைகளை விட்டும் அகன்று நமது ஸுன்னத் வல்ஜமாஅத்தின் உயரிய நேரியபாதை சென்றிட விழைகிறோம். இங்ஙனம்*

*சமுதாய ஊழியர்கள்*

**S.M.H. முஹம்மத் அலி சைபுத்தீன் ஆலிம்**

**M.M. செய்யிது முஹம்மத் ஆலிம்,**

**ஹிஸ்புஸ்லாஹ் சபை**

*ஸூஃபி மன்ஜில், காயல்பட்டணம்., தூத்துக்குடி மாவட்டம்*

*ஹிஜ்ரி 2.9.1407 *** பி. 1.5.1987*



# மூல நூலாசிரியரின் முன்னுரை!

*புதுப்புது நவீன ரக ஆயுதங்களை ஏந்தி குஃப்ர் என்னும் இறைமறுப்பொன்றே மார்க்கம் என்பதைப் போல் இஸ்லாமிய விரோதிகள் முஸ்லிம்களுக்கெதிராக வரிந்து கட்டிக் கொண்டிருக்கும் நேரத்தில் அதுவும் அவர்களின் கை ஓங்கிவிடும் பட்சத்தில் காட்டாற்று வெள்ளத்தில் துரும்பொன்று அடித்துச் செல்லப்படுவதைப்போல், இஸ்லாமிய சமுதாயமே அடித்துச் சென்று விடும் அபாயம் மிகுந்து போய் விட்டிருக்கின்ற இத்தருணத்தில் இஸ்லாத்தைப் பரப்புவதும் தப்லீக் செய்வதும் தொடர்ந்து நடைபெற வேண்டியது மிக மிக அவசியம்! ஆனால் இது யார்மீது கடமை? இதுபற்றி திருக்குர்ஆன் மற்றும் ஹதீஸ்களில் விபரிக்கப்பட்டுள்ள நிபந்தனைகள் என்ன? என்பனவற்றை இந்நூலில் தாங்கள் காணலாம்.*

*கலிமாவைக் கற்றுக் கொடுத்தல் மற்றும் 'தொழுகையின் பக்கம் அழைத்தல்' போன்ற மார்க்கத்தின் நோக்கங்களுக்காக தப்லீக் மற்றும் தீனைப் பரப்புதல் போன்ற புனிதமான உணர்வுகள் மிகுந்தோராக இன்றைய தப்லீக் மற்றும் இல்யாஸி ஜமாஅத்துக்களில் ஈடுபடும் இஸ்லாமியர்களது நல்லெண்ணத்தைத் தாக்குவது உசிதமல்ல!*

*இருப்பினும் இவ்வியக்கங்களில் ஈடுபட்டுள்ள முஸ்லிம் சகோதரர்கள் இந்த இயக்கத்தை தோற்றுவித்த மௌலவி இல்யாஸ் என்பவர் யார்? அவரது ஆசிரியர்கள் யார்? அவரின் மெய்ஞானப் போதகர்கள் யார்? அவர்களின் சொல்லும் செயலும் எவ்வாறிருந்தன? அவர்களது கொள்கைகள் என்ன? அவர்களின் ஈமான் எப்படிப்பட்டது? என்பன போன்ற விபரங்களை அவ்வியக்கத்தைச் சார்ந்த பொறுப்பான உலமாப்பெருமக்களுடைய நூல்களிலிருந்தே அவர்களின் கொள்கை மற்றும் ஈமான் போன்றவற்றின் உண்மையான வடிவங்களாகிய சுய சொரூபங்கள் சமர்ப்பிக்கப்பட்டுள்ளன.*

*முஸ்லிம்களிடையே வீணான சண்டை சச்சரவுகளை உருவாக்கிட ஆங்கிலேயரது ஆட்சி எத்தகைய செயல்முறைகளைப் பின்பற்றியது? எத்தன்மைகள் கொண்ட மௌலவிகளையும் ஷைகுமார்களையும் பெரும் தொகைகள் கொடுத்தும் மாதாந்திர சம்பளம் கொடுத்தும் மார்க்கத்தில் பிரிவினை சக்திகளையும், பிளவுகளையும் உண்டுபண்ணப்பட்டது என்பது போன்ற விளக்கமான விபரங்களை வரலாற்று நூல்களின் ஆதாரங்களுடன் இந்நூலில் காணலாம்.*

*இதே முஸ்லிம்கள் ஒரு காலத்தில் சில பல நூறு எண்ணிக்கையளவில் மட்டுமே இருந்தபோது அவர்களின் சீரும் சிறப்பும் உலகின் நாலா பக்கங்களிலும் கொடி கட்டிப் பறந்தது. ஆனால் இன்று கோடிக்கணக்கான எண்ணிக்கையளவு இருந்தும் முஸ்லிம்களுக்கு ஏன் இந்த இழிநிலை? மார்க்கப் பேணுதல் இல்லா முஸ்லிம்கள் இத்தகைய இழிநிலைக்கு ஆளானால் அதில் எவ்வித ஆச்சரியமுமில்லை.*

*ஆனால் வெளிப்படையான தொழுகை, நோன்பு போன்றவற்றைப் பேணுபவர்கள், தஹஜ்ஜுத், இஷ்ராக்கைக்கூட தவறவிடாது கடைபிடிப்பவர்கள் அவர்கள் கூட இன்று லட்சக்கணக்கில் இருக்கின்றார்களே! அப்படிப்பட்டவர்களின் வீழ்ச்சிக்கும். அழிவுக்கும் கூட என்ன காரணம்?*

*இப்படிப்பட்ட வேதனைமிக்க உண்மை, உள்ளத்தை வருத்தக்கூடிய வரலாற்றுக் கொடுமை மற்றும் அதன் பின்னணியாகிய காரண காரியங்கள் அனைத்தையும் இந்நூலில் தாங்கள் காணலாம்.*

**பீர்ஜாதா ஸையத் மஜ்ஹர் ரப்பானி**
*தேதி ஹிஜ்ரி 1381 தில்கஃதா 20*
*கி.பி. 26.4.1962*



# தப்லீக் ஜமாஅத் என்றால் என்ன?

**கேள்வி :** *1*

***கண்ணியமிகும் சங்கைக்குரிய மௌலானா அவர்களே!***
***அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மதுல்லாஹ்,***

*நான் சில விஷயங்களைப் பற்றி தெரிந்துகொள்ள விரும்புகின்றேன். அருள் கூர்ந்து தாங்கள் பதிலளிப்பீர்களேயானால் அதனால் எனக்கும் பாமரர்களுக்கும், கற்றறிந்தோருக்கும் நிம்மதியளிப்பதாக இருக்கும். அதாவது தற்காலத்தில் கிராமம் கிராமமாக; நகரங்கள் தோறும் தொழுகை மற்றும் கலிமா போன்றவற்றை முஸ்லிம்களிடையே தப்லீக் செய்து கொண்டிருக்கும் ஜமாஅத்துக்களில் பெரும்பாலோர் அரபு மற்றும் பார்ஸி போன்ற மொழிகளை ஒரு சிறிதும் அறியாது வெறுமனே ஒருசில உருதூ நூல்களைப் படித்துவிட்டு பள்ளிகளிலே மிம்பரில் ஏறி நின்று விடுகின்றனர். இன்னும் உலமாப்பெருமக்களைப் போன்று பயானும் செய்கின்றனர்.*

*இத்தகைய மார்க்கக் கல்வியறிவில்லா பாமரர்கள் பயான் மற்றும் பிரச்சார மேடைகளில் அமர்ந்து நேர்வழி காட்டுதல் மற்றும் தப்லீக் போன்ற வேலைகள் செய்வது சரியானதா?*

மௌலானா அப்துல் ஹமீத் ஹக்கானி
இமாம் பென்ஷன்லைன் மஸ்ஜித்
விசாகப்பட்டிணம். (ஆந்திரா)

*பதில்: 1*

*நஹ்மதுஹு வநுஸல்லி அலா ரஸுலிஹில் கரீம், வஅலைக்கு முஸ்ஸலாம் வரஹ்மதுல்லாஹி வபரகாத்துஹு*

*மௌலவி இல்யாஸைக் கொண்டு உருவாக்கப்பட்ட தப்லீக் ஜமாஅத் உண்மையிலேயே எந்தக் கொள்கையின் அடிப்படையில் வேலை செய்கின்றது? அதன் இயக்கத் தலைவர்கள் இஸ்லாமிய மக்களை எந்தத் திசையில் இட்டுச் செல்ல விரும்புகின்றனர் என்பதை தாங்கள் விளங்கிக் கொள்ளும் பொருட்டு அதற்கென ஒருசில திருமறை வசனங்களைக் கொண்டும் அண்ணல் நபிகளாரின் தேனுரைகளான ஹதீஸைக் கொண்டும் விளக்குகின்றேன்.*

*அதிலும் குறிப்பாக இல்யாஸுடைய தப்லீக் ஜமாஅத்தைச் சார்ந்த தங்களின் சொற்பொழிவுக்குத் தலைப்புக்களாகத் தருகின்ற அதே திருமறை வசனங்கள், ஹதீஸ்கள் ஆகியவற்றைக் கொண்டே இங்கு தங்களுக்கு விளக்கமளிக்கிறேன்.*

*இதோ நான் இப்போது சொல்லப்போகும் இவ்வசனங்களுக்கும், ஹதீஸ்களுக்கும் இவர்கள் (தப்லீக் ஜமாஅத்) தங்கள் மனதிற்கு தோன்றியவாறு எல்லாம் அர்த்தமும், விளக்கமும் தந்து கொண்டு கண்ட கண்ட நபர்களையெல்லாம் தங்களுடன் தப்லீக்கில் அழைத்துச் செல்கின்றனர்.*

*இதைப்படித்துப் பார்த்த பின்னர் கல்வியறிவில்லா பாமர மக்களையெல்லாம் தப்லீக்கில் அழைத்துச் செல்வதும், அண்ணலெம் பெருமான் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்கள் அமர்ந்து நற்போதனை புரிந்த மிம்பரில் ஏறச் செய்வதும், நபித்துவ அந்தஸ்த்திலே அவர்களை அமர்த்துவதும் முறையான செயலா? அல்லது மார்க்கத்திற்குப் புறம்பான, தவறான ஒன்றா என்பதைத் தாங்களே முடிவெடுத்துக் கொள்ளுங்கள்.*



**நன்மையை ஏவி தீமையை தடுத்தல்:**

*"வல்தகுன் மின்கும் உம்மத்துன் யத்ஊன இலல் கைரி வ யஃமுரூன பில் மஃரூஃபி வ யன்ஹெளன அனில் முன்கர்"*

*இன்னும் நன்மையின் பால் அழைக்கவும். நற்கருமங்களைக் கொண்டு ஏவவும். தீய விஷயங்களினின்றும் தடுக்கவும் உங்களின் பால் ஒரு கூட்டம் இருக்கவேண்டும்.*

*அல்குர்ஆன்.*

*இறைமறையின் இத்திருவசனத்தில் 'உங்களின்பால் ஒரு கூட்டம்' என்று வரையறுத்திருப்பதிலிருந்தே பிரச்சாரப் பணியாகிய தப்லீக் செய்வது பற்றிய இறைக்கட்டளை அனைத்து முஸ்லிம்கள் பேரிலும் கட்டாயமான ஒன்றல்ல, கடமையான ஒன்றல்ல வென்பதை அறிந்து கொள்ளலாம்.*

*மாறாக இஸ்லாமியர்களிடையே 'ஒரு கூட்டம்' என்று வரையறுக்கப்பட்டிருப்பதைக் கொண்டு அது உலமாப்பெருமக்கள் எனப்படும் மார்க்க அறிஞர் பெருமக்கள் மீது கடமையாக்கப்பட்டுள்ள தென்பதைத் தெரிந்து கொள்ளலாம்.*

*நபித்தோழர்களான ஸஹாபாக்களின் காலந்தொட்டு இன்றுவரை இப்புனிதப் பணியினை சிறந்த மார்க்க ஞானம் படைத்த சான்றோர் பெருமக்கள் போதனை, பிரச்சாரம், சொற்பொழிவு போன்றவற்றைக் கொண்டு செயல்படுத்திக் கொண்டுதான் வந்துள்ளனர். இனி, மேற்கண்ட இத்திருமறை வசனம் பற்றி காளீ பைளாவியர்கள்..., தங்களின் தஃப்ஸீர் பைளாவியில்..., இத்தஃப்ஸீர் எல்லா அரபுக் கலா சாலைகளிலும் இன்றும்கூட கற்பிக்கப்பட்டு வருகின்றது.*

*நற்காரியங்களின் பால பிறரை ஏவுவதும், தீய காரியங்களினின்று தடுப்பதும் ஷரீஅத்தில் 'பர்ளு கிஃபாயா' வாகும். காரணம், இப்பணியை செய்யும் தகுதி*

எல்லா முஸ்லிம்களுக்கும் கிடையாது. மேலும் இப்புனிதப் பணியில் ஈடுபடுபவர்களுக்கென பற்பல விதிமுறைகள் உள்ளன. இவ்விதிமுறைகள் அனைத்து முஸ்லிம்ளையும் கட்டுப்படுத்துபவையல்ல.

உதாரணமாக, மார்க்கக் கடமைகளைப் பற்றி முழுமையாக தெரிந்து வைத்திருத்தல், மேலும் பற்பல மார்க்கச் சட்டங்கள், கட்டளைகள் பற்றிய தராதரங்கள், ஏவுதல் தடுத்தல் போன்றவற்றின் தன்மைகள் அதாவது (எதனை ஏவவேண்டும். எதனைத் தடுக்க வேண்டும் என்பது பற்றிய கல்வியறிவு) இன்னும் 'உங்களில் இருந்து ஒரு கூட்டம்' என்பதாக இவ்வசனத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது யாரை என்பனவற்றையும் அறிதல் போன்ற பல்வேறு விதிமுறைகள் உள்ளன என்று கூறுகின்றனர்.

தஃப்ஸீர் பைளாவீ

மேலும் இவ்வசனத்தில் முஸ்லிம் சமுதாயமனைத்தையும் நோக்கி முகவரிக்கப்பட்டிருந்தாலும், இதினின்று வெளிப்படும் கட்டளையைப் பின்பற்றுவதென்பது ஒரு சிலரிடமிருந்துதான் எதிர்நோக்கப்படுகிறது.

இனி நன்மையை ஏவி தீமையைத் தடுத்தல் என்பதானது இஸ்லாமிய ஷரீஅத்துடைய சட்டத்தில் 'ஃபர்ளு கிஃபாயா' என்று விளக்கப்படுகிறது.

அவ்வாறாயின் 'ஃபர்ளுகிஃபாயா' என்பது சமுதாய மக்களனைவரிலும் ஒருசிலர் மட்டுமே ஃபர்ளு கிஃபாயா போன்ற விஷயங்களில் அமல் செய்தால் அதன் நன்மை சமுதாயம் முழுமைக்குமே கிடைத்துவிடும் என்பதை ஒவ்வொரு இஸ்லாமியரும் அறிந்துள்ளனர்.

இதனின்றி 'பிரச்சாரம்' உபன்னியாசம் போன்ற பணிகளில் ஈடுபடுவோருக்கென்று சில விதிமுறைகளும் உள்ளன.



அந்த விதிமுறைகள் சமுதாயம் முழுவதையும் கட்டுப்படுத்துவதில்லை.

விஷயம் இவ்வாறிருக்க சமுதாயம் முழுவதையுமே மேற்படி தப்லீக் போன்ற பணிகளில் கட்டாயப்படுத்தி மார்க்கக் கல்வியறிவு இல்லாத நபர்களைக் கொண்டு 'தப்லீக்' செய்வது நபிகளாரின் ஸுன்னத்தைப் பின்பற்றிய ஓர் செயலா? அல்லது பித்அத்தென்றும் நூதனங்களை (ஒரு புதிய வழிமுறையை) பின்பற்றிய ஓர் செயலா என்பதை நீங்களே முடிவு செய்து கொள்ளுங்கள்.

அடுத்து மேற்கூறப்பட்ட இதே திருமறை வசனத்திற்கு அல்லாமா ஜலாலுத்தீன் ஸுயூத்தி ரஹிமஹுல்லாஹு அவர்கள் தமது தஃப்ஸீர் 'ஜலாலைனில்'.... இவ்வசனத்தில் 'மின்' என்ற சொல்லானது 'சிலரை மட்டுமே' என்று குறிப்பிடுவதற்காக பிரயோகப்படுத்தப்பட்டுள்ளது. எனவே இதில் நமக்கு பிறப்பிக்கப்படும் கட்டளை ஃபர்ளு கிஃபாயாவாகும்.

ஆதலால் இக்கட்டளை இஸ்லாமிய சமுதாய மக்களனைவரையும் நோக்கி சொல்லப்பட்ட ஒன்றல்ல. அன்றி பாமரர் போன்ற ஒவ்வொரு நபரும் இதற்கு தகுதி வாய்ந்தவரும் அல்ல.

எனவே இந்த தஃப்ஸீரின் விளக்கத்தைக் கொண்டு பாமரர், அறிவற்றவர் போன்றோர்மீது நன்மையை ஏவி தீமையை விலக்கும் காரியம் அவர்களுக்குரிய தகுதி வாய்ந்த ஒன்றல்ல என்று எடுத்தியம்புவதை பாருங்கள்.

இனி 'தஃப்ஸீர்ஜாமிவுல் பயான்' என்னும் கிரந்தத்தில் இவ்வசனத்தைப் பற்றி.... நன்மையை ஏவி தீமையை தடுத்தல் என்பது ஃபர்ளு கிஃபாயாவாகும். காரணம் இவ்வசனத்தில் எவரை குறிப்பிட்டுச் சொல்லப்படுகின்றதோ அவர்கள்மீது இதனைச் செய்ய சில விதிமுறைகள் உண்டு.

*'முஹ்ஹாக் ரஹிமஹுல்லாஹ்' என்பார் கூறுகின்றனர். அந்த விதிமுறைகளுக்குள் அடங்குவோர் நபித்தோழர்களான ஸஹாபாக்கள், சன்மார்க்க யுத்தம் செய்யும் முஜாஹித் மற்றும் உலமாப்பெருமக்களாவர். எனினும் இவ்வசனத்தில் முகவரிக்கப்பட்டுள்ளது முழு சமுதாயமாகும்.*

*ஆதலால் நபித்தோழர் பெருமக்கள், சங்கைக்குரிய சன்மார்க்கப் போர் வீரர்கள் மற்றும் அறிஞர்களான உலமாப்பெருமக்கள் போன்றோர்தான் உண்மையிலேயே நன்மையை ஏவி தீமையைத் தடுப்பவர்களென்பதையும்.*

*மாறாக ஓரிரு உருதூ நூல்களை மட்டும் படித்துவிட்டு வந்து உலமாப்பெருமக்களுக்கெதிராக நிற்கக்கூடிய அறிவிலிகள் இதற்கு தகுதியானவர்களல்ல என்பதையும் மேற்கண்ட வசனத்தின் விளக்கவுரையான தஃப்ஸீர் நமக்கு தெளிவாக எடுத்துக் காட்டுகிறது.*

*குன்ந்தும் கைர உம்மத்தின் உக்ரிஜத் லின்னாஸி தஃமுரூன பில் மஃரூஃபி வ தன்ஹவ்ன அனில் முன்கர்.*

*ஜனங்களுக்காக வெளிப்படுத்தப்பட்ட(வர்களில்) நீங்கள் சிறந்த உம்மத்தாக இருந்து கொண்டிருக்கிறீர்கள். நன்மையை ஏவி இன்னும் தீமையை விலக்குகின்றீர்கள். (அல்குர்ஆன் - 3 :109)*

*இவ்வசனத்தை தப்லீக் ஜமாஅத்தினர் மிகுதமாகத் தங்களின் பயான்களில் ஜனங்கள் மத்தியில் எடுத்துக்கூறி ஒவ்வொருவரும் தத்தம் தொழில் வியாபாரம் போன்றவைகளை விட்டுவிட்டு தப்லீக்கில் செல்ல வேண்டியது கட்டாயக் கடமையாகும் எனவும், இல்லையேல் அவர்களுக்கு நரகத்தைத் தவிர்த்து வேறு இருப்பிடம் கிடைக்காதெனவும் பல்வேறாகக் கூறி வருகின்றனர்.*



*ஆனால் ஹதீஸில் இவ்வசனத்தைக் குறித்து என்ன மாதிரியான விளக்கமளிக்கப் படுகின்றதென்பதைப் பாருங்கள்.*

*'குன்த்தும் கைர உம்மத்தின் உக்ரிஜத் லின்னாஸி' என்னும் வசனத்தைப் பற்றி ஹள்ரத் அபூஹுரைரா ரளியல்லாஹு அன்ஹு அவர்களைக் கொண்டு அறிவிக்கப்படுகின்றது,*

*ஜனங்களின் நன்மையைக் கருதி அவர்களது கழுத்தை சங்கிலியால் பிணைத்து, அவர்கள் இஸ்லாத்தை ஏற்றுக் கொள்வதற்காக வேண்டி அழைத்துவரும் நன்மக்கள் என்று அறிவிக்கப்படுகிறது.*

*(ஆதாரம் - புகாரீ - பாகம் - 2)*

*அவ்வாறாயின் நன்மையை ஏவுதல் என்பதன் கருத்தானது, இங்கு ஜிஹாத் என்னும் அறப்போரையும் சொல்லலாம். ஆனால் 'ஜிஹாத்' என்பது காஃபிர்களுடன் மட்டுமே நடத்தப்படுவதாகும், முஸ்லிம்களுடனல்ல.*

**கலிமா சொல்லிக் கொடுத்தல்:**

*இருப்பினும் துரதிருஷ்டவசமாக தப்லீக் ஜமாஅத்தினர் இஸ்லாமியர்களுடன் ஜிஹாத் செய்வதுதான் தங்கள்மீது கடமையெனக் கருதுகின்றனர். இதனால்தான் இவர்கள் காஃபிர்களுக்கு கலிமா செல்லிக் கொடுப்பதற்குப் பதிலாக முஸ்லிம்களுக்குக் கலிமா சொல்லிக் கொடுத்துக் கொண்டு அலைகின்றனர்.*

*அடுத்து மேற்கண்ட ஹதீஸைப் பற்றி புகாரீ ஷரீஃபில் விளக்குகின்றபோது,..... "ஜனங்களின் நன்மையைக் கருதி அவர்களுடைய கழுத்தை சங்கிலிகளால் பிணைத்து அவர்கள் இஸ்லாத்தை ஏற்றுக் கொள்வதற்காக வேண்டி அழைத்துவரும் நன்மக்கள்" என்று கைர உம்மத்தின் என்னும் வசனத்தில் தரப்படும் விளக்கத்தின் கருத்தானது....*

இந்த நன்மக்கள் (கைர உம்மத்) ஜனங்களுக்கு எப்படிப்பட்ட நன்மையைச் செய்கின்றனரெனில், காஃபிர்களை அவர்களது குஃப்ரான இறைமறுப்பை விட்டும் விடுவிக்கின்றனர். அத்துடன் அக்காஃபிர்களை வல்லமை பொருந்திய இறைவனையும் கருணைக் கடலான ரஸூலுல்லாஹ்வையும் எற்று விசுவாசிக்கின்ற முஃமின்களாக்கி விடுகின்றனர்.

அத்துடன், அப்திப்னு ஹமீத் என்பார் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் ரளியல்லாஹு அன்ஹு அவர்களைக் கொண்டு அறிவிக்கின்றனர். இந்த “கைர உம்மத்தின்“ என்று விபரிக்கப்பட்டவர்கள் யாரெனில்....

அவர்கள் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுடன் நாட்டைத் துறந்து ஹிஜ்ரத்துச் செய்தவர்களாகும் என்று கூறப்பட்டுள்ளது. இவ்வாறே அய்னீ எனும் நூலிலும் காணப்படுகின்றது.

ஹள்ரத் இப்னு அப்பாஸ் ரளியல்லாஹு அன்ஹு அவர்களின் மேற்கூறப்பட்ட அறிவிப்பானது “கைர உம்மத்தின்“ என்னும் வசனத்தில் இனங்காட்டப்பட்டவர்கள் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுடன் ஹிஜ்ரத்துச் செய்தவர்கள் தானென்பதையும்.... இவர்கள் முஸ்லிம்களுக்குக் கலிமா சொல்லிக் கொடுக்கவோ அல்லது முஸ்லிம்களுடன் அறப்போர் புரிந்து அவர்களுடைய கழுத்தை சங்கிலியால் பிணைத்துக் கொண்டு வரவோ ஹிஜ்ரத் செய்யவில்லையென்பது வெள்ளிடைமலை.

ஆக மேலே விபரிக்கப்பட்ட திருமறை வசனத்தின் தஃப்ஸீராகிய விளக்கமானது யாதெனில், “அம்ரு பில் மஃரூஃப்” நன்மையை ஏவுதல், கட்டளையிடுதல் என்பதானது ஜிஹாது என்றாகிறது.



தப்லீக் ஜமாஅத்தினர் அரபு மொழிகளிலுள்ள இந்த தஃப்ஸீர்களையும், ஹதீஸ்களையும் பார்க்கவில்லையெனில், குறைந்தபட்சம் மௌலானா அப்துல் காதிர் ஸாஹிப் முஹத்திஸ் தெஹ்லவி ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்களது உருதூ தஃப்ஸீரான “மௌமூஹுல் குர்ஆன்“ பக்கம் 63, விளக்கம் (ஹாஷியா) 2,லாவது பார்க்கவும்.

உத்வூ இலா ஸபீலி ரப்பிக பில் ஹிக்மத்தி வல் மௌஇழத்தில் ஹஸனத்தி வஜாதில்ஹும் பில்லத்தீ ஹிய அஹ்ஸன்.

ஹிக்மத்தாகிய நுண்ணறிவைக் கொண்டும், அழகிய நற்போதனையைக் கொண்டும் உமது இறைவனின் பக்கமாக (மக்களை) அழைப்பீராக. மேலும் அழகிய முறையினைக் கொண்டு அவர்களுடன் தர்க்கித்து வாதம் புரிவீராக!
(அல்குர்ஆன்)

இறைவனது பாதையில் அழைப்போர் இப்புனிதமிகு பணியினை மேற்கொள்ளுமுன்னர். ஹிக்மத்தெனும் நுண்ணறிவு, அழகிய நற்போதனை போன்றவற்றில் நன்கு தேர்ச்சி பெற்றிருத்தல் அவசிய மென்பதை தெரிந்து கொள்ளலாம்.

இனி ஹிக்மத். மௌஇழத்துல் ஹஸனா என்பன போன்ற அரபு வாக்கியங்களுக்குக்கூட அர்த்தம் தெரியாத பாமர மக்களையெல்லாம் கட்டாயப்படுத்தி தப்லீக் செய்யச் சொல்வது இஸ்லாத்தில் இந்த ஜமாஅத்தினர் செய்துவரும் எப்பேர்பட்ட வேதனை தரத்தக்க ஓர் அதிகப் பிரசங்கித் தனம்!

இனி இவ்வசனத்தைப் பற்றி இமாம் காளீ பைளாவி அவர்கள். தமது தஃப்ஸீரில்.... உமது இறைவனின் பக்கமாக அழைப்பீராக! அதாவது இஸ்லாத்தின் பக்கம். “பில்ஹிக்மத்தி” ஹிக்மத்தென்னும் நுண்ணறிவு மிக்க உரையாடலைக்

கொண்டும், பின்னும் இத்தகைய ஹிக்மத்தானது ஹக்கென்னும் மெய்யை ஆதாரப்படுத்துவதாயும், சந்தேகத்தை நீக்குவதாயுமிருக்கும், 'அல்மௌ இழத்துல் ஹஸனா' என்பது இந்த ஹிக்மத்தை போர்த்தக்கூடிய அதாவது அலங்கரிக்கக்கூடிய உரையபடலாக இருக்கும். இவறில் பயளிக்கக் கூடிய படிப்பினைகள் அடங்கும். இந்த முந்திய நிபந்தனை, அதாவது ஹிக்மத் என்பது உம்மத்தாரில் விசேஷமானவர்களுக்கும், அதாவது கல்வியறிவுடையோருக்கும். இரண்டாவது நிபந்தனை பாமர மக்களுக்காயிருக்கும். (காளீ பைளாவீ)

**நீதியுள்ளோரே! இஸ்லாமியச் சகோதரர்களே!**

இன்று தப்லீக் ஜமாஅத்தில் இணைந்து 'கஷ்த்' செய்பவர்கள் எந்த அளவிற்கு ஹிக்மத்தென்னும் தீட்க்ஷண்யமான ஞானமும், மௌஇழத்துல் ஹஸனா எனப்படும் அழகிய நன்முறையில் உரையாடக்கூடிய தகுதியுடையோராயிருக்கின்றனர் என்பதை சிந்தித்துப் பாருங்கள்.

**தஃவத்– தப்லீக்**

மேலும் "**தஃவத் - தப்லீக்**" என்ற சொற்களுக்குரிய சாதாரண அர்த்தமென்ன? இஸ்லாமிய மதவியல் - மார்க்கக் கலையில் இந்த சொற்களுக்கான தனிப்பட்ட அர்த்தங்கள் என்னவென்று கூடச் சொல்லத் தெரியாத நபர்கள் ஹிக்மத் என்பதையோ, மௌஇழத்துல் ஹஸனா என்பதையோ கிதாப் முக்னஅஹ் என்பதையோ எவ்வாறு செயல்படுத்த முடியும்?

இனி தப்லீக்காரர்களுக்கு பொதுவாக மனனமாக்கித் தரப்படும் ஒரு ஹதீஸைப் பற்றி இப்போது பார்ப்போம். இந்த ஹதீஸை அடிப்படையாக வைத்துக்கொண்டு கல்வியறிவில்லாத பல தப்லீக்காரர்கள் அறிஞர் பெருமக்களான உலமாப்பெருமக்களை வசைபாடி வருகின்றனர்.



மேலும் நல்லறிவு கொண்ட முஸ்லிம்கள் தங்களின் அலுவல் காரணமாகவோ, அல்லது இவர்களின் தீயகொள்கைகளின் காரணத்தாலோ, இவர்களுடன் சுற்றித்திரிய வர மறுத்தால் அத்தகையோர்மீது பற்பல ஃபத்வாக்கள் தருவதற்கும்கூட இந்த ஹதீஸைத்தான் இவர்கள் தங்களின் அஸ்திரமாகப் பயன்படுத்தி வருகின்றனர்.

ஹள்ரத் இப்னு உமர் ரளியல்லாஹு அன்ஹு அவர்களைக் கொண்டு அறிவிக்கப்படுகின்றது. அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கூறுகின்றனர்.

என்னிடமிருந்து ஒரு வசனத்தையேனும் (பிறருக்கு) சேர்ப்பித்து விடுங்கள். மேலும் (படிப்பினைக்காக வேண்டி) பனீ இஸ்றாயீல்களுடைய செய்திகளைப் பற்றி எடுத்துக் கூறுங்கள். (இவ்வாறு கூறுவதில்) எவ்விதத் தவறுமில்லை.

இனி வேண்டுமென்றே யார் பொய்யான செய்தியை என்னுடன் தொடர்புபடுத்துகின்றாரோ அவர் நரகத்தை தனது இருப்பிடமாக்கிக் கொள்ளட்டும். (ஆதாரம் : புகாரி)

"பல்லிகூ அன்னீ வலவ் ஆயஹ்" என்னும் இச்சொற்றொடரை அதாவது என்னிடமிருந்து ஒரு வசனத்தையேனும் (பிறரிடம்) எடுத்துக் கூறுங்கள் என்பதை மட்டும் சொல்லிக்காட்டி அப்பாவி முஸ்லிம்களை இந்த தப்லீக்காரர்கள் அச்சுறுத்தி வருகின்றனர்.

இனி இந்த ஹதீஸின் உண்மையான அர்த்தமென்ன? கருத்தென்ன? என்பவைகளையெல்லாம் இவர்கள் புரிந்து கொள்ளவில்லை. மாறாக இவர்கள் இன்று செய்துவரும் தப்லீக் முறைக்கு மறுப்பு இந்த ஹதீஸின் இறுதியில் விபரிக்கப்பட்டுள்ளதையும் இவர்கள் புரிந்து கொள்ளவில்லை, சரி! பல்லிகூ அன்னீ என்னும் சொற்றொடருக்கும் மற்றும் இந்த ஹதீஸிற்குமுறிய விளக்கத்தை இப்போது பாருங்கள்.

இங்கு "பல்லிகூ அன்னீ" என்னும் பதம் இருவகை கருத்துக்களை அமையப் பெற்றுள்ளது.

ஒன்று, "தப்லீக்" என்ற சொல் புலூக் என்னும் மூலத்திலிருந்து திரிந்த ஓர் பதமாகும். இதன் அர்த்தமானது ஒரு விஷயத்தை அதுபற்றித் தெரியாதவரிடம் அல்லது இடத்தில் எத்திவைக்குதல் என்பதாகும். அவ்வாறாயின் ஒரு செய்தியை அதற்குரிய நம்பத் தகுந்த ஆதாரங்களோடு அதனை அப்படியே எத்தி வைப்பதன்மூலம் அச்செய்திக்குரிய ஆதாரங்களை திட்டப்படுத்துவதாகும்.

இரண்டு, ஒரு செய்தியிலுள்ள சொற்களை அவற்றை எத்தகைய மாறுதலுமின்றி எத்திவைப்பதாகும். ஆக இவ்விரு கருத்துகள் தாம் மேற்கூறப்பட்ட ஹதீஸில் பொதிந்துள்ளது. இதனால்தான் அண்ணல் நபியவர்கள் தம்மிடமிருந்து ஒரு சிறு விஷயத்தையேனும் பிறரிடம் சேர்ப்பித்து விடுங்கள் என்று கூறும்போது "பல்லிகூ" என்ற பதத்தையும்....

பனீ இஸ்றாயீல்களது செய்திகளைப் பற்றி குறிப்பிடும் போது 'பல்லிகூ' என்பதற்குப் பதிலாக 'ஹத்திஸி' என்ற சொல்லையும் பயன்படுத்தினர்.

(ஆதாரம் : மிர்காத் ஷரஹு மிஷ்காத்)

ஏனெனில் பனீ இஸ்றாயீல்களின் செய்திகளைப் பற்றி எத்திவைக்கும்போது அப்படியே வார்த்தை பிறழாது எத்தி வைக்க வேண்டுமென்ற அவசியமில்லை.

ஆனால் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களைப் பற்றிய செய்தியை மற்றவரிடம் எத்திவைக்கும்போது, மிகுந்த கவனமும் எச்சரிக்கையும் தேவை. அதிலே ஒரு சொல்லையேனும் கூட்டவோ, குறைக்கவோ முன்பின்னாக்கவோ கூடாது. மாறாக, அதனை அப்படியே எத்தி வைக்க வேண்டும்.



**வாசக அன்பர்களே! நன்கு கவனியுங்கள்.**

இங்கு ஆதாரங்களை எடுத்துக் காட்டுவதென்பதோ. அல்லது வார்த்தை மாறாமல் எடுத்துக் கூறுவதென்பதோ மார்க்கக் கல்வியறிவற்ற பாமரர்களால் செய்ய இயலும் காரியமா?

அதாவது நபிகளாரிடமிருந்து எப்படி கேள்விப்பட்டார்களோ, அப்படியே வார்த்தை பிசகாது எவ்வித மாறுதலுமின்றி எடுத்துக்கூற இயலுமா?

தப்லீக் செய்வதற்காக நிர்ப்பந்தப்படுத்தி அழைத்து வரப்படும் மார்க்கக் கல்வியறிவில்லா பாமர முஸ்லிம்கள் திருமறை வசனங்களையும், நபிகளாரின் ஹதீஸையும் நபித்தோழர்கள் எவ்வாறு அரபு மொழியில் எடுத்துக் கூறினார்களோ அவ்வாறு எவ்வித மாறுதலுமின்றி எடுத்துக்கூற முடியுமா? இதன்றி இந்த ஹதீஸின் இறுதி வாசகத்தைச் சற்று பாருங்கள்.

**வாயில் வருவதெல்லாம் பயான்:**

"யார் வேண்டுமென்றே பொய்யான விஷயத்தை என்னுடன் தொடர்புபடுத்தினாரோ. (அதாவது நான் சொன்னதாகவோ. அல்லது செய்ததாகவோ) அவர்; தமது இருப்பிடத்தை நரகத்திலாக்கிக் கொள்ளட்டும்."

இதில் இன்று தப்லீக் ஜமாஅத்தினுடைய "முபல்லிகீன்கள்" எனப்படும் மார்க்கக் கல்வியறிவில்லா பிரச்சாரகர்கள் தப்லீக்கின் கூட்டங்க(மஜ்லிஸுக)ளில் தமது மௌலவிமார்களது கருத்துக்களையும், சொற்களையும் முழுக்க முழுக்க ஆதாரமேயில்லாத பல விஷயங்களை "ஹதீஸ்கள்" என்று வெளிப்படையாக கொஞ்சங்கூட தயக்கமின்றி பாமர முஸ்லிம்களிடையே பயான் செய்வதை இன்றும் கூட பார்க்கலாம்.

அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் ஒருபோதும் கூறியிராத ஒரு விஷயத்தை நபிகளார் கூறியதாகச் சொல்வதும். சிறிதும் தயக்கமின்றி அதனை நபிகளாரின் பொன்மொழிகள் ரஸூலுல்லாஹ்வுடைய ஹதீஸ் என்று கூறுவதும் எத்தனை அறிவற்ற ஒரு துணிச்சலென்பதை கவனியுங்கள். நீதி நேர்மையுடன் சிந்தித்துப் பாருங்கள். தமது வாயில் வந்தவற்றை யெல்லாம் ஹதீஸ் என்று கூறுபவரது இருப்பிடம் நரகமா அல்லது சுவர்க்கமாக என்பனவற்றையும் எண்ணிப்பாருங்கள்.

ஆதலினாலே சொற்பொழிவு பயான் செய்வதைக் குறித்து நபிகளார் கூறும்போது....

அமீர் அல்லது மஃமூர் அல்லது முத்தகப்பிரை தவிர வேறு யாரும் கிஸ்ஸா அதாவது பயான் செய்யமாட்டார்கள் என்பதாக அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கூறியதாக இப்னு அவ்ஃபிப்னு மாலிக்கில் அஷ்ஜஈ அவர்கள் அறிவிக்கின்றனர். (ஆதாரம் : அபூதாவூத், மிஷ்காத்)

இங்கு அமீர் என்பதற்கு "தப்லீக் ஜமாஅத் அமீர்" என்று எண்ணிவிட வேண்டாம். இது இவர்களாகக் கூறிக் கொள்வது இனி இந்த ஹதீஸைப் பற்றி மிர்காத்தில் சொல்லப்பட்டிருப்பதைப் பாருங்கள்.

"கிஸ்ஸா" என்பதற்கு வரலாறு மற்றும் (ஹிகாயத்) செய்திகள் போன்றவற்றை பயான் செய்வதெனவும் (வஃழு) சொற்பொழிவு நிகழ்த்துதல் என்றும் பொருள்படும். அதாவது ஜனங்களை நோக்கி முகவரித்து சொற்பொழிவு செய்தல் என்பது இதன் கருத்தாகும்.

இனி "அல்அமீர்" என்று இந்த ஹதீஸில் குறிப்பிடப்படுவதாவது, ஆட்சியாளர் அல்லது அதிகாரமுடையவர் என்னும் பொருளையும் மஃமூர் என்னும்



பதம் ஆட்சியாளரின் அனுமதி பெற்றவர் அல்லது இறைவனின் அனுமதி கிருபையைப் பெற்றவர் (அதாவது உலமாப்பெருமக்கள் வலிமார்கள் என்னும் பொருளையும்) முத்தகப்பிர் என்னும்பதம் கர்வமுடையவர் அதிகார வெறி ஆட்சி வெறி கொண்ட மமதையாளர் என்றும் பொருள்படும்.

ஆதலால் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களது பொன்மொழிக்கேற்ப பயான் அல்லது சொற்பொழிவு என்பது ஆட்சியாளரோ, அவரது அனுமதி பெற்றவரோ அல்லது இறைவனது அனுமதியென்னும் கிருபை பெற்ற உலமாப்பெருமக்களோ, வலிமார்களோ, அல்லது உலகாசையும், பதவி மோகமும், அதிகார வெறியும் கொண்ட அகங்காரம் படைத்தவரோ தான் செய்வார்கள் என்பது தெளிவாகிறது.

இப்போது நீங்களே சொல்லுங்கள்! இந்த தப்லீக் ஜமாஅத்தில் பயான் செய்வோர் மேற்கூறிய மூன்று கூட்டத்தாரில் எந்த கூட்டத்தைச் சேர்ந்தவர்கள்? இவர்கள் ஆட்சியாளரும் அல்ல. அல்லது ஆட்சியாளரால் நியமிக்கப்பட்டவர்களுமல்ல. இறைவனது அனுக்கிரகம் பெற்ற உலமாக்களோ வலிமார்களோ அல்ல. அவ்வாறாயின் கடைசிக் கூட்டமாகிய மூன்றாவது இனத்தாரில் தான் இவர்களை இணைக்க முடியும்; அதாவது, உலகாசையும் அதிகார வெறியும் கொண்ட அகங்காரம் படைத்த மமதையாளரின் கூட்டத்தில்தான் இவர்களை இணைக்க வேண்டும்.

இதனால்தான் இவர்கள் முறையான மார்க்கக் கல்வியினைக் கற்காது அதற்காக கொஞ்சம்கூட சிரத்தையெடுக்காது உலமாப்பெருமக்களின் அந்தஸ்த்தை ஸ்தானங்களை அபகரித்துக் கொள்கின்றனர். உலமாப்பெருமக்களது அதிகாரம் சிறப்பு போன்றவையனைத்தையும் தமதாக்கிக் கொள்கின்றனர்.

பின்னும் இவர்களின் இக்கர்வத்தினாலேயே நாற்பது நாட்கள் தொழுதவுடன் தம்மை இறைநேசச் செல்வர்களான வலிமார்களென்று எண்ணிக்கொண்டு வலிமார்களோடு தங்களை சமப்படுத்தி பேசத் தலைப்படுகின்றனர்.

மேலும் இறைநேசச் செல்வர்களான வலிமார்களையும் இஸ்லாமிய மார்க்கப் பேரறிஞர்களையும் பகிரங்கமாக நிந்தனை செய்யவும், மரியாதைக் குறைவாகவும் இளக்காரமாகவும் இவர்கள் பேத் தயங்குவதில்லை.

இவர்களில் சில அறிவிலிகள் ஒரிரு சில்லாக்கள் தப்லீ(க்)கில் போய் வந்ததும் தாங்கள்தான் வரஸத்துல் அன்பியா நபிமார்களின் வாரிசுகளென்று பகிரங்கமாக வாதிக்கவும் செய்கின்றனர். இனி நாயிபே ரஸூல் (ரஸூலின் பிரதிநிதி) வரஸத்துல் அன்பியா (நபிமார்களின் வாரிசுகள்) எனப்படுவோர் நிச்சயம் ஒருசிறந்த ஆலிமாக உயர்ந்த மார்க்கக் கல்வி ஞானம் வாய்க்கப் பெற்ற நபராக இருக்க வேண்டுவது மிக மிக இன்றியமையாத ஒன்று.

திடனாக உலமாப்பெருமக்கள் நபிமார்களின் வாரிசுகளாவர். ஆனால் ஒருக்காலும் தீனாருக்கோ, திர்ஹமுக்கோ வாரிசுகளாக மாட்டார்கள். (அதாவது நபிமார்கள் விட்டுச்சென்ற சொத்துக்கு வாரிசாக மாட்டார்கள், மாறாக நபிமார்கள் கொண்டுவந்த கல்விஞானம் போன்றவற்றுக்கு வாரிசுகளாவர்.) (ஆதாரம் : மிஷ்காத்)

ழாஹிர் மற்றும் பாத்தின் எனப்படும் வெளிரங்க அந்தரங்கமான ஆன்மிகத்தின் வகைகளான தன்மைகளைப் பற்றி அவற்றிற்குரிய வேறுபாடுகளின் அடிப்படையில் தெளிந்த ஞானத்துடன் மார்க்கத்தை வெளிப்படுத்தி வைக்கவும் மார்க்கக் கட்டளைகளான பிரச்சாரம் செய்யவும் (உலமாப்பெருமக்கள் நபிமார்களின்) வாரிசுகளாவர்.

(ஆதாரம் : மிர்காத்துல் மஃபாத்தீஹ்)



இனி இத்துனை கல்வி ஞானம் போன்ற சிறப்புகளை உலமாப்பெருமக்கள் பெற்றிருந்தாலும், பிறரை கட்டாயப்படுத்தவோ, நிர்பந்திக்கவோ அவர்களுக்கு அனுமதி கிடையாது.

நமது உள்ளங்களில் வெறுப்பேற்பட்டு விடக்கூடாதெனக் கருதி (பயான் செய்வதற்காக) அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் இடைவெளி விட்டு நாட்களை நிர்ணயம் செய்தனர் என்று இப்னு மஸ்வூத் ரளியல்லாஹு அன்ஹு அறிவிக்கின்றனர்.

(ஆதாரம் : புகாரீ ஷரீஃப்)

பயான்களில் மென்மையைக் கையாளுங்கள். கடுமை வேண்டாம். நன்மாராயம் கூறுங்கள். வெறுப்பை உண்டாக்காதீர்கள் என்று அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை கொண்டு ஹள்ரத் அனஸ் ரளியல்லாஹு அன்ஹு அறிவிக்கின்றனர்.

(ஆதாரம்: புகாரீ ஷரீஃப்)

இருப்பினும் மேற்படி தப்லீக் ஜமாஅத்தினர் மேற்கண்ட ஹதீஸுக்கு மாறாக கட்டாயப்படுத்துதல், வற்புறுத்ததுல் போன்றவற்றில் ஈடுபடுகின்றனர். உண்மையில் பாமர முஸ்லிம்கள்மீது இதில் எத்தகையத் தவறுமில்லை. எனினும் தவறு குழப்பவாதிகளான தீய கொள்கையினைச் சார்ந்த இந்த ஜமாஅத்தைச் சார்ந்த மௌலவிகளுடையதே!

இவர்களது இயக்கம் தப்லீக் என்னும் போர்வையில் ஈடுபடும் பாமர, மார்க்கக் கல்வியறிவற்ற முஸ்லிம்கள் தீமைகளையும் குழப்பங்களையும் பரப்பி வருகின்றனர்.

பாவம் ஒன்றும் தெரியாத சாதாரண முஸ்லிம்களுக்கு "அமீரே ஜமாஅத்" என்றும், "முபல்லிக்" மதப்பிரச்சாரகர் என்றும் பட்டம் கொடுத்து எப்படியெல்லாம் இஸ்லாமிய

சமூகத்தை பிளவுபடுத்தும் குழப்பதை உருவாக்கும் வேலை வாங்கப்படுகின்ற தென்பதை அவர்கள் அறியவில்லை.

அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் பதினான்கு நூற்றாண்டுகட்கு முன்னரே இக்குழப்பவாதிகள் பற்றி அறிவித்துச் சென்றுவிட்டனர்.

உலக முடிவு நாள் நெருங்கும்போது ஜனங்கள் அறிவிலிகளை 'அமீரே ஜமாஅத்' சமுதாயத் தலைவர்களாக ஆக்குவர். பின்னும் மார்க்க அறிஞர்களது ஸ்தானங்களை அறிவற்றவர் அபகரித்துக் கொள்வர். இவ்வாறு ஒரு குழப்பம் உருவாகும் என்ற கருத்தை நபிகளார் அறிவித்துள்ளனர்.

**நபிகளாரின் மற்றோர் ஹதீஸைப் பாருங்கள்.**

மக்கள் அறிவற்றோரை தங்களின் "அமீராக" தலைவராக்கிக் கொள்வர். இவர்களிடம் (மார்க்கச் சம்பந்தமான) கேள்விகள் கேட்கப்பட்டால் அவர்கள் மார்க்கக் கல்வி ஞானமின்றியே தீர்ப்பு வழங்குவர். இவர்கள் (அறிவற்றோர்) தாங்களும் வழிகெட்டு பிறரையும் வழி தவறச் செய்வர். (ஆதாரம்: மிஷ்காத்)

**இனி இந்த ஹதீஸைப் பற்றி மிஷ்காத்தின் விரிவுரையில்...**

ஜனங்கள் மூடர்களைத் தமது தலைவராக அதாவது கலீஃபா, காளீ., முஃப்தி, இமாம், முர்ஷித் (ஞானாசிரியர்) ஆக்கிக் கொள்வார்கள். அவர்களிடம் மார்க்கச் சம்மந்தமான கேள்விகள் ஏதேனும் கேட்கப்பட்டால் அவர்கள் கொஞ்சங்கூட மார்க்கக் கல்வியறிவின்றி தீர்ப்புச் செய்வார்கள். தாங்களும் வழிகேட்டை பின்பற்றி வழி கெடுவதுடன் (அதுதான் நேரான பாதை என்பதாக) பரப்பவும் செய்வார்கள். அதாவது பிறரையும் வழிகெடுப்பார்கள். ஆக, இத்தகைய அறியாமை ஏகதேசம் எங்கும் பரவி விடும்.

(ஆதாரம் : மிர்காத் ஷரஹு மிஷ்காத்)



இன்று தப்லீக் ஜமாஅத்தில் இதுதான் நடைபெற்றுக் கொண்டுள்ளது. இந்த அறிவிலிகள் எவர் கூறுவதையும் கேட்பதில்லை. இவர்கள் தங்களைத் தாங்களே பெரிய மௌலவி, முஃப்தி, இமாம் அல்லது ஷைகு என்பதாக எண்ணிக் கொண்டு ஹராம் ஹலால் என்று ஃபத்வா கொடுத்துக் கொண்டலைகின்றனர்.

இவ்வாறு சத்திய மார்க்க ஞானத்திற்குப் பகரமாக தப்லீக் ஜமாஅத்தின் அறியாமையும். அதன்வழி கெட்ட கொள்கைகளும் பரவிக் கொண்டே வருகின்றன.

ஒருக்கால் இப்படியெல்லாம் பிற்காலத்தில் ஏற்படுமெனக் கருதியோ என்னவோ, அமீருல் முஃமினீன் ஹள்ரத் உமர் ரளியல்லாஹு அன்ஹு அவர்கள் தமது ஆட்சிக் காலத்தில் ஒருமுறை ஷாம் தேசத்திற்குச் சென்றபோது "ஜாபியா" என்னுமிடத்தில் வைத்து ஒரு பேருரை ஒன்றை இவ்வாறு நிகழ்த்தினர்.

உங்களில் யார் திருக்குர்ஆனைக் கற்றுக் கொள்ள விரும்புகின்றாரோ அவர் "உபையிப்னு கஃபிடம்" செல்க! இனி யார் இஸ்லாமியக் கடமைகளைப் பற்றி அறிய விரும்புகின்றாரோ. அவர் ஜைத் இப்னு ஸாபித்திடம் செல்க! அடுத்து, உங்களில் யார் மார்க்கச் சட்ட நுணுக்கங்களைப் பற்றி தெரிந்து கொள்ள விரும்புகின்றாரோ, அவர் மஆத் இப்னு ஜபலிடம் செல்க! என்று கூறினர்.

அதாவது, யார் எந்தக் கலையில் தேர்ச்சியடைந்திருந்தாரோ அவரிடம்தான் அதைப்பற்றிக் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டுமெனவும். அவர் மட்டுமே அதற்குரிய விளக்கத்தைத் தர வேண்டுமெனவும், காலங்களில் நல்லகாலம் என்று வர்ணித்துக் கூறப்பட்ட (கைரல் கரூன்) நபித்தோழர்களது காலத்திலேயே நிர்ணயிக்கப்பட்டிருந்தது. அதுமட்டுமல்ல! நபிகளாரின் தோழர் பெருமக்களது

காலத்திலேயே உலமாப்பெருமக்களும், தீர்ப்பளிக்கின்ற முஃப்திகளும் இருக்க வேண்டிய இடத்தில் கண்டவர்களும் நுழைந்து மார்க்கப் பணிகளில் தலையிட அனுமதிக்கக் கூடாதென்பதில் ஹள்ரத் உமர் ரளியல்லாஹுஅன்ஹு அவர்கள் எத்துணை முன்னெச்சரிக்கையோடு இருந்துள்ளார்கள் என்பது நமக்கு மிக நன்றாகத் தெரிய வருகிறது.

சாதாரணமாக அவ்வப்போது (ஜனங்களிடையே ஏற்படும் பிணக்குகள் பற்றி) மார்க்கத் தீர்ப்புகள் வழங்கவும். மார்க்க விஷயங்களை விளக்கித் தரவும், உமர் ரளியல்லாஹு அன்ஹு அவர்களால் அனுமதி வழங்கப்பட்டிருந்தோர் ஒன்றும் சாதாரணமானவர்களல்ல. அவர்கள் இஸ்லாமிய கல்வித்துறைக்கே ஆதார வித்தாக விளங்கியவர்கள். நபிகளாரின் தோழர் பெருமக்களில் மிக மிகக் குறிப்பிடத்தக்க ஓர் ஸ்தானம் வகித்தவர்கள் அவர்கள்.

அவர்களில் ஹள்ரத் உஸ்மான் கனீ. ஹள்ரத் அலீ ஹள்ரத் அப்துற் றஹ்மான் இப்னு அவ்ப், ஹள்ரத் மஆத் இப்னு ஜபல். ஹள்ரத் அபீஹுரைரா, ஹள்ரத் அபூதர்தா மற்றும் ஹள்ரத் அபூமூஸா அஷ்அரி ரிள்வானுல்லாஹி தஆலா அலைஹிம் அஜ்மஈன் போன்றோராவர்.

என்னை ஈமான் கொண்டாரே! நன்கு கவனியுங்கள். காலங்களில் மிக நல்ல காலம் என்று வர்ணிக்கப்பட்ட காலமான நபித்தோழர்களான ஸஹாபாபெருமக்கள் வாழ்ந்த காலத்திலேயே இத்தனை முன்னெச்சரிக்கையும் கவனமும் மார்க்க விஷயத்தில் தேவைப்பட்டதெனில் இன்றுள்ள அறியாமை காலத்தில் மார்க்கக் கல்வித்தரம் மிகவும் பின்தங்கிப் போயுள்ள இன்றைய சூழ்நிலையில், மார்க்கக் கல்வி சிறிதும் இல்லாதவர்களெல்லாம் மார்க்கப் போதனை மற்றும் பிரச்சாரப் பணிகளில். தப்லீக்கில் ஈடுபடுகிறேனெனக் கூறி மார்க்கத்தின் காப்பாளர்களான உலமாப்பெருமக்களுடைய ஸ்தானங்களை நேர்வழி காட்டிச் செல்ல வேண்டியவர்கள் இருக்க வேண்டிய



இடத்தை ஆக்ரமிப்பதைத் தடுக்க வேண்டியது எவ்வளவு அவசியம்?

பின்னும் இந்த அறிவற்றோர் மூலமாக நபிகளார் அலங்கரித்த மிம்பர் மேடைக்கும், இஸ்லாமிய ஷரீஅத்துடைய கல்விக்கலை ஞானங்களுக்கும் நேரக்கூடிய கண்ணியக்குறைவை, அவமதிப்பை தடுக்க வேண்டுமல்லவா! மார்க்கக் கல்வியறிவற்ற பாமரர்களுக்கெல்லாம் முபல்லிகே இஸ்லாம் இஸ்லாமியப் பிரச்சாரகர் என்று பட்டம் கொடுத்து உலோகர் முன்முறையாக மார்க்கக் கல்வி கற்ற உலமாப் பெருமக்களையும் ஆன்றோர்களையும் மட்டந்தட்டி மரியாதைக் குறைவாகப் பேசி சங்கடப்படுத்துதல் எத்துனை வேதனைத் தரத்தக்க ஒன்றென்பதை சிந்தித்துப் பாருங்கள்.

**மொழிபெயர்ப்பாளரின் குறிப்பு:**

இதற்குப் பயந்து கொண்டே இன்று நம்மிடையேயுள்ள பேஷ் இமாம்களும், மத்ரஸாக்களின் ஆசிரியப் பெருந்தகைகளும் தப்லீக் ஜமாஅத்தின் அமீர் சொல்கிறபடியெல்லாம் ஆடுகின்றனர்.

இனி அந்த அமீரை விரோதித்துக் கொண்டால் அவர் வகிக்கும் இமாமத் வேலையும், ஆசிரியர் பதவியும் பறிபோய்விடும். முத்தவல்லி, கமிட்டியார் போன்றோரை **முபல்லிக்** என்றும், **ரஹ்பர்** என்றும், **முத்தகல்லிம்** என்றும் பட்டம் சூட்டியதும் அவர்களும் தம்மை மார்க்கத்தின் மிகப்பெரும் காப்பாளரென்று எண்ணிக் கொண்டு தப்லீக்கை எதிர்க்கும் அல்லது அதற்கு ஒத்துழைப்புத்தர மறுக்கும் பேஷ் இமாமை, அல்லது ஆசிரியரை ஒரு கை பார்த்து விடுகின்றனர்.

இதனால் தமது பிழைப்பை காப்பாற்றிக் கொள்வதற்காக ஏழுவருடம் கலாசாலையில் பயின்று மௌலவி பட்டம் பெற்று வந்த உலமாப்பெருமக்கள் பேஷ் இமாம் போன்றோரின் முன்னிலையிலேயே தப்லீக்கினர்

அவிழ்த்துவிடும் சரடுகளுக்கெல்லாம் அவர்கள் ஒத்து ஊத வேண்டிய அல்லது அமைதியாக ஒத்துப் போகவேண்டிய அவலநிலைக்கு ஆளாக்கப்பட்டு வருகின்றனர்.

பின்னும் தங்களுக்குரிய மிம்பர் மேடையையும், பயான் செய்யக்கூடிய உரிமையையும், முஸல்லாவையும், இமாமத் செய்ய வேண்டிய பொறுப்பையும் பேஷ் இமாம்கள். இந்த தப்லீக்கினரது ஆக்கிரமிப்புக்கு விட்டுவிட்டு விழி பிதுங்க நிற்பது பார்க்கப் பரிதாபகரமான ஒரு நிகழ்ச்சியாகும்.

இனி நேர்மை நீதியோடு உங்களின் ஈமானுடைய கண்ணைக் கொண்டு நோக்குவீர்களேயானால், உங்களுக்கு மற்றுமோர் உண்மையும் தெளிவாகும் அதாவது மேற்படி தப்லீக் ஜமாஅத்தில் சேர்ந்து போபால், டில்லி, மேவாத் என்று சில ஊர்களுக்கு சில்லா கஷ்த்து போய் வந்தவுடன், அவர்கள் தம்மை பெரிய ஸஹாபாக்களைப் போன்றும், அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை தமது சகோதரர் போன்றும் ரஸூலைப் பற்றி **“அவர்கள் ரஸூலாக இருந்தனர். நாம் அவ்வாறு இல்லை இந்த ஒரு வித்தியாசத்தைத் தவிர நமக்கும் ரஸூலுல்லாஹ்வுக்குமிடையே வேறு எந்தவித வேறுபாடும் கிடையாதென்றும்,”**

மேலும் தப்லீக்குடைய வேலையை நபிகளார் எவ்வாறு செய்து வந்தனரோ. அதேபோன்றுதான் நாமும் செய்து வருகிறோமென்று ஆலிமைப் போல் வேடந்தரித்துள்ள தப்லீக் ஜமாஅத்தின் பாமரர் கூறுவதைக் கேட்க நேரிடும்போது உண்மையான இஸ்லாமியரது உள்ளம் பரிதவித்துப் போவதுடன், அவரது ஈமானென்னும் விசுவாசம் பதறுகின்றது.

இவ்வாறு நபிமார்களையும் நபித்தோழர்களையும் தூஷித்து அவமரியாதை செய்யுமளவிற்கு இவர்களுக்குத் துணிச்சல் வந்ததற்கு இவர்களது அறியாமைதான் காரணம்



என்றாலும். உண்மையில் தப்லீக் ஜமாஅத்தின் மௌலவிகள் தமது நூல்களில் மேற்படி நபிமார்கள், ஸஹாபாக்கள் போன்றோரைப் பற்றி எழுதி அச்சிட்டு வெளியிட்டுள்ள ஈமானை கரித்துவிடக் கூடிய தீய கொள்கைகள் தான் காரணமாகும்.

மேலும் இந்த தப்லீக்கினர் இவர்களது மௌலவிகளால் தொகுக்கப்பட்ட நூல்களை மட்டுமே தங்களுக்கு மத்தியில் வாசித்து வருவதைக் காணலாம். மேலும் இந்த ஜமாஅத்தைச் சார்ந்த முபல்லிகென்னும் பிரச்சாரகர்களது கல்வி ஞானம் போன்றவையனைத்தும் மேற்குறிப்பிட்ட இவர்களின் மௌலவிகளின் நூல்களுக்குள்ளேயே முடங்கிப்போய் விட்டதென்று சொன்னால் அது மிகையல்ல.

இனி இந்த ஜமாஅத்தின் தலைவர்களால் எழுதப்பட்டுள்ள நூற்களைப் பற்றி இன்ஷா அல்லாஹ் இரண்டாம் பாகத்தில் நாம் விவரிப்போம். ஆனால் தற்போது நாம் எடுத்துக் கொண்டுள்ள தலைப்பு பாமரர்கள் மக்களுக்கு நேர்வழி காட்டுதல் போதனை பிரச்சாரப் பணிகள் தப்லீக் பணியில் ஈடுபடுவதன் உண்மை நிலை அதனால் ஏற்படக்கூடிய தீய பின் விளைவுகளைப் பற்றியதாகுமாதலால்,

இஸ்லாமியப் பிரச்சாரகர் முபல்லிக் எனப்படுவோர் உண்மையில் ஆன்மிக மற்றும் அகமிய நோய்களுக்குரிய வைத்தியராயிருக்க வேண்டியது அவசியமென்பதை அறிவார்ந்த இஸ்லாமியப் பெருமக்கள் ஒவ்வொருவரும் நன்கறிவர். இன்னும் போலி டாக்டர்களை சமுதாயத்தில் உலவ விடுவது மக்களை எப்படிப்பட்ட பேராபத்தின் படுகுழியில் கொண்டு போய் தள்ளிவிடுமென்பது நிதர்சனமான உண்மையோ.....?

அதேபோன்று தான் இந்த வேஷதாரிகளான தப்லீக் ஜமாஅத்தினரிடம் பிரச்சாரப் போதனைப் பணிகளான தப்லீக்குடைய வேலையை ஒப்புவிப்பதாகும். இவ்வாறு

*செய்வதால் உண்மையான சமூகச் சீர்திருத்தப் பணிகளுக்குரிய ஜனாஸாவைத் தூக்க வேண்டிய அவல நிலை தோன்றிவிடும்.*

*மேலும் போலி டாக்டர்களால் மக்களில் ஒரு சாராருடைய உயிருக்கும் உடலுக்கும் தான் பேராபத்து நிகழும். ஆனால் இந்த வேஷதாரிகளால் ஒரு சமுதாயத்தின் ஈமானுக்கும் அகீதாவென்னும் கொள்கைக்கும் பேராபத்து நேர்ந்துவிடும்.*

*இனி எப்போது இஸ்லாமிய சமூகத்தினரது ஈமானுக்குக் கெடுதல் ஏற்பட்டு விடுகின்றதோ, அப்போது இஸ்லாமிய சமூம் முழுவதுமே அழிந்து நாசமாகிப் போய் விடுமென்பதை மறவாதீர்கள்.*

### கேள்வி: 2

***தப்லீக் ஜமாஅத்தைச் சார்ந்தோர் வஹ்ஹாபிகளென்பதாகச் சிலர் கூறுவதைப் பற்றி தங்களின் அபிப்பிராயமென்ன? மேலும் அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாஅத்தின் கொள்கைக்கும் வஹ்ஹாபியக் கொள்கைக்குமிடையே உள்ள வித்தியாச உண்மை நிலை என்ன? இனி சிலர் மீலாத் விழா நடத்துதல், ஸலவாத்து மற்றும் ஸலாம் ஓதுதல், நேர்ச்சை ஃபாத்திஹா போன்ற ஃபரஇய்யான (இஸ்லாமிய அனுஷ்டானப் பிரிவுச் சட்டங்கள்) விஷயங்களில்தான் வேறுபாடுள்ளதே தவிர, மற்றபடி இஸ்லாமிய மார்க்கத்தின் மூலக்கொள்கை போன்றவற்றில் இரு சாராருக்குமிடையே எந்தவித வேறுபாடுகளும் கிடையாதென்று கூறுகின்றார்களே! இது எவ்வளவு தூரம் உண்மை? என்பது பற்றி தயைகூர்ந்து சற்றுவிரிவான ஆதாரங்களைக் கொண்டும் நூற்களின் அடிப்படைகளைக் கொண்டும் விளக்கமாகப் பதிலளிக்குமாறு கேட்டுக் கொள்கிறேன்.***

***அல்ஹாஜ் ஹகீம் சையத் கௌஸ் முஹ்யித்தீன் காதிரி ஷாதுலி***

*நெ. 22, பென்ஷன் லைன்,*

*வண்ணாரப்பேட்டை, சென்னை 21.*



### பதில்: 2

*தப்லீக் ஜமாஅத்தைச் சார்ந்தோர் அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாஅத்தினரா? அல்லது வஹ்ஹாபிகளா? என்பது பற்றி இந்நூலை நீங்கள் உள்ளே நுழைந்து படிக்கும்போதே புரிந்து கொள்வீர்கள்.*

*இனி ஸுன்னத் வல் ஜமாஅத்தினருக்கும் வஹ்ஹாபி களுக்குமிடையேயுள்ள வேறுபாடுகள் நிச்சயமாக வெறுமனே மேலோட்டமான விஷயங்களைச் சார்ந்ததல்ல. மாறாக எவராலும் மறுக்க முடியாத மார்க்கத்துடைய அடிப்படை விஷயங்களில் அமைந்துள்ள ஓர் உண்மையாகும்.*

*இல்லையில்லை! வஹ்ஹாபிகளுக்கும் ஸுன்னத்வல் ஜமாஅத்தாருக்குமிடையே உள்ள வேறுபாடுகள் மிகமிகச் சாதாரணமான மேலோட்டமான விஷயங்களில் தான் என்று எவராவது கூறுவார்களேயாயின்:*

*ஒன்று, அவர்; மார்க்கக் கல்வி மற்றும் இஸ்லாமிய வரலாற்றைப் பற்றி கொஞ்சங்கூட தெரியாத உலகாதாயரான உலகாசைக் கொண்டவராயிருப்பார்.*

*இல்லையெனில், தெரிந்து கொண்டே இஸ்லாமிய சமூகத்தின் கண்களுக்கு மறதியென்னும் திரையிட்டு தமது நோக்கத்தை மட்டும் நிறைவேற்றிக் கொள்ளும் ஒரு சுயநலமாயிருப்பார்.*

*மேலும் மீலாத் ஷரீப், ஸலவாத்து ஸலாம் ஓதுதல், நேர்ச்சை, ஃபாத்திஹா, உரூஸ், கௌஸுநாயகம் பாத்திஹா போன்றவை இஸ்லாமிய மார்க்கத்தில் அனுமதிக்கப்பட்டவைகளா? இல்லையா என்ற கருத்து வேறுபாடு ஸுன்னத்வல் ஜமாஅத்திற்கும் வஹ்ஹாபிகளுக்குமிடையே இருந்து வருவதென்னவோ உண்மைதான்.*

ஆனால் காலாகாலத்திற்கும் இஸ்லாமிய சமூகத்தை என்றுமே ஒருங்கிணைய முடியாத அளவிற்கு இரு துண்டாகப் பிளக்கக் கூடியவைகளல்ல மேற்கண்ட வேறுபாடுகள், இன்னும் இவ்விரு சாராரையும் பிரிக்கக்கூடிய அளவிற்கு மேற்கண்டவை அடிப்படைக் காரணமுமல்ல.

மாறாக "தௌஹீத்", "ரிஸாலத்" எனப்படும் ஏகத்துவம் மற்றும் திருத்தூதுத்துவம் என்னும் அடிப்படையான இஸ்லாமிய மார்க்கத்தின் மூலாதாரக் கொள்கையிலிருந்தே ஸுன்னத் வல் ஜமாஅத்தினருக்கும் வஹ்ஹாபிகளுக்குமிடையே கருத்து வேறுபாடு தொடங்கி விடுகின்றது.

ஈமானின் அங்கமாயும். இஸ்லாமிய மார்க்கத்தின் அடிப்படை தேவையாயும் ஸுன்னத் வல் ஜமாஅத்தினரால் கருதப்படுகின்ற சில கொள்கைகள் செயல்கள் நஜ்தீ வஹ்ஹாபிகளால் ஷிர்க்கெ (இணை வைத்லெ)ன்று கருதப்பட்டு வருகின்றன.

இனி, இதேபோன்ற ஸுன்னத்வல் ஜமாஅத்தின் கொள்கைக் கோட்பாடுகளுக்கு முரணானவையெனவும், குஃப்ரென்னும் இறை மறுப்பெனவும் கருதப்படும்சில கொள்கைகள், செயல்கள் நஜ்தீ வஹ்ஹாபிகளால் தௌஹீதுக்குரிய அடிப்படைக் கொள்கையாகக் கருதப்பட்டு வருகின்றன.

இதேபோன்று ஈமான் சம்பந்தப்பட்ட, இஸ்லாமியக் கொள்கை பற்றிய பல்வேறு வகையான கருத்து வேறுபாடுகள் இருபிரிவாருக்குமிடையே இருப்பதோடன்றி, மற்றோர் அதி முக்கியம் வாய்ந்த, இருவரையும் பிரிக்கக்கூடிய விஷயம் யாதெனில்,

நபிமார் வலிமார்களை நேசிப்பதும், அவர்களுக்கு கண்ணியமளிப்பதுமாகும். (அலைஹிமுஸ்ஸலாம் வ ரஹ்மத்துல்லாஹி அலைஹிம்).



அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாஅத்தாரிடம் நபிமார் வலிமார் போன்றோரை நேசிப்பதும், அவர்களுக்குக் கண்ணியமளிப்பதும் ஈமானின் ஒரு அங்கமாக, மார்க்கத்தின் மூலாதாரக் கொள்கைகளில் ஒன்றாக கருதப்படுகின்றது.

ஆனால் இதனை வஹ்ஹாபிகள் தௌஹீதுக்கு மாற்றமான ஒன்றெனவும், ஷிர்க்கென்னும் இணைவைத்தலென்றும் கூறி வருகின்றனர். மேலும் இதற்கு நேர்மாறாக ஸுன்னத்வல் ஜமாஅத்தினரால் நபிமார், வலிமார் போன்றோரை தூஷித்து அவமரியாதைப் படுத்துதல் ஈமானை அழிக்கச் செய்யும் என்பதாகக் கருதப்படுகின்றது. ஆனால் நபிமார், வலிமார் போன்றோரை தூஷிப்பதும் அவமரியாதை செய்வதும் வஹ்ஹாபிகள் மத்தியிலே தௌஹீதைப் பூரணத்துவப்படுத்தும் ஒரு செயல் என்பதாகக் கருதப்படுகின்றது.

அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாஅத்தினர் நபிமார்கள், ஸஹாபாக்கள் மட்டுமல்ல! கௌஸ், காஜா போன்ற வலிமார்களைக் கூட தம்மைப் போன்ற ஒரு சாதாரண மனிதரென ஒருபோதும் எண்ணமாட்டார்கள். ஆனால் நஜ்தீ வஹ்ஹாபிகளோ, அண்ணலெம் பெருமான் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களையும் தம்மைப் போன்ற ஒரு சாதாரண மனிதர் தானென்று மிக உறுதியாக நம்புகின்றனர்.

அடுத்து ஸுன்னத் வல் ஜமாஅத்தினர் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை நேசிப்பதும், அவர்களால் காட்டித் தரப்பட்ட வழியைப் பின்பற்றுவதும் அவர்களுக்குக் கண்ணியமளிப்பதும் ஈமானின் ஒரு அங்கமென்றும். அதுதான் தௌஹீதுக்குரிய ஓர் அறிகுறியெனவும் கருதுகின்றனர்.

ஆனால் வஹ்ஹாபிகளோ, அண்ணல் நபிகளாரை கேவலப்படுத்தாத வரை அவர்கள்மீது களங்கம் கற்பிக்காதவரை

ஈமான் முழுமைபெறாது, உண்மையான தௌஹீத் பூரணத்துவத்தைப் பெறாதென உறுதியாக நம்புகின்றனர்.

ஆதலால் வஹ்ஹாபிகளது மேற்கூறப்பட்ட கொள்கையைப் பற்றியும், அவர்களின் ஈமான் விசுவாசம் பற்றியும் அவர்களது நூல்களிலிருந்தே அவற்றுக்குரிய ஆதாரங்களை இனி அடுத்தடுத்து வரப்போகும் பக்கங்களில் காணலாம். அதற்கு முன்னர் அஹ்லுஸ் ஸுன்னத்வல் ஜமாஅத்தினர்களது கொள்கைக்குரிய சில ஆதாரங்களை இப்போது பாருங்கள்.

**இறைவன் தனது திருமறையில்,**

(நபியே) திடனாக நாம் உம்மை சாட்சியாளராயும், நன்மாராயம் கூறுபவராயும், அச்சமூட்டி எச்சரிக்கை செய்பவராயும் அனுப்பினோம். எனவே (ஓ! மனிதர்களே!) நீங்கள் அல்லாஹ்வையும் அவனது ரஸூலையும் விசுவாசியுங்கள். மேலும் (இந்த நபியை) கண்ணியப்படுத்துங்கள். இன்னும் (இறைவனது) பரிசுத்தத் தன்மையை காலையும் மாலையும் தஸ்பீஹ் செய்யுங்கள்.) அல்குர்ஆன் : 48 - 8 முதல் 9 வரை

இவ்வசனத்தில் இறைவன் நபிகளாரை சங்கையாக்கி கண்ணியப்படுத்த வேண்டுமெனக் கட்டளை பிறப்பித்துள்ளான். அதற்கேற்றாற்போல் நபித்தோழர் பெருமக்களும் நடந்து காட்டினார். அதாவது நபிகளாரின் தொடர்பைப் பெற்ற ஒவ்வோர் பொருளையும் அவர்கள் கண்ணியப்படுத்தியுள்ளனர்.

ஹள்ரத் உமர் பாரூக் ரளியல்லாஹு அன்ஹு அவர்களோ, அண்ணலாரிடம் எவரேனும் இம்மியளவு கண்ணியக் குறைவாகப் பேசுவதாகத் தோன்றினாலும் உடனே அவரை தம் வாளையுருவி வெட்டவும் தயாராகி விடுவார்கள்.

ஈதென்ன! ஹள்ரத் உமர் ரளியல்லாஹு அவர்களுக்கு ஃபாரூக் என்னும் பட்டம் நபிகளாரால் வழங்கப்பட்டதே



அண்ணலாரின் தீர்ப்பை ஏற்க மறுத்த முஸ்லிமின் வடிவிலிருந்த ஒரு முனாபிக்கை (நயவஞ்சகனை) வெட்டிக் கொன்ற தினத்தன்று தானே!

இதேபோன்று தான் ஹள்ரத் உஸ்மான், ஹள்ரத் அலீ (ரளியல்லாஹு அன்ஹுமா) மற்றும் அனைத்து நபித்தோழர் பெருமக்களின் நிலையும் அமைந்திருந்தது.

அது மட்டுமல்ல! அண்ணலார் உளூச் செய்து தமது வாயிலிருந்து உமிழும் நீரைக்கூட அவர்கள் கீழே சிந்த விடுவதில்லை. பெருமானார் (ஸல்) அவர்கள் ரோமம் தரித்துக் கொண்டால் அதனையும் இவர்கள் பாக்கியமிகும் பர(க்)கத்துப் பொருந்திய பொருளாக தங்களிடம் பத்திரப்படுத்திக் கொள்வர்.

அத்துடன் ஹள்ரத் அமீன் முஆவியா ரளியல்லாஹு அன்ஹு அவர்களிடம் அண்ணலாரின் பாக்கியம் பொருந்திய நகங்கள் தபருக்காக இருந்தது. அதனை முஆவியா ரளியல்லாஹ் அவர்கள் தமது இறப்பின்போது தம் கண்களில் அந்நகங்களை வைத்து தம்மை நல்லடக்கம் செய்ய வேண்டுமென இறுதி உபதேசம் செய்தனர்.

இனி நபித்தோழர்களுக்கடுத்து தாபியீன்கள், தபவுத்தாபியீன்கள், இமாம்கள், முஜ்தஹிதீன்கள். காமிலான வலிமார்கள், ஸாலிஹீன்கள், உலமாப் பெருமக்கள் போன்றோரின் வழிமுறைகளும் இவ்வாறே அமைந்திருந்தன.

இமாம் மாலிக் ரஹிமஹுல்லாஹு அவர்கள் மதீனாவில் மார்க்கச் சட்டங்களை (ஃபிக்ஹு) மற்றும் ஹதீஸ் கலையை அங்கேயேயிருந்து கற்பித்துக் கொண்டிருந்தவர்கள். தமது வாழ்நாள் முழுவதும் அங்கேயே வாழ்ந்து மறைந்தவர்கள்.

அவர்கள் அண்ணலாரின்மீது கொண்டிருந்த நேசம், கண்ணியத்தின் காரணமாக ஒருபோதும் மதீனாவிற்குள்

மிதியடி அணிந்து சென்றது கிடையாது. இன்னும் "லா உக்ஸிமு பிஹாதல் பலத்" "எந்த நகரில் நீர் வசிக்கின்றீரோ" என்பதாக இறைவன் சத்தியம் செய்து அண்ணலாரை கண்ணியப்படுத்தினானோ.

அப்புனித மிக்க நகரின் மண்ணை தம் குதிரையின் குளம்புகளுக்குக் கீழே மிதித்து அவமரியாதை செய்வதாயென்று இமாம் மாலிக் ரளியல்லாஹு அன்ஹு அவர்கள் மதீனா நகருக்குள் ஒருமுறைகூட குதிரையின் மீதேறிச் சென்றதேயில்லை. ஏன்? மதீனா நகரின் எல்லைக்குள் ஒருபோதும் இமாமவர்கள் மல ஜல உபாதைக்குக்கூட சென்றதில்லை.

அடுத்து ஹஜ்ரத் இமாம் அபூயூஸுஃப் ரஹ்மதுல்லாஹி அலைஹியவர்களைப் பற்றி மற்றுமோர் சம்பவத்தைப் பாருங்கள்.

ஒருமுறை கலீஃபா ஹாரூன் ரஷீத் அவர்கள் அளித்த விருந்தொன்றில் சுரைக்காய் சமைத்து அங்கு உணவருந்திக் கொண்டிருந்தோருக்குப் பரிமாறப்பட்டது. அப்போது உணவருந்திக் கொண்டிருந்தவர்களில் ஒருவர் அண்ணல் நபிகளாருக்கு சுரைக்காய் மிக விருப்பமான ஒன்றெனச் சொல்ல, அங்கிருந்த மற்றோர் நபர் எனக்குச் சுரைக்காய் பிடிக்காதென்று சொன்னார்.

இதனைக் கேட்டுக் கொண்டிருந்த இமாம் அபூயூஸுஃபவர்கள், சட்டென்று தமது வாளை உருவிக் கொண்டு, எனக்குச் சுரைக்காய் பிடிக்காதென்று சொன்னவரை நோக்கி,

அண்ணலாரின் கண்ணியத்திற்கு மாசு கற்பித்த நீர்முர்தத் (மதம் கெட்டவர்) ஆகிப் போனீர். நபிகளாரின் விருப்பத்திற்கு மாறாக உனது விருப்பத்தை வெளிப்படுத்தியதால் உன்னை



வெட்டுவது வாஜிபென்று சொல்ல, அவர் தௌபா செய்ததால், உயிர் பிழைத்தார்.

**இறை வேதமான திருமறையில்....**

"மா கான முஹம்மதுன் அபா அஹதின் மிர்ரிஜாலிகும்" உங்களில் எவருக்கும் முஹம்மத் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) தந்தையாயிருக்கவில்லை என்னும் வசனத்திற்கு தஃப்ஸீர் எழுதும்போது ரூஹுல் பயான் தப்ஸீரின் ஆசிரியர் ஒரு நிகழ்ச்சியினை சுட்டிக் காட்டுகின்றனர்.

இந்திய நாட்டை ஆண்டபேரரசர்களில் சுல்தான் மஹ்மூத் கஜ்னவியும் ஒருவர். அவருக்கு "அயாஜ்" என்ற பெயரில் ஓர் அடிமை இருந்தார். இந்த அயாஜுக்கு ஒரு மைந்தன் இருந்தான். அச்சிறுவனின் பெயர் முஹம்மத் என்பதாகும்.

இஸ்லாமியப் பேரரசரான ஸுல்தான் மஹ்மூத் கஜ்னவி இச்சிறுவனை அழைக்குந்தோறும் மிக்க மரியாதையுடனும், கண்ணியத்தோடும் "முஹம்மத் இங்கே வா" என்றழைப்பது வழக்கம்.

ஒருமுறை மாமன்னர் இச்சிறுவனின் பெயரைக் கூறி அழைப்பதற்குப் பதிலாக "அயாஜுடைய மகனே!" இங்கே வா! என்றழைக்க... இதுகேட்ட இச்சிறுவனின் தந்தை அயாஜ்,..

மாமன்னரே! எனது மைந்தன் என்ன தவறு செய்துவிட்டான். எப்போதுமே அவனது பெயரைக் கூறி அழைக்கும் தாங்கள் இன்று அவ்வாறு அழைக்காது அயாஜுடைய மகனே! என்று விளிப்பதன் காரணம் யாது? என்று வினயமாகக் கேட்டார்.

அதற்கு மாமன்னர், தவறு ஏதும் நிகழவில்லை அயாஜே! உனது மைந்தனின் பெயர் இருலோக ரட்சகர் நபிகள் பிரானின் பெயராயிருப்பதால் அப்புனிதமான பெயரை நான் ஒருபோதும்

உளூவின்றி உச்சரித்ததே கிடையாது. இன்று நான் உளூவின்றி இருந்ததால் தான் அப்பெயரைச் சொல்லி உமது மைந்தனை அழைப்பதற்குப் பதிலாக அயாஜுடைய மகனே! என்றழைத்தேன் என்று விளக்கம் தந்தனர்.

இன்னும் இதுபோன்று அநேக சம்பவங்கள் நமது முன்னோர்களது காலந்தொட்டு இன்றுவரை அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாஅத்தினரால் நிகழ்ந்து கொண்டிருப்பதன்றி. இன்றைக்கும் அவை கடைபிடிக்கப்பட்டு வருகின்றன.

ஆனால் இதற்கு நேர்மாறாக நஜ்தீ வஹ்ஹாபிகள் மரியாதை செய்வதை விடுத்து அவமரியாதை செய்வதும். கண்ணிய மளிப்பதைவிட்டு, நிந்திப்பதும், இளக்காரம் செய்வதும் இவர்களின் வழக்கமாயிருக்கின்றன.

ஒருமுறை நபிகளாரின் சங்கைமிக்க சன்னிதானத்தில் குறிப்பிடத்தக்க நபித்தோழர்களில் ஓரிருவர் உரத்துப் பேசிய போது, இறைவன் உடனே ஒரு திருவசனமொன்றை தனது மாமறையில் இவ்வாறு அருளினான்.

விசுவாசிகளே! உங்களின் சப்தத்தை நபியவர்களின் சப்தத்திற்கு மேல் உயர்த்தாதீர்கள். இன்னும் நீங்கள் ஒருவர் மற்றவருடன் பேசிக் கொள்வதைப் போன்று உங்கள் நபியிடம் உரையாடாதீர்கள். இல்லையெனில் உங்களின் நற்கிரியைகள் அழிந்து போய்விடும். இன்னும் அதனை நீங்கள் அறியாமாட்டீர்கள். (அல்குர்ஆன் 4, 9, 2)

**இவ்வசனம் இறங்கிய காரணம்பற்றி புகாரீ ஷரீஃபில்**

அல்லாஹ்! அல்லாஹ்!! ஹள்ரத் அபூபக்கர் ஸித்தீக் மற்றும் உமர் பாரூக் ரளியல்லாஹு அன்ஹுமாவைப் போன்ற பெரும்பெரும் தலைசிறந்த நாயகத் தோழர் பெருமக்கள்கூட, அண்ணல் நபிகளாரின் முன்பு குரலைச் சற்று உயர்த்தித்தான் பேசினார்கள்.



இதில் நபிகளாரின் குரலைவிட இவர்களின் குரல் சற்றேனும் உயருமாயின். அபூபக்கரின் 'ஸித்தீக்' பட்டமோ, உமரின் 'பாரூக்'பட்டமோ எதுவும் நிலைக்காது. அதுமட்டுமல்ல! அவர்களுக்குத் தெரியாமலேயே அவர்களின் நற்கிரியைகளனைத்தும் அழிந்து போய்விடும்.

(ஆதாரம்: புகாரீ - பாகம் 2, பக்கம் 718)

இதில் கவனிக்கத்தக்க முக்கியமான விஷயம் யாதெனில், எத்துனை, சிறப்புமிக்க நபித்தோழராயிருந்தாலும் சரி! தனது ஹபீபாகிய பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் முன்னால் உரத்துப்பேசியது இறைவனுக்குப் பொறுக்கவில்லை.

மாறாக, உரத்துப் பேசுபவர் எவராக இருந்தாலும் அவர்களின் நற்கிரியைகளை எல்லாம் அழித்துவிடுவேன் என்பதாக இறைவன் அச்சமூட்டி எச்சரிக்கை செய்கின்றானெனில்....

நம்போன்ற சாதாரண நிலை வகிப்போர் அந்த சங்கைக்குரிய நபிகளாரை தகாத வார்த்தையும், கண்ணியத்தைக் குலைக்கும் பேச்சையும் பேசினால் என்ன கதி ஏற்படும்?

**பிரிதோரிடத்தில் அல்லாஹ் தனது மாமறையில்,....**

**விசுவாசிகளே! ரஸூலை நீங்கள் அழைக்கும்போது அவர்களை நோக்கி 'ராஇனா' என்று சொல்லாதீர்கள். இன்னும் 'உன்ழுர்னா' என்று சொல்லுங்கள். இன்னும் (உங்களுக்கு ஏவப்படும் காரியத்தைக் குறித்து) கேளுங்கள். மேலும் நிராகரிப்போருக்கு நோவினை தரத்தக்க வேதனையுண்டு.**

**(அல்குர்ஆன் 2 - 104)**

என்று கூறுகின்றான். இனி இவ்வசனம் இறக்கியருளப்பட்டதன் காரணத்தைப் பாருங்கள்.
அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் தமது தோழர் பெருமக்களுடன் உரையாடும்போது. நபிகளார்

சொல்லும் வார்த்தை அவர்களுக்குப் புரியாவிட்டால், அதனைத் திரும்பச் சொல்லுங்கள் யாரஸூல்லாஹ்! என்று கூறுவதற்குப் பதிலாக 'ராஇனா யாரஸூலல்லாஹ்' என்று கூறுவது வழக்கம். அதாவது எங்களை சற்று கவனியுங்களேன்; எங்களுக்குச் சரிவர விளங்கவில்லை. மறுபடியும் கூறுங்கள் என்று பொருள்படும்வகையில் கூறுவர்.

இங்கு 'ராஇனா' என்பதன் அர்த்தமானது, ரிஆயத் செய்தல் அதாவது, கவனித்தல், கண்காணித்தல், பாதுகாத்தல் என்பதாகும்.

இனி யூதர்கள் பெருமானாரிடம் பேசும்போது, அவர்களும் மேற்படி நபித்தோழர்கள் கூறியது போன்றே 'ராஇனா' என்ற சொல்லை அவர்கள் பயன்படுத்துவது வழக்கம். எனினும் அச்சொல்லை அவர்கள் தீய எண்ணத்தோடு கூறினர். காரணம் யூத மொழியில் 'ராஇனா' என்னும் பதத்துக்கு ஒருவகை வசைச்சொல் அதாவது திட்டுகின்ற பொருளாகும். இதனையவர்கள் மனதில் மறைத்துக் கொண்டு பெருமானாரிடம் 'ராஇனா' யாரஸூலல்லாஹ் என்று கூறியதைப் புரிந்து கொண்ட இறைவன் தனது திருமறையில் மேற்கண்ட வசனத்தை இறக்கியருள்வதைக் கொண்டு,

தனது தூதரின் திருமுன் மறைமுகத்தில் வசைப்பொருளைத் தருகின்ற 'ராஇனா' என்ற சொல்லைப் பயன்படுத்துவதையே ஹராமாக்கி விட்டான். அதற்குப் பதிலாக 'உன்ழுர்னா' என்றழையுங்கள் என்றும் கட்டளைப் பிறப்பித்துவிட்டான். இங்கு 'உன்ழுர்னா' என்னும் பதத்திற்கு அர்த்தமானது, உங்களின் கடைக்கண் பார்வை எங்கள்மீது உண்டாவதாக! என்பதாகும்.

அதன்றி, மீண்டும் மீண்டும் எனது தூதரை வினவாதிருக்க வேண்டி அவர்கள் சொல்வதை கவனத்துடன் கேட்டுக் கொள்ளுங்கள் என்றும் கட்டளை பிறப்பித்தான்.



## மறந்துவிட வேண்டாம்!

நன்கு நினைவில் நிறுத்திக் கொள்ளுங்கள்! நாயகத் தோழர்களில் ஒருவர்கூட 'ராஇனா' என்ற சொல்லை தீய எண்ணத்தோடு உச்சரிக்கவில்லை. அத்தோடு 'ராஇனா' என்னும் பதத்துக்கு அரபு மொழியில் வசைச் சொல்லை பிரதி பலிக்கின்ற அர்த்தமும் கிடையாது.

இருப்பினும் 'ராஇனா' என்ற சொல்லை எவருமே நபிகளார்முன் பயன்படுத்தக் கூடாதென இறைவன் தடையிட்டு விட்டானே! இது ஏன்?

காரணம், யூதர்கள் இச்சொல்லைக் கொண்டு பெருமானாரின் கண்ணியத்திற்கு அவர்களின் மகத்துவத்திற்கு மாசு கற்பிக்க எண்ணியது தான். அதுவும் மறைமுகமாக.

ஆதலால் அல்லாஹ் தனது ஹபீபாகிய முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை மறைமுகமாகக்கூட, அவர்களின் மகத்துவத்திற்கு மாசு கற்பிக்கப்படுவதை சகிக்க மாட்டான். இங்கு அந்த 'ராஇனா' என்ற சொல்லை நல்லெண்ணத்தைக் கொண்டு சொன்னாலும் சரிதான்! அப்போதும் அது ஹராமா ஒன்றுதான்.

அல்லாஹ்வின் அமைப்பும் அவனது விருப்பமும் இவ்வாறிருக்க, ஒருவர் வேண்டுமென்றே நபிகளாரின் மகத்துவத்திற்கு மாசு கற்பிக்கின்ற வகையில், அவர்களின் கண்ணியத்தைக் குலைக்கின்ற வண்ணம், மிகக்கெட்ட சொற்களை சொல்வதுடன். அதனை எழுதி அச்சிட்டு வெளியிடுகின்றாரெனில், அவர்மீது இறைவன் உடைய சீற்றமும் வேதனையும் எப்படிப் பட்டதாயிருக்கும் என்பதை நீங்கள் அமைதியாக யோசித்துப் பாருங்கள்.

மேலும் நபிகளாரின்மீது புழுதி வாரித் தூற்றுகின்ற நபரது வெளிப்படையான கல்வி, வணக்கம் தொழுகை, நோன்பு,

போன்றவற்றைக் கருத்தில் கொண்டு அவன் செய்த திருத்தூதுவ நிந்தனையை இறைவன் மன்னித்து விடுவானா என்ன? நிச்சயம் ஒருபோதும் மன்னிக்கவேமாட்டான். மாறாக, இதனைப் பற்றியும் மேற்கண்ட வசனத்தில் இறைவன் விவரிக்கின்றான் இப்படி,.... "வலில் காஃபிரீன அதாபுன் அலீம்" இன்னும் (இப்படிப்பட்ட) காஃபிர்களுக்கு நோவினை தரத்தக்க கொடிய வேதனையுண்டு என்பதாக.

இதுவரை அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை நேசித்தல், அவர்களுக்குக் கண்ணியமளித்தல் போன்ற ஸுன்னத் வல் ஜமாஅத்தினர்களுடைய கொள்கைகளை ஆதாரத்துடன் ஒரு சிலவற்றை விவரித்தோம்.

இனி வஹ்ஹாபி, நஜ்திகளின் நிலைகள், அவர்களது கொள்கைக் கோட்பாடுகள், வழக்கமுறைகள் சிலவற்றை இப்போது பார்ப்போம்.

**ஹதீஸ்: 1**

ஹள்ரத் அப்துல்லாஹ் இப்னு உமர் ரளியல்லாஹ் அன்ஹு அவர்கள் அறிவிக்கின்றனர். அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள்.. இறைவா! எங்களின் ஷாமுக்கும், எமனுக்கும் பர(க்)கத்துச் செய்வாயாக! என்று துஆ செய்தபோது. அப்போது நஜ்து வாசிகள், யாரஸூலல்லாஹ்! எங்களின் நஜ்துக்கும் என்று வினவினர். பின்னர் மீண்டும் நபிகளார் இறைவா! எங்களின் ஷாமுக்கும் எமனுக்கும் பர(க்)கத் செய்வாயாக என்று துஆ கேட்க. மீண்டும் அவர்கள் யாரஸூலல்லாஹ்! எங்களின் நஜ்துக்கும் என்று வினவினர். இவ்வாறாக மும்முறை நபிகளார் கூறியிருப்பார்களென்று எண்ணுகிறேன். அதன்பின் பெருமானார் அங்கு (நஜ்து நாட்டில் பூகம்பங்களும், குழப்பங்களும் ஏற்படும். இன்னும் அங்கிருந்தே ஷைத்தானின் கூட்டம் வெளியாகும் என்று கூறினர். (நூல் : புகாரீ)



இந்த ஹதீஸ் மிஷ்காத்திலும் காணப்படுகின்றது. விசுவாசிகளே! இப்போது நீங்களே முடிவு செய்து கொள்ளுங்கள். நஜ்துப் பிரதேசத்திலிருந்துதான் பூகம்பங்களும் குழப்பமும் உண்டாகுமெனவும், பின்னர் அங்கிருந்தே ஷைத்தானின் கூட்டம் வெளிப்படுமெனவும் முக்காலமுமுணர்ந்த மெய்யறிவிப்பாளரான அண்ணல் நபிகளாரே அறிவித்துத் தந்திருக்கின்றார்களெனில்....

நபிகளாரின் புனிதமிக்க அக்காலத்திலேயே காண்பதற்கு இஸ்லாமியர்களைப் போன்றிருந்த முனாஃபிக்குகளான மார்க்கத்தின் நயவஞ்சகர்கள் மூலம் திருத்தூதுவ நிந்தனையும், நபிகளாரின் கண்ணியத்திற்கு மாசு கற்பிக்கின்ற நிலைகளும் வெளிப்படத் துவங்கிவிட்டன என்பதைப் புரிந்து கொள்ளுங்கள்.

**ஹதீஸ்: 2**

அடுத்து ஹள்ரத் அபூபர்தா அஸ்லமி ரளியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கின்றனர். என் காதுகளால் நான் கேட்டுக் கொண்டிருந்தேன். என் கண்களால் நான் பார்த்துக் கொண்டிருந்தேன். அண்ணல் நபிகளாரின் திருமுன் கொஞ்சம்போல பொருள் (செல்வம் கொண்டுவந்து சமர்ப்பிக்கப்பட்டது. அதனை நபிகளார் தமக்கு வலப்பக்கமும், இடப்பக்கமும் இருந்தோர்க்கு பங்கிட்டுக் கொடுத்துக் கொண்டிருந்தனர். தமக்குப் பின்புறமிருந்தோருக்கு எதுவும் வழங்கவில்லை. அப்போது பின்னாலிருந்தவர்களில் ஒரு மனிதன் எழுந்துநின்று..முஹம்மதே! பங்கிடுவதில் நீர் நீதத்தைக் கையாளவில்லையென்று கூறினான். அவன் கறுப்பாக இருந்தான். அவனுடைய தலை முழுவதும் மழிக்கப்பட்டிருந்தது. (தலையை மொட்டையடித்திருந்தான்) இரு வெண்மை நிறஆடைகளை தரித்திருந்தான். உடனே நபிகளார் அம்மனிதன் மீது மிகவும் கோபமுற்றவர்களாக,

இறைவன் மீதாணை! எனக்குப்பின் என்னைவிட

மிகுதியாக நீதம் செய்வோரை நீங்கள் காணவியலாது. இறுதிக் காலத்தில் ஒரு கூட்டம் வெளிப்படும். இம்மனிதனும் அக்கூட்டத்தைச் சேர்ந்தவனே. அவர்கள் குர்ஆனை ஓதுவார்கள். எனினும் அவர்களின் தொண்டைக்கும் கீழே குர்ஆன் இறங்காது. எவ்வாறு அம்பு வேட்டை மிருகத்தைத் துளைத்துச் சென்று விடுமோ, அவ்வாறே அக்கூட்டத்தினரும் இஸ்லாத்தை விட்டும் வெளியேறி விடுவர். தலையை மழித்துக் கொள்ளுதல் இவர்களின் விசேஷமான அடையாளமாகும். ஒவ்வொரு காலத்திலும் இக்கூட்டத்தைச் சேர்ந்தோர் வெளிப்பட்டுக் கொண்டேயிருப்பர், இறுதியில் மஸீஹ்தஜ்ஜாலுடன் அக்கூட்டம் வெளிப்படும். ஆதலால் இக்கூட்டத்தினரை நீங்கள் சந்திப்பீர்களேயானால் அவர்கள்தான் மிகவும் இழிவான படைப்புக்களென்பதை நீங்கள் புரிந்து கொள்ளுங்கள்.

(ஆதாரம் : மிஷ்காத் - பாபுல் கத்ல் அஹ்லுர்ரத்)

அண்ணல் நபியவர்களை நிந்திப்போர், அவர்கள்மீது புழுதிவாரித் தூற்றுவோர், அவர்களின் கண்ணியத்தை சீர் குலைப்போர் திருக்குர்ஆனை ஓதுவதில் முஸ்லிம்களுக்கெல்லாம் கொஞ்சமும் சளைத்தவர்களல்ல. எனினும் அண்ணலாரின்மீது நேசமற்றுப் போனதால் குர்ஆன் அவர்கள் ஓதினாலும் அதனைக் கொண்டு நேர்வழி பெறமாட்டார்கள்.)

காரணம் குர்ஆன் கிடைப்பதற்குக் காரணமாயிருந்த "ஸாஹிபுல் குர்ஆன்" நபிகளாரின் கண்ணியம் நேசம் போன்றவை அவர்களின் உள்ளத்தில் இல்லாமற்போனபின் திருக்குர்ஆன்மீது மட்டும் அவர்களுக்கு கண்ணியம் எப்படி ஏற்படும்? நஸாயி ஷரீஃபின் இந்த ஹதீஸ் மிஷ்காத்தின் முதல்பாகம் இஸ்லாமிய தண்டனை பற்றிய பிரிவில் வருகிறது.

இனி இதே ஹதீஸ் புகாரீ ஷரீஃபின் முதல்பாகம் கிதாபுல் அன்பியாவில், யஃஜூஜ் வரலாற்றிறை ஒட்டி காணப்படுகின்றது. அதில் இக்கூட்டத்தினர் பற்றி குறிப்பிடும்போது அதாவது மேற்கண்ட ஹதீஸில் கூறப்பட்ட குழப்பவாதிகள் சிலைவணக்கக் காரர்களை விட்டுவிட்டு இஸ்லாமியர்களை வெட்டுவார்களென்று விவரிக்கப்பட்டுள்ளது.



**ஹதீஸ்: 3**

ஹள்ரத் அபூ ஸயீதுல்குத்ரீ ரளியல்லாஹு அன்ஹு அறிவிக்கின்றனர். நாங்கள் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் திருமுன் இருந்தோம். அந்நேரம்நபிகளார் தம்முன்னிருந்த பொருட்களை பங்கிட்டுக் கொடுத்துக் கொண்டிருந்தனர். அப்போது "துல்குவைஸரா" என்ற பெயருடையவன் பெருமானாரின் திருமுன் வந்தான். அவன் "பனூதமீமுடைய" வம்சத்தைச் சேர்ந்தவன்.

அவன் நபிகளாரை நோக்கி யாரஸூல்லாஹ்! நீதம் செய்யுங்கள் என்று கூறினான். (அதாவது நீதியோடு பங்கீடு செய்யுங்கள் என்றான்.)
இதுகேட்ட அண்ணலார் உனக்குக் கேடு உண்டாவதாக, நான் நீதத்தைக் கையாளவில்லையெனில் வேறு யார் நீதத்தைக் கையாளுவர்? நிச்சயமாக (எனது கண்ணியத்திற்கு மாசு கற்பித்ததால்) நீ பேரிழப்புக்கும், கைசேதத்திற்கும் ஆளாகி விட்டாய் எனக் கூறினர்.

உடனே ஹள்ரத் உமர் ரளியல்லாஹு அன்ஹு அவர்கள். யாரஸூலல்லாஹ்! இவனைக்கொன்றுவிட எனக்கு அனுமதி தாருங்களெனக் கேட்க, அதற்கு நபிகளார், அவனைவிட்டு விடுங்கள். நிச்சயமாக அவனைச் சேர்ந்தவர்கள் இருக்கின்றனர். அவர்களின் தொழுகையைப் பார்ப்பீர்களேயாயின், உங்களின் தொழுகை அவர்களது தொழுகையைவிட மிகமிகத் தாழ்ந்தவைகளாகத் தோன்றும். அவர்களின் நோன்பைப் பார்ப்பீர்களேயாயின், உங்களின் நோன்பு அவர்களின் நோன்பைவிட மிகமிகத் தாழ்ந்தவைகளாகத் தோன்றும். ஆனால் குழிக்குக்கீழே

இறங்காது. எவ்வாறு அம்பானது மிருகத்தைத் துளைத்துக் கொண்டு வெளியேறிப் போய் விடுகின்றதோ, அவ்வாறு அவர்களும் மார்க்கத்தைவிட்டு வெளியேறிப் போய் விடுவார்கள் என்று கூறினர்.

அடுத்து இதே ஹதீஸ் மற்றோர் அறிவிப்பில் இவ்வாறு காணப்படுகின்றது.

**ஹதீஸ்: 4**

ஒரு மனிதன் வந்தான். அவன் கண்கள் குழி விழுந்திருந்தன. உயர்ந்த நெற்றியிலிருந்து அடர்ந்த தாடியிருந்தது. கன்னங்கள் ஒட்டியிருந்தன. தலையை மொட்டையடித்திருந்தான். (அவன் நபிகளாரை நோக்கி, முஹம்மதே! இறைவனுக்கு அஞ்சுவீராக! என்று கூறினான். உடனே அண்ணல் நபியவர்கள், நான் அல்லாஹ்வுக்கு அடிபணிய மறுப்பேனாயின். உங்களில் யார் அல்லாஹ்வுக்கு அடிபணிந்து நடப்பவன்? (அதாவது நான் அல்லாஹ்வுக்கு வழிபட்டு நடக்காதபோது, நீதான் அல்லாஹ்வுக்கு வழிப்பட்டு நடக்கின்றாயோ?) அல்லாஹ் என்னை இவ்வுலக மனிதர்களிலேயே 'அமீனாக' அமானிதத்தைக் காப்பவராக ஆக்கியுள்ளான். நீ என்னை 'அமீனாக' ஏற்றுக் கொள்ளமாட்டாயோ எனக் கேட்டனர். உடனே நாயகத் தோழர்களிலொருவர் அம்மரியாதைத் தெரியாதவனை கொன்றுவிட அனுமதி கோர, நபிகளார் அதைத் தடுத்துவிட்டனர்.

பின்னர் அவன் அங்கிருந்து சென்றபின் பெருமானாரவர்கள் "நிச்சயமாக இவனில் இருந்து ஒரு கூட்டம் தோன்றும். அக்கூட்டத்தைச் சேர்ந்தவர்கள் குர்ஆனை ஓதுவார்கள். ஆனால் குர்ஆன் அவர்களின் தொண்டைக்குழிக்குக் கீழே இறங்காது. எவ்வாறு அம்பானது வேட்டை மிருகத்தைத் துளைத்துக் கொண்டு சென்று விடுகிறதோ. அவ்வாறு அவர்கள் இஸ்லாத்தை விட்டும் வெளியேறி விடுவார்கள்; இன்னும் அவர்கள் சிலை வணக்கக்காரர்களை விட்டு விடுவார்கள். முஸ்லிம்களைக்



கொல்வார்கள். நான் ஒருவேளை அவர்களைக் கண்டேனாயின். எவ்வாறு ஆதுடைய சமூகத்தினரை இறைவன் கொன்றானோ, அவ்வாறு அவர்களைக் கொன்று விடுவேன்" என்று கூறினர்.

(ஆதாரம் : மிஷ்காத், முஃஜிஸாத் பற்றிய பிரிவு)

இதுவரை மேற்கூறப்பட்ட ஹதீஸுகளினின்றும் முனாஃபிக்கென்னும் நயவஞ்சகர்களான நஜ்தீகளது திருத்தூதுவ நிந்தனை, அண்ணலாரின் மகத்துவத்திற்கு மாசு கற்பித்தல் போன்றவை விளங்கக் கிடைக்கின்ற அதே நேரம் இவர்கள் ஸாலிஹான அமல்களாகிய வணக்க வழிபாடுகள் செய்வதில் வெளிப்படையாக மிகுந்த ஈடுபாடும், கடமை தவறாதவர்கள் போன்றும், தோற்றம் தருவார்களென்பதும் தெரியவருகின்றது.

ஏனெனில். இந்த வெளிரங்கமான வணக்க வழிபாடுகளைக் காட்டித்தான் மார்க்கக் கல்வியற்ற பாமர முஸ்லிம்களைத் தமது வலையில் விழச் செய்து அவர்கள்மீது தங்களின் ஆதிக்கத்தை செலுத்த முடியுமென்பது இவர்களது எண்ணம்.

ஆனால் சிறந்த மார்க்க ஞானமும், விபரமறிந்தோருமான இஸ்லாமியர்கள் இந்த முனாஃபிக்கீன்களான நயவஞ்சகர்களது முட்டாள்தனமான செயல்களையும், பிறரை ஏய்க்கக்கூடிய தக்வா தாரிகளைப் போன்ற வெளித்தோற்றத்தையும் நன்றாகப் புரிந்து கொள்வர். புறத்தோற்றமான அமல்களென்னும் பசுத்தோலைப் போர்த்தி ஈமானையும், இஸ்லாமியக் கொள்கையினையும் நாசம் செய்யக்கூடிய ஓநாய் கூட்டங்களைப் போன்ற இவர்கள் முஸ்லிம்களிடையே மறைந்திருப்பதையும் நன்கறிவர்.

முக்காலம் பற்றிய செய்திகளையெல்லாம் அறிவிக்கக்கூடிய மெய்யறிவிப்பாளரான அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களே இவ்வஞ்சகக்

கூட்டத்தினரைப் பற்றி அற்புதமாக முன்னெச்சரிக்கை செய்துவிட்டனர்.

இவ்வஞ்சக வழிகெட்டோரைப் பற்றி மேலும் ஒரு ஹதீஸைப் பாருங்கள். ஹள்ரத் அலி ரளியல்லாஹு அன்ஹு அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களைக் கொண்டு அறிவிக்கின்றனர்.

**ஹதீஸ்: 5**

இறுதி காலத்தில் அனுபவமில்லா அறிவிலிகளான ஒரு கூட்டம் வெளிப்படும். அவர்கள் நன்மையான விஷயங்களைப் பற்றி பேசுவார்கள். ஆனால் அவர்களது தொண்டைக்குக் கீழே ஈமான் இறங்காது. (அதாவது வாயளவில்தான் நன்மையைப் பற்றி பேசுவார்கள். அவர்களது உள்ளத்தில் ஈமான் இருக்காது) எவ்வாறு மிருகத்தை அம்பானது துளைத்துக் கொண்டு வெளியேறி விடுகின்றதோ, அவ்வாறு அவர்களும் இஸ்லாத்தைவிட்டு வெளியேறி விடுவார்கள்.

(ஆதாரம்: புகாரீ)

ஸுப்ஹானல்லாஹ்! எத்துணை தெளிவான முன்னறிவிப்பு! இம்மரியாதை தெரியாமல், அண்ணலாரின் மகத்துவத்திற்கு மாசு கற்பிக்கும் முனாஃபிக்குகளான நயவஞ்சகர்களது உண்மைச் சொரூபத்தை எவ்வளவு துல்லியமாக நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் தெளிவுபடுத்திக் காட்டிவிட்டனர்.

பிரிதோரிடத்தில், இந்த முனாஃபிக்கீன்கள் குர்ஆனைக் கற்பிக்கிறோம். இறைவேதத்தைப் போதிக்கிறோம் என்றெல்லாம் வாதம் புரிவார்கள். எனினும் இவர்களுக்கும் மார்க்கத்திற்கும் எவ்விதத் தொடர்பும் இருக்காதென்றும் நபிகளார் அறிவித்திருக்கின்றனர்.

அடுத்து, அனஸ் இப்னு மாலிக் ரளியல்லாஹு அன்ஹு



அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களைக் கொண்டு அறிவிக்கின்ற மற்றோர் ஹதீஸைப் பாருங்கள்.

**ஹதீஸ்: 6**

ஒருமுறை அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள், "எனது சமூகத்தாரில் ஒரு கூட்டம் தோன்றும். அது குர்ஆனின் பக்கம் மக்களை அழைக்கும். ஆனால் அக்கூட்டத்தாருக்கும் நமக்கும் (இஸ்லாமிய மார்க்கத்துடன்) எவ்விதத் தொடர்புமிருக்காது" என்று கூறினர்.

(ஆதாரம்: அபூதாவூத்)

இதுவரை நாம் மேலே விவரித்து வந்துள்ள அண்ணல் நபிகளாரின் ஹதீஸ்களைக் கொண்டு சில விஷயங்கள் நமக்கு சந்தேகத்திற்கிடமின்றி ஆராயக்கிடக்கின்றன அவையாவன:

(1) அண்ணல் நபியவர்களின் மகத்துவத்திற்கு மாசு கற்பிக்கின்ற, அவர்களின் கண்ணியத்தைக் குலைக்கின்றவர்களின் தொடர் உலகில் ஒன்றன்பின் ஒன்றாக வெளியாகிக் கொண்டேயிருக்கும். இத்துர்பாக்கியவான்கள் எப்போதும் உண்மையாளர்களான சத்தியவந்தர்களைக் காட்டிலும். தம்மை உயர்ந்தவர்களாக சிறந்தவர்களாக எண்ணிக் கொண்டிருப்பார்கள். எதுவரையெனில். இவர்களின் கடைசிக் கூட்டம் தஜ்ஜாலுடன் வெளிப்படும்வரை இவர்களின் தொடர் இருக்கத்தான் செய்யும்.

(2) இத்திருத்தூதுவ நிந்தனையாளர்களைப் பற்றி மேல்கூறப்பட்ட ஹதீஸ்களில் விபரிக்கப்பட்டுள்ளவை இன்றும்கூட பெரும்பாலான வஹ்ஹாபிகளிடம் இருப்பதைக் காணலாம். குறிப்பாக தலையை முழுக்கச் சிரைத்தல், வஹ்ஹாபிகளிடையே 75 சதவிகிதத்திற்கு மேல் காணப்படுகின்றது.

(3) நபிகளாரின்மீது புழுதி வாரித்தூற்றும் இவர்களை,

இவர்களது தொழுகை, நோன்பு போன்ற வெளிரங்கமான அமல்களைக் கொண்டு நல்லவர்களெனக் கருதுதல் மிகப்பெரும் வழிகேடாகும்.

மேலும் அண்ணல் நபிகளார்மீது இவர்கள் கொண்டுள்ள பகைமை. மகத்துவத்திற்கு மாசு கற்பிக்கும் குணம். இறை நேசச் செல்வர்களைத் தூஷித்தல் போன்றவற்றை மனதிற்குள் மறைத்துத் தேக்கிக் கொண்டுள்ள இவர்களை மிகமிக இழிவான படைப்புக்களெனக் கருதவேண்டும்.

(4) இஸ்லாமியர்களிடையே அண்ணல் நபிகளாரை தூஷிக்கின்ற, நிந்திக்கக்கூடிய குழப்பம் ஃபித்னாவானது உலகிலேயே முதன்முதலாக நஜ்திகளால்தான் தொடங்கப்பட்டது.

ஏனெனில், "துல் குவைஸரா" பனூதமீம், வம்சத்தைச் சேர்ந்தவன் போன்றோரனைவரும் நஜ்திகளே! மேலும் பனூதமீமுடைய வம்சத்தார் நஜ்துப் பிரதேசத்தைச் சார்ந்தவர்கள் தாமென்பது நம்பிக்கைக்குரிய ஆதாரப் பூர்வமான நூல்களிலிருந்து தெரிய வருகின்றது.

(5)அண்ணலாரவர்கள், திருத்தூதுவ நிந்தனையாளர்களை சபித்துள்ளனர். ஆதால் ஈமான் கொண்ட விசுவாசிகளான முஃமின்கள் இந்த நஜ்துவாசிகளைச் சபித்தல் ஸுன்னத்தாகும். இன்னும் இத்தகைய வழிகெட்டோருக்காரக துஆ செய்தல் அவர்களை கண்ணியப்படுத்தும் பொருட்டு ரஹ்மதுல்லாஹி அலைஹி என்று கூறுதல் இஸ்லாமிய மார்க்கத்திற்குப் புறம்பான ஓர் செயலாகும்.

(6) நபிகள் பிரானின் கண்ணியத்தை சீர்குலைக்கும் திருத்தூதுவ நிந்தனைவாதிகளான மரியாதையற்ற இந்த நஜ்து வஹ்ஹாபிகள் எவ்வளவுதான் தொழுதபோதிலும், நோன்பு நோற்றாலும், திருக்குர்ஆனை ஓதினாலும் இவர்கள் தீன் மற்றும் துன்யாவாகிய இம்மை மறுமையாகிய இரண்டிலும் நஷ்டவாளிகளாக பேறுகெட்டவர்களாகத்தான் இருப்பார்கள்.



(7) இந்த நிந்தனைவாதிகளைக் கண்டு கோபமுற்று வாளையுருவிக் கொள்வது ஹள்ரத் உமர் ரளியல்லாஹு அன்ஹு மற்றும் ஏனைய நாயகத் தோழர்களது ஈமானென்னும் விசுவாசம் பொங்கிப் பிரவகிப்பதன் அடையாளமாகும்.

மேலும் இன்றும்கூட நம்மிடையேயுள்ள "அஹ்லுல் ஹக்" என்னும் உண்மையாளர்கள் இந்த நஜ்து வஹ்ஹாபிகள்மீது சினம் கொண்டோராகக் காணப்படுவது அவர்களது ஈமானுக்குரிய அடையாளங்களில் ஒன்றாகும்.

இனி உண்மையான முஸ்லிம் இந்த வஹ்ஹாபிகள் நஜ்திகள் போன்றோர்மீது கோபமடைதல் குழப்பத்தை பிரிவினையை உருவாக்குதல் என்று சொல்லுதல் வஹ்ஹாபிகளை மென்மேலும் ஊக்குவிப்பதற்கடையாளமாகும். அதன்றி, ஒற்றுமை என்னும் பெயரில் குஃப்ர் (இறைமறுப்பு) மற்றும் இர்திதாத் என்னும் குஃப்ரின் பக்கம் மீளுவதை ஏற்றுக் கொள்வதாகும்.

(8) திருத்தூவ நிந்தனையாளர்களான இந்த நயவஞ்சகர்களை புறத்தே பார்க்கின்றபோது தொழுகை, நோன்பு, திக்குர்ஆனை ஓதுதல் போன்ற நற்கிரியைகள் செய்வதில் உண்மையாளர்கள், அதாவது உண்மையான முஸ்லிம்களுக்கு இவர்கள் சளைத்தவர்களல்ல. மாறாக இத்தகைய நற்கிரியைகளை மிகுதமாயும், மிகச் சிரத்தையோடும் செய்வார்கள். அண்ணல் நபிகளார் தமது தோழர்களை நோக்கி நீங்கள் உங்களின் தொழுகை நோன்பு போன்றவற்றை அவர்களது தொழுகை நோன்பு போன்றவற்றுக்குமுன் மிகுந்ததாகக் கருதுவீர்கள், எனினும் அவர்கள் திருத்தூதுவ நிந்தனை செய்ததன் சாபக்கேடு அவர்களுடைய உள்ளங்கள் ஈமானுடைய ஜோதியை இழந்து போயிருக்கும் எனக் கூறுகின்றனர்.

*(9) இக்குழப்பவாதிகள் சிலைவணக்கத்தாருடன் ஒருபோதும் மோதிக்கொள்ள மாட்டார்கள், (சீர்திருத்தம் செய்வதாகக் கூறிக்கொண்டு) ஆனால் முஸ்லிம்களிடையே தான் தங்களின் ஃபித்னாவை குழப்பதையெல்லாம் பரப்புவார்கள். வாய்ப்பு கிடைக்கும் சமயம் முஸ்லிம்களை முஷ்ரிக்குகள், பித்அத்திகள் என்றெல்லாம் பழி சுமத்தி மனமாரக் கொலையும் செய்வார்கள்.*

*(10) இம்மரியாதை கெட்டோர் திருக்குர்ஆனையும் ஹதீஸ்களையும் சொல்லிக் காட்டியே பாமர முஸ்லிம்களைக் கவர்ந்து விடுவார்கள். புறத்தே கவனிக்கின்றபோது அவர்கள் ஒவ்வொரு நல்ல விஷயத்தைப் பற்றியும் பேசுவார்கள். ஆனால் அனுபவமின்மை மற்றும் மார்க்க அறிவில்லாமை காரணமாக இவர்களது இருதயங்களிலுள்ள அருவருக்கத்தக்க ஆபரங்களை மறைத்துக் கொள்ள முடியாதவர்களாயிருப்பார்கள்.*

*(11) ஜனங்களை “இறைவனின் வேதத்தின் பக்கம்” அதாவது அல்லாஹ்வின் தீனின் பக்கம் அழைப்பதாகக் கூறிக்கொண்டு ஹதீஸ் குர்ஆன் போன்றவற்றை போதிக்கிறோம் என்பதாகச் சொல்லி கூட்டங்களை நடத்துவார்கள். ஆனால் தஃவத்துடைய வேலை எனும் போர்வையில் தங்களின் திருத்தூதுவ நிந்தனைக் கொள்கையைப் பரப்புவார்கள்.*

*ஹள்ரத் அல்லாமா இப்னு ஆபிதீன் ஷாமி ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் தமது நூலான “ரத்துல் முக்தாரில் பாபுல் பகாத்” என்னும் பிரிவில் “முஹம்மத் இப்னு அப்துல் வஹ்ஹாப் நஜ்தி”யைப் பற்றி இவ்வாறு குறிப்பிடுகின்றனர். அதாவது,....*

*இவனும் இவனைப் பின்பற்றியவர்களிலிருந்துதான் எங்கள் காலத்தில் திருத்தூதுவ நிந்தனையாளர்களுக்கென ஒரு தனிக்கூட்டமே உருவாயிற்று. இவர்களைத்தான் வஹ்ஹாபிகளென்று அழைக்கப்படுகின்றது. இன்னும் இவர்களைப் பற்றி அல்லாமா ஷாமியவர்கள் பின்வருமாறு கூறுகிறார்கள்*



*அண்ணல் நபியவர்களின் மகத்துவத்திற்கு மாசு கற்பிக்கும் கூட்டத்தார் எங்களின் காலத்தில் வெளிப்பட்டனர். இவர்கள் அப்துல் வஹ்ஹாப் நஜ்தியைப் பின்பற்றினர். இன்னும் இவர்கள் நஜ்துப் பிரதேசத்திலிருந்து வெளிப்பட்டனர்.*

*ஹரமைன் என்னும் மக்கா மதீனாவின்மீது ஆதிக்கம் பெற்ற இவர்கள். தங்களை ஹன்பலி மத்ஹபெனக் கூறிக் கொண்டனர். தாங்கள் மட்டுமே முஸ்லிம்களென்றும் தங்களின் கொள்கைக்கு மாற்றமானவர்களனைவரும் முஷ்ரிக்குகளெனக் கருதினர். இதையே ஒரு காரணமாகக் கொண்டு அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாஅத்தைச் சேர்ந்த உலமாப்பெருமக்களையும் இஸ்லாமியர்களையும் கொலை செய்வதை ஆகுமான ஒன்றென ஆக்கிக்கொண்டனர். இறுதியில் அல்லாஹ் இவர்களின் பெருமையை அழித்தான். இவர்களது நகரங்களை நாசமாக்கினான். முடிவில் ஹிஜ்ரீ 1233ல், இஸ்லாமியப் படைகளுக்கு இந்த நஜ்திகள்மீது வெற்றியைத் தந்தான்.*

*(நூல்: ஷாமி முதல் பாகம்)*

*மேற்கூறப்பட்ட வஹ்ஹாபிகளான திருத்தூதுவ நிந்தனையாளர்களைப் பற்றி அல்லாமா இப்னு ஆபீதீன் ஷாமியவர்களின் நூலில் மிகச் சுருக்கமாகவே விபரிக்கப்பட்டுள்ளது.*

*ஆனால் இந்த அழிச்சாட்டியக்காரர்களான நஜ்திகளாகிய இவர்களது அக்கிரமங்களை, இவர்கள் தௌஹீத் என்று சொல்லிக்கொண்டு செய்த வகைவகையான குழப்பங்களைப் பற்றிய முழுவிபரங்களையும் பார்ப்பீர்களேயாயின், மயிர் கூச்செரியும், இறைவனின் ஹபீபாகிய எம்பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் இந்த நஜ்திலிருந்துதான் குழப்பங்களே தோன்றும், ஷைத்தானின் கூட்டம் வெளிப்படுமெனக் கூறிய*

ஒவ்வொரு முன்னறிவிப்பின் வாசகமும் எவ்வளவு உண்மையென்பதை அனுபவப் பூர்வமாக அறிந்து கொள்வது பகலில் சூரியனைக் காணுவது எத்தனை உண்மையோ, அத்துனை உண்மை. இவர்களைப் பற்றிய ஒவ்வோர் சம்பவமும் வெள்ளிடைமலை.

இஸ்லாமியர்கள்மீது ஆதிக்கமடைந்தவுடன் இந்த வஹ்ஹாபிகள் மக்கா, மதீனா போன்ற நகரங்களிலுள்ள முஸ்லிம்களை கொஞ்சமும் ஈவிரக்கமின்றி கொன்று குவிக்கத்துவங்கினர். மேலும் ஹரமைன் ஷரீபைனாகிய மக்கா மதீனா வாழ் பெண்கள், சிறுமியர் போன்றோரின் கற்பை சூரையாடினர். ஆண்களையும் பெண்களையும் அடிமைகளாக்கினர். அண்ணல் நபிகளாரின் குலவழித் தோன்றலான ஸாதாத்துக்களையெல்லாம் (மிகக் கொடூரமாகக் கொன்று தீர்த்தனர். நபிகளாரின் பள்ளியாகிய மஸ்ஜிதே நபவீயிலிருந்த விலையுயர்ந்த விரிப்புகள், விளக்குத் தூண்கள் போன்றவற்றை யெல்லாம் அங்கிருந்து கொள்ளையடித்துச் சென்றனர். அத்துடன் தங்களின் மாளிகைகளை மேற்படி பொருட்களால் அலங்கரித்து அழகு பார்த்தனர். மேலும் நபிகளாரின் குடும்பத்தவர்களது புனிதமிகு கப்ருகளையும், நபித்தோழர்களின் கப்ருகளையும் இடித்துத் தரைமட்டமாக்கினர். இறுதியில் அண்ணல் நபிகளாரின் புனிதமாக 'ரவ்ளா' (கப்ரு) ஷரீபையும். அதன்மீது கட்டப்பட்டிருந்த பச்சை நிறமுடைய 'குப்பா'வையும் தகர்த்தெரியும் தீய எண்ணத்துடன் அதனை நெருங்கியபோது.

நபிகள் நாயகத்தின் அதியற்புதமான முஃஜிஸாத்தின் காரணங்கொண்டு ரவ்ளாவை நெருங்கிய வஹ்ஹாபியின்மீது இறைவனால் ஏவப்பட்ட ஒரு பாம்பானது அவனைத் தீண்ட அந்த இடத்திலேயே அக்கொடியவன் விழுந்து இறந்தான். இதனைக் கண்ட மற்ற வஹ்ஹாபிகள் ரவ்ளாவை தகர்க்கும் தீய எண்ணத்தைக் கை விட்டு விட்டுச் சென்றனர். இதுபற்றிய விபரங்களை இன்னும் தெரிய விரும்புவோர் "ஸைபுல் ஜப்பார்" "பவாரிக் முஹம்மதிய்யா அலா அர்காமத்துன் நஜ்திய்யா" போன்ற நூல்களைப் பார்க்கவும்.



இதுவரை மேலே விபரிக்கப்பட்ட நஜ்தி வஹ்ஹாபிகளைப் பற்றியும் அவர்களின் கொடூரமான அழிச்சாட்டியங்களைப் பற்றியும் நம்மால் இயன்றவரை விபரித்துள்ளோம். ஆனால் அவர்களுடைய "ஈமான்" விசுவாசம் எத்தகையது? அவர்களின் கொள்கைக் கோட்பாடுகள் என்ன? என்பது பற்றிய விளக்கங்கள் இன்னுமதிகமதிகம் தரவேண்டியுள்ளதால் இன்ஷா அல்லாஹ் இதைப்பற்றி அடுத்துவரும் கேள்விக்கான விடையில் (மூன்றாம் பாகத்தில்) மிகத் தெளிவாக நாம் விபரிப்போம்.

மேலும் தப்லீக் ஜமாஅத்தைச் சார்ந்தோர் ஸுன்னத்வல் ஜமாஅத்தினரா? அல்லது வஹ்ஹாபிகளா? என்பது பற்றி அவர்களின் தலைவர்கள், பிரமுகர்கள் போன்றோரால் எழுதப்பட்டுள்ள நூல்களிலிருந்தே விபரிப்போம். அதனைப் பார்த்த பின்னர் நீங்களே முடிவு செய்து கொள்ளலாம்.

**கேள்வி: 3**

**தப்லீக் ஜமாஅத்தினரால் ஷஹீத் என்றழைக்கப்படும் இவ்வியக்கத்தின் முன்னோடியும், தலைவருமான மவ்லவீ இஸ்லாயீல் ஸாஹிப் தெஹ்லவி மவ்லவீ ரஷீத் அஹ்மத் ஸாஹிப் கங்கோஹி மவ்லவீ அஷ்ரஃப் அலீ ஸாஹிப் தானவீ, மவ்லவீ இல்யாஸ் ஸாஹிப் காந்தல்வீ போன்றோரின் பெயர்களை தப்லீக் ஜமாஅத்தினர் மிகுந்த கண்ணியத்தோடும், மரியாதையுடனும் குறிப்பிடுகின்றனர்.**

**மேலும் மிகுதமாக, பெரும்பாலும் மேற்படி மவ்லவீகளால் தொகுப்பட்ட, அல்லது அவர்களின் அபிமானிகளான முரீதுகளென்னும் மவ்லவீகளால் தொகுக்கப்பட்ட நூல்களை மட்டும்தான் தப்லீக் ஜமாஅத்தினர் தஃலீமில் வாசிக்கின்றனர். பின்னும்**

**இந்நூல்களை பிறரிடம் கொடுத்து வாசிக்கவும் சொல்கின்றனர். மேலும் அந்நூல்களில் விபரிக்கப்படும் விஷயங்களை மட்டுமே (தங்களின்) பயான்களிலும் விளக்குகின்றனர்.**

**ஆதலால் மேற்படி மவ்லவீகளது அகீதாக்கள் கொள்கைகள், சிந்தனை போன்றவை எப்படிப்பட்டவை? என்பனபற்றி அருள்கூர்ந்து அவர்களின் நூல்களது ஆதாரங்களைக் கொண்டே விளக்கமளிக்க வேண்டுகிறேன்.**

**முஹம்மத் முஸ்தபா ஹாஹிப் காதிரி**

*50, பீரங்கிக் குளத்தெரு, திருச்சிராப்பள்ளி.*

**பதில்: *3***

மேற்கூறப்பட்ட தப்லீக் ஜமாஅத்தின் தலைவர்களது அகீதாக்கள் (கொள்கை) சிந்தனை போன்றவை எத்தகையது என்பது பற்றி நான் என் தரப்பிலிருந்து விபரிப்பதற்குப் பதிலாக அவர்களின் அல்லது அவர்களது அபிமானிகளான முரீதீன்களின் நூல்களில் எழுதப்பட்டுள்ள சில வாசகங்களை இங்கே எடுத்துக் காட்டுகிறேன்.

அதன்மூலம் அவர்களின் கொள்கை சிந்தனை போன்றவை எத்தகைய தன்மையைக் கொண்டது என்பதைப் ஹாபிகளா என்பதை நீங்கள் நன்கு யூகித்தறிந்து கொள்வீர்களென்று நினைக்கிறேன்.

மவ்லவீ இஸ்மாயீல் ஸாஹிப் தெஹ்லவியை, அவரைப்பின் பற்றுவோர் ஷஹீத் என்றழைக்கின்றனர். தீய கொள்கையினைக் கொண்ட திருத்துவ நிந்தனையாளர்களான வஹ்ஹாபிய நஜ்திகளுக்கென்று ஒருங்கிணைந்த ஓர் கூட்டம் (பிரிவு) ஹிஜ்ரீ பதிமூன்றாம் நூற்றாண்டுடைய துவக்கத்தில் அப்துல் வஹ்ஹாப் நஜ்தீயுடைய தலைமையில் தோன்றிற்று என்பதைப் பற்றி முந்தயப் பக்கங்களில் நாம் கண்டோம்.

அப்து வஹ்ஹாபுக்கு முன்னர் வஹ்ஹாபிகளுக்கென ஓர் தனிப்பட்ட பிரிவு எதுவும் கிடையாது. அப்துல் வஹ்ஹாப் மற்றும் அவரது மகன் முஹம்மத் இப்னு அப்துல் வஹ்ஹாபிற்குப் பின்னரே திருத்தூதுவ நிந்தனையாளர்களான நஜ்திகளின் பிரிவுக்கு வஹ்ஹாபிகள் என்று அழைக்கப்பட்டது.



இதில், மேற்படி அப்துல் வஹ்ஹாப் நஜ்தி "கிதாபுத் தௌஹீத்" என்னும் பெயரில் ஒரு நூலொன்றை எழுதினார். அதில், அவர் அல்லாஹ்வின் ஹபீபான அண்ணலெம் பெருமான் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களையும் மற்றும் ஏனைய இறைநேசச் செல்வர்களான வலிமார்களையும் மிகத் தரக்குறைவான சொல்லத் தகாத வார்த்தைகளால் அவர்களின் கண்ணியத்தை சீர்குலைக்கின்ற வகையில் எழுதினார்.

குறிப்பாக நபிமார் வலிமார் போன்றோரை வஸீலாவாக்கி இறைவனிடம் உதவி தேடுதல். அவர்களை கண்ணியப்படுத்துதல், அவர்களிடம் உதவி ஒத்தாசைத் தேடுதல் முதலானவற்றை ஷிர்க் இணைவைத்தல் என எழுதியுள்ளார்.

மேலும் அண்ணலாரின்மீது ஸலவாத்துச் சொல்லுதல், ஃபாத்திஹா செய்தல், மீலாத்போன்றவை நடத்துதல் அண்ணலாரின் மீது நின்ற வண்ணம் ஸலாம் சொல்லுதல் போன்றவைகளனைத்தும் (பித்அத்துஸ் ஸய்யிஆ) நகூனமான அனாச்சாரமென்றும் ஹராமென்றும் கூறுகிறார்.

மேலும் சர்வ உலகிலுள்ள முஸ்லிம்களனைவரையும் ஏன்! நாயகத் தோழர்கள், இமாம்கள், வலிமார்கள், உலமாப்பெருமக்கள் போன்றோர் கூட இணைவைக்கும் முஷ்ரிக்குகளென்றும், முப்ததியீன்களான அனாச்சாரவாதிகளென்றும் கூறுமளவிற்கு ஒரு அலாதியான புதுமையான தௌஹீதென்னும் விளக்கத்தைப் புதிதாகத் தோற்றுவித்தார்.

அரபு மொழியிலிருந்த மேற்படி "கிதாபுத் தௌஹீத்" என்னும் இந்நூலைத்தான் (தப்லீக் ஜமாஅத்தின்

*மூலத்தலைவர்களில் ஒருவராகக் கருதப்படும் மவ்லவீ இஸ்லாயீல் ஸாஹிப் தெஹ்லி) உருதூ மொழியில் “தக்வியத்துல் ஈமான்” என்னும் பெயரில் மொழிபெயர்த்து ஆங்கிலேயர்களது ஆட்சிக் காலத்தில் லட்சக்கணக்கான பிரதிகள் அச்சிட்டு இலவசமாக விநியோகம் செய்யப்பட்டது.*

*இதன் காரணமாக சுமார் ஏழெட்டு நூற்றாண்டுகள் வரை இந்நாட்டை ஆட்சி செய்து வந்த இஸ்லாமியர்களான ஸுன்னத் வல் ஜமாஅத்தினர் வஹ்ஹாபிகளென்னும் பெயரில் பிளவுபட்டுப்போய் ஒரு பெரும் குழப்பத்திற்கு இரையாகினர். முஸ்லிம்கள் இருகட்சியாகப் பிரியாத நகரமோ, அல்லது கிராமமோ, இல்லையென்னுமளவிற்கு, வஞ்சகமென்னும் நிஃபாக்கும், பிளவு என்னும் விஷமும் பரவாத வீடே கிடையாது என்னுமளவிற்கு மாறிப்போனது. இதன்விளைவு எது நேரக்கூடாதோ அது நேர்ந்துவிட்டது. ஆம்! நாடு தழுவிய அளவில் கோடிக்கணக்கான எண்ணிக்கையளவு வாழ்ந்து வந்த இஸ்லாமிய மக்களை ஒரு சிறு எண்ணிக்கைக்குள் அடங்குமளவிற்கு அப்போது இருந்த ஆங்கிலேயர்கள் தங்களின் அடிமைகளாக்கினர்.*

*இன்னும் அக்கோரச் சம்பவத்தினால் ஏற்பட்ட பலன் என்ன தெரியுமா? ஒரு காலத்தில் இஸ்லாமிய சமூகத்தினரைக் கண்டு உலகமனைத்துமே நடுங்கிற்று என்னும் நிலைமாறி, இன்று இந்த நாட்டிலேயே பிறரது இகழ்ச்சிக்கும், பிறரது கையை எதிர்பார்த்து கையேந்தி வாழக்கூடிய தாழ்ந்த நிலைக்கும் இன்று தள்ளப்பட்டுவிட்டது.*

*சரி! இப்போது மவ்லவீ இஸ்மாயீல் ஸாஹிபுடைய மேற்படி நூலான தக்வியத்துல் ஈமானிலிருந்து சில வாக்கியங்களைக் குறிப்பிடுகின்றேன். அதன்மூலம் அவரது கொள்கை, சிந்தனை போன்றவை எவ்வாறு அமைந்திருந்தன என்பதை நீங்கள் புரிந்து கொள்ளலாம்.*



*இதன்மீது வலிமார் நபிமார் போன்றோருக்கும், ஜின், ஷைத்தான், பூதகணங்கள் மற்றும் தேவதை போன்றோருக்குமிடையே எவ்வித வேறுபாடோ வித்தியாசமோ கிடையாது,*

*(ஆதாரம் : தக்வியத்துல் ஈமான் - பக்கம் 18)*

*இதன்மீது எல்லா அடியார்களும் பெரியவரோ, சிறியவரோ! அனைவரும் சமமானவரே! அத்துடன் பலவீனரும் எவ்விதச் சக்தியுமற்றவர்களே!*

*(ஆதாரம் : தக்வியத்துல் ஈமான் - பக்கம் 29)*

*(மறைவானவற்றை அறியும்) இவ்விஷயத்தில் பெரியவர்களோ, சிறியவர்களோ, அனைவரும் சமமானவராயும் எதைப் பற்றியும் அறியாதவர்களாயும், அறிவற்றோராயு மிருக்கின்றனர்.*

*(ஆதாரம்: தக்வியத்துல் ஈமான் - பக்கம் 29)*

*எந்த ஒரு வலிக்கோ, நபிக்கோ, ஜின்னுக்கோ, மலக்குகளுக்கோ, ஷைகுக்கோ, இமாமுக்கோ, பூதகணத்திற்கோ தேவதைக்கோ, அல்லாஹ் ஸாஹிப் (மறைவானதையறியும் இச்சக்தியைக் கொடுக்கவில்லை,*

*(ஆதாரம் : தக்வியத்துல் ஈமான் - பக்கம் 23)*

*மேற்கண்ட வாக்கியங்களை மீண்டுமொருமுறை நன்கு படித்துப் பாருங்கள். நபிமார், வலிமார் போன்றோரின்மீது தம் உள்ளத்தில் சங்கையும் கண்ணியமும் நேசமும் கொண்டுள்ள ஒரு முஸ்லிம் இப்படிப்பட்ட வாக்கியங்களை எழுதுவாரா?*

*மேலும் யாராவது ஒருவர் உங்களிடம் வந்து இவ்விஷயத்தில் உங்களின் தந்தையும், பேயும் பிசாசும் ஷைத்தானும் ஒன்றுதான் என்றோ அல்லது உங்களது ஆசிரியருக்கும் பேய்க்கும் எந்தவித வித்தியாசமுமில்லை என்றோ அல்லது உங்களின் ஷைகு (ஆன்மிகக் குருவு)ம்,*

ஷைத்தானும் ஒரே மாதிரிதான் என்பதாகக் கூறுவோரேயாயின், இறைவனை முன்னிருத்திச் சொல்லுங்கள்! இவ்வாறான வாக்கியங்கள் உங்களின் மதிப்புக்குரிய தந்தை அல்லது மரியாதைக்குரிய ஆசிரியர் அல்லது சங்கைபொருந்திய ஷைகு போன்றோரை இழிவு படுத்துகின்ற அவர்களின் மகத்துவத்திற்கு ஊறுவிளைவிக்கின்ற சொற்கள் என்று எண்ணுவீர்களா இல்லயைா?

இனி இத்தகைய வாக்கியங்கள் இழிவுபடுத்தும் நோக்கத்தோடு சொல்லப்பட்ட வாக்கியங்கள் தானெனக் கருதுவார்களேயானால், உங்களின் உள்ளம் உங்களின் தந்தை, ஆசிரியர் ஷைகு போன்றோரின் கண்ணியத்தை சிதறடிக்கின்ற சொற்கள் என கூக்குரலிடுமேயானால், இப்போது நீங்களே தீர்ப்புச் சொல்லுங்கள்! மவ்லவீ இஸ்மாயீல் ஸாஹிப் மேலே கூறப்பட்டுள்ள வாக்கியங்களில் நபிமார் வலிமார் போன்றோரை இழிவுபடுத்தியுள்ளாரா இல்லையா?

இனி இறைவன் தனது மாமறையில் என்ன அறிந்தோரும் அறியாதோரும் சமமாவாரா? (அல்குர்ஆன்)

குருடனும் பார்வையுள்ளோனும் சமமாக மாட்டார்கள்,

(அல்குர்ஆன்: 13 / 16)

நரகவாதிகளும் சுவர்க்கவாதிகளும் சமமாக மாட்டார்கள்,

(அல்குர்ஆன் 59 / 20)

ஆனால் மவ்லவீ இஸ்மாயீல் ஸாஹிப் எழுதுகின்றார். சிறியவரோ, பெரியவரோ அனைவரும் சமம்தான். நபிமார் வலிமார்களுக்கும் ஷைத்தான் பேய் பிசாசு போன்றவற்றுக்குமிடையே எந்தவித வேறுபாடும் கிடையாதென்பதாக.

ஒன்று செய்யுங்கள்! மவ்லவீ இஸ்மாயீல் ஸாஹிபைப் பின்பற்றுவோரிடம் இப்படிக் கேளுங்கள்.

படைப்புக்களென்ற விஷயத்தில் மவ்லவீ இஸ்மாயீல் ஸாஹிபும் ஷைத்தானும் சமமானவர்களே என்று மட்டும் கூறிப் பாருங்கள். அல்லது மவ்லவீ இஸ்மாயீல் ஸாஹிபுக்கும் பேய்க்கும் பிசாசுக்குமிடையே எவ்வித வேறுபாடும் கிடையாதென்று சொல்லிப் பாருங்கள். பின்னர் இவ்வாறு சொல்வதாக மவ்லவீ இஸ்மாயீல் ஸாஹிபவர்களுக்கு இழிவு நிந்தனை ஏற்படுமா இல்லையா? என்றும் கேட்டுப் பாருங்கள். அதற்கவர்கள். இழிவுதான் கண்ணியக் குறைவுதான் என்று கூறுவாரேயானால், பின்னர் மவ்லவீ இஸ்மாயீல் ஸாஹிப் தமது மேற்படி நூலான தக்வியத்துல் ஈமானில் எழுதப்பட்ட வாசகங்கள் மட்டும் நபிமார் வலிமார் போன்றோரை இழிவுபடுத்தப்பட்டதில்லையா என்ன?



இனி மவ்லவீ இஸ்மாயீல் ஸாஹிப் எதற்காக இப்படியெல்லாம் நபிமார் வலிமார் போன்றோரையெல்லாம் இழிவுபடுத்தி கீழ்த்தரமாக எழுதினார் என்று தாங்கள் யோசிக்கலாம். அண்ணல் நபிகளாரின் மகத்துவத்தை சீர்குலைக்கும் வண்ணம் ஒருவன் பேசியதைக் கேட்டு ஹள்ரத் உமர் ரளியல்லாஹு அன்ஹு அவன் தலையை துண்டிப்பதற்காக தமது வாளையுருவிக் கொண்டார்களே! இது பற்றிய ஹதீஸையும் முன்பே பார்த்தோமல்லவா! அந்த ஹதீஸில் என்ன காரணத்திற்காக பெருமானாரை இழிவுபடுத்தினானோ, அதே காரணத்தை இஸ்மாயீல் ஸாஹிபுடைய இழிவான வார்த்தைக்கும் உரிய ஒன்றென்பதைப் புரிந்து கொள்ளுங்கள்.

இஸ்லாமியர்கள் தமது உள்ளங்களில் இறைநேசர் பெருமக்கள்மீது கொண்டுள்ள கண்ணியத்தை, மரியாதையை மதிப்பை நீக்கிவிட வேண்டும். இறைவனின் நேசத்தைப் பெற்ற நபிமார்களையும் வலிமார்களையும் முஸ்லிம்கள் சர்வ சாதாரணமாக மிகவும் இளக்காரமாக, வகையற்றவர்களாக, எவ்விதச் சக்தியுமற்றவர்களாக ஒரு சாதாரண படைப்பைப் போன்று பார்க்க வேண்டும். எந்த முஸ்லிமும் நபிமார் வலிமார் போன்றோரைக் கண்ணியப்படுத்தக்கூடாது என்னும் ஒரே நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டுதான் வஹ்ஹாபிய்யாக்கள் நபிமார்களையும், வலிமார்களையும்

இவ்வாறெல்லாம் இழிவுபடுத்துகின்றனரேயொழிய வேறு எந்தக் காரணமும் இதற்குக் கிடையாதென்பதை திட்டவட்டமாகச் சொல்லலாம்.

அடுத்து மவ்லவீ இஸ்மாயீல் ஸாஹிப் தமது நூலில் மேற்கொண்டு விபரிப்பதைப் பாருங்கள்.

*"எவரது பெயர் முஹம்மத்" என்றோ "அலீ" என்றிருக்கின்றதோ, அவருக்கு எந்த அதிகாரமும் (சக்தியும்) கிடையாது.*

*(ஆதாரம்: தக்விய்யதுல் ஈமான் - பக்கம் 47)*

*ரஸூலுடைய விருப்பத்தைக் கொண்டு எதுவும் ஆகப்போவதில்லை.*

*(ஆதாரம்: தக்விய்யத்துல் ஈமான் - பக்கம் 66)*

*பரஸ்பரம் அனைவருமே சகோதரர்கள் தாம், யார் மிகவும் கண்ணியத்திற்குரியவரோ அவர் பெரிய சகோதரர் எனவே பெரிய சகோதரரைப் போன்றே அவருக்கு மரியாதை செய்யுங்கள்.*

*(ஆதாரம்: தக்விய்யத்துல் ஈமான் - பக்கம் 68)*

*இறைவனது நெருக்கத்தைப் பெற்ற அடியார்கள் எத்தனைபேர் இருக்கின்றனரோ, அவர்களனைவரும்கூட மனிதர்கள்தாம். இன்னும் பணிவான அடியார்களும் நமது சகோதரர்களே.*

*(ஆதாரம்: தக்விய்யத்துல் ஈமான் - பக்கம் 68)*

அனைத்து நபிமார்களை விடவும் மிகவுயர்ந்த ஸ்தானம் வகிக்கும் இறைவனின் ஹபீபாகிய பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்களுக்கு ஒரு சாதாரண சகோதரனைவிட உயர்ந்த அஸ்தஸ்த்தை (இஸ்லாமிய சமூகம் அளித்துவிடக் கூடாது எதன்பதற்கான முழு முயற்சிகளில் மேற்கூறப்பட்ட வாக்கியங்கள் மேற் கொள்ளப் பட்டிருப்பதைக் காணலாம்.



அன்றி இதற்காகவே திரும்பத் திரும்ப இவரது கல்வியும் திறனும் செலவழிக்கப்பட்டுள்ளது. இதனைத்தான் "வஹ்ஹாபிகளின் தௌஹீத்" என்று சொல்லப்படுகின்றது.

இனி திருமறையில் இறைவன் நபிகளாரின் மகத்துவத்தைப் பற்றிக் கூறுகையில்,.....

*அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸம்மவர்களை முஃமின்களான விசுவாசிகளுக்கு அவர்களது உயிர்களைவிட அதிக உரிமையுடையோராயிருக்கின்றனர். இன்னும் அவர்கள் நபிகளாரின் துணைவியர் (மனைவிமார்கள்) முஃமின்களுக்குத் தாயாக இருக்கின்றனர். அல்குர்ஆன் : 33 - 6*

அல்லாஹ்! அல்லாஹ்! சர்வலோக நாயகனாகிய இறைவனோ, தனது ஹபீபாகிய ரஸூலை விசுவாசிகளது உயிர்களுக்கு உரிமையாளராகவும், அவர்களின் மனைவிமார்களை விசுவாசிகளின் தாய் என்றும் கூறுகின்றான். ஆனால் வஹ்ஹாபிகளோ, பெருமானார் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்களுக்கு ஒரு சாதாரண சகோதரனுடைய அந்தஸ்த்தை விட உயர்ந்த அந்தஸ்த்தை அளிப்பதை தங்களின் தௌஹீதுக் கொள்கைக்கு எதிரான ஒன்றெனக் கருதுகின்றனர்.

அது மட்டுமா! மவ்லவீ இஸ்மாயீல் ஸாஹிப் நபிகளாருக்கு ஒரு சாகோதரனுடைய அந்தஸ்த்தைத் தவிர வேறொன்றும் கொடுக்கத் தயாராயில்லை என்பதையும் புரிந்து கொள்ளலாம்.

இவர்தமது நூலில் ஓரிடத்தில், அண்ணல் நபிகளாரைப் புகழ்வதைக் குறித்து இவ்வாறு எழுதுகிறார். அதாவது,.....

*ஒரு மனிதனைப் புகழ்வதைப் போன்றே (நபிகளாரை) புகழுங்கள். அதைவிட சுருக்கமாகவே செய்யுங்கள்.*

*(ஆதாரம்: தக்விய்யத்துல் ஈமான் - பக்கம் 71)*

வஹ்ஹாபிய்யாக்களின் தௌஹீதைப் பார்த்தீர்களா? இவர்களது தௌஹீதின்படி அண்ணலாரை மனிதர் என்ற ஒரே

அந்தஸ்த்தைவிட அதிகமாகப் புகழ்வது விலக்கப்பட்டுள்ளது. மேலும் மவ்லவீ இஸ்மாயீல் ஸாஹிபுடைய வாக்கியப்படி ஒரு சாதாரண மனிதனை புகழ்வது போன்றுகூட நபிகளாரைப் புகழக்கூடாது. மாறாக அதைவிடக் குறைவாகத்தான் புகழ வேண்டுமாம்.

இஸ்லாமிய சகோதரர்களே! நீங்கள் கொண்டுள்ள உங்களின் ஈமானுக்குரிய ரோஷத்தையும், நபிகளார்மீது கொண்டுள்ள நேசத்தையும் முன்னிறுத்திக் கூறுங்கள். ஒரு முஃமின் அதுவும் அல்லாஹ் ரஸூலை ஏற்றுக் கொண்டவன் இறைத் தூதரான ரஸூலுல்லாஹ்வை ஒரு சாதாரண மனிதனைப் புகழ்வதைப் போன்றுதான் புகழ்வானா? ரஸூலுல்லாஹ்வை ஒரு சாதாரண மனித அந்தஸ்த்தில் நிறுத்தி புகழ்வதை அவர்களை இகழ்வதற்கொப்பான ஒரு செயல் என்று கருதமாட்டானா? ஒரு அரசனை? வெறும் மனிதன் தான் என்று கூறுதல் அவ்வரசனை அவமதித்ததகாதா? இவ்வளவு ஏன்! உங்களின் தந்தை ஆசிரியர், ஷைகு போன்றோரை வெறும் மனிதன் என்பதாகக் கூறிப் பாருங்களேன். உங்களின் மனசாட்சியைக் கேட்டுப் பாருங்கள். இப்படிக் கூறுவது அவர்களை இழிவுபடுத்தியதாகாதா?

இதில் கவனிக்க வேண்டிய முக்கியமான விஷயம் யாதெனில்,.... இறைவன் எப்படியெல்லாம் தனது ஹபீபாகிய தூதரை திருமறையில் புகழ்ந்துள்ளான் என்பதை மவ்லவீ இஸ்மாயீல் ஸாஹிப் பார்க்கவில்லையென்பது தான்.

**இறைவன் தனது திருமறையில் பெருமானாரைப் புகழ்ந்து கூறியிருப்பதைப் பாருங்கள்.**

சர்வ லோகத்திற்கும் (ரஸூலுல்லாஹ்) அருட் பிழம்பாயிருக்கின்றனர். அல்குர்ஆன்

சர்வ லோகத்தாருக்கும் (ரஸூலுல்லாஹ்) அச்சமூட்டி எச்சரிக்கை செய்பவர்களாயிருக்கின்றனர். அல்குர்ஆன்



(உலகின் துவக்க நாளிலிருந்து யுகமுடிவுநாள் வரை) சகலருக்கும் இறைவனின் தூதராக இருக்கின்றனர். அல்குர்ஆன்

மனித வர்க்கமனைத்துக்கும் (ரஸூலுல்லாஹ்) போதுமானவர் களாயிருக்கின்றனர். அல்குர்ஆன்

(ஏறத்தாழ ஒரு லட்சத்தி இருபத்தி நான்காயிரம் நபிமார்களுக்கும் இறுதியானவர்களாக) நபித்துவத்திற்கு முத்திரை தரிக்கப் பெற்றவர்களாயிருக்கின்றனர். அல்குர்ஆன்

உண்மையைச் சொல்லுங்கள் விசுவாசிகளே!! திருமறை கூறும் மேற்கண்ட புகழ்மாலைகள் எல்லாம் ஒரு சாதாரண மனிதரைப் புகழ்வதைப் போன்றவைகளா என்ன?

அல்லது மேலே திருமறை புகழ்ந்ததைப் போன்ற ஒரு மனிதன் யாராவது வஹ்ஹாபிகளில் தென்படுகின்றார்களா? பின்னர் மேற்கண்ட வஹ்ஹாபி மவ்லவீ நமது நபிகளாரை தமது மூத்த சகோதரர் என்றும், இன்னும் நஜ்திகளது கண்ணியத்தைக் குலைப்பவர்களைப் போன்ற ஒரு சாதாரண மனிதரென்றும் எப்படிச் சொல்கிறார். அதுவும் தமது சகோதரரைப் புகழ்வதைவிட குறைவாகப் புகழுங்கள் என்று வேறு கூறுகிறார் எனில்,.....

இத்தகைய கண்ணியக்குறைவான வார்த்தை அப்பட்டமாக மரியாதையை சீர்குலைப்பதில்லையா? நபிகளாரின் மகத்துவத்திற்கு மாசு கற்பிக்கின்ற ஒன்றில்லையா? இன்னும் எந்த முஃமினாவது தனது ரஸூலின் மகத்துவத்தை மாசுபடுத்த, அவர்களின் புகழை குறைப்பதற்கு முன்வருவாரா?

பாருங்கள்! முற்கால காஃபிர்கள் கூட தங்களின் நபிமார்களை தம்மைப் போன்ற ஒரு மனிதர் தானென்று கூறியதாகத் திருமறை இயம்புகின்றது.

அவரது சமூகத்தாரில் நின்றும் காஃபிராகி விட்டார்களே ஒரு கூட்டத்தார் அவர்களின் தலைவர்கள் (தமது சமூகத்தாரை நோக்கி) அவர் (நபி) உங்களைப் போன்ற மனிதர் தானேயன்றி வேறில்லை என்று கூறினார்கள். அல்குர்ஆன்

மேலும் மவ்லானா ஜலாலுத்தீன் ரூமி ரஹிமஹுல்லாஹ் அவர்கள் தமது மஸ்னவீ ஷரீஃபில்,..

இறைவன் வெளித் தோற்றத்தில் நபிமார்களை மனித உருவில் அனுப்பினான். பின்னர் அவனே அவர்களின் குணநலன்களைப் பற்றி பிரஸ்தாபமும் செய்தான். அவை உலகில் வேறு எந்த மனிதனிடமும் தென்படவில்லை என்று கூறுகின்றனர்.

அவ்வாறாயின் விஷயம் இப்போது தெள்ளத் தெளிவாக நமக்கு விளங்கி விட்டது. அதாவது நபிமார்களது மனித இயல்புகளானது வெறும் பார்வைக்கு மட்டும் தானேயன்றி மற்றபடி வேறு எதற்குமல்ல. மேலும் மனிதருக்கு போதனை செய்வதாயின், அது, மனித உருவத்தைப் பெற்றாலன்றி இயலாத ஒன்றாகுமாதலால்,....

இறைவன் நபிமார்களை மனிதத் தோற்றத்தில் அனுப்பினான். இருப்பினும் அவர்களது சமூகத்தார் அவர்களை மனிதர்தான் எனக் கூற வேண்டுமென்றோ, அல்லது நபிமார்களை சாதாரண மனிதனைப் புகழ்வதைப் போன்றுதான் புகழ வேண்டுமென்றோ, அல்லது அதைவிடவும் குறைவாகத்தான் புகழ வேண்டுமென்றோ இறைவன் நமக்கு கட்டளையேதும் பிறப்பிக்கவில்லை.

வாசகப் பெருமக்களே! மவ்லவீ இஸ்மாயீல் ஸாஹிபின் போதனையைப் பார்த்தீர்களா? அடுத்து வேறோர் பக்கத்தில் தமது நூலில் இவர் எழுதியுள்ள ஒரு வாசகத்தைப் பாருங்கள். மேலும் இவர் எதைப் போதித்தாரோ, அதனை செயல்படுத்தியும் காண்பித்துள்ளார் என்பதை நீங்கள் நன்கு விளங்கிக் கொள்வீர்கள்.



எவ்வாறு ஒரு சமூகத்திற்கு பெருந்தனக்காரர் அல்லது பண்ணையார், கிராமத்திற்கு ஜமீன்தார் உண்டோ அதேபோன்றுதான் தமது உம்மத்திற்கு நபிமார்கள் இருக்கின்றனர்.

(ஆதாரம்: தக்விய்யத்துல் ஈமான் பக்கம் 72)

முஸ்லிம்களே! அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்கள் ஒரு ஊரின் பண்ணையார் அல்லது ஒரு கிராமத்தின் ஜமீன்தார் போன்றதோர் அந்தஸ்த்தைத்தான் தமது உம்மத்தார்களிடையே பெற்றுள்ளனர் என்று உங்களின் ஈமான் ஒருபோதும் உங்களை இவ்வாறு சிந்தித்துப் பார்க்க அனுமதிக்குமா என்ன?

இன்னும் உண்மையான ஒரு முஸ்லிம் இறைவனது பேரருள் பெற்றிலங்கும் கௌஸ் குத்பு போன்ற மகாத்மியம் வாய்ந்த வலிமார்களைக்கூட, உலகின் வாழ் அனைத்து மனிதர்களைவிட ஆயிரமாயிரம் மடங்குகள் உயர்ந்த மகோன்னதமான மதிப்புடையோர் என்று அறிந்துள்ளனராகையால்,

இந்த வஹ்ஹாபிகளின் மவ்லவீயோ சர்வ வல்லமை வாய்ந்த இறைவனின் ஹபீபான எம்பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்களை பண்ணையார், ஜமீன்தார் என்று கூறுகின்றனர் எனில்,

இத்தோடு அவர் விட்டு விட்டாரா என்றால் இல்லை! மேலும் மேலும் மேற்படி மவ்லவி ஸாஹிப் நபிமார், வலிமார் போன்றோரின் பெருமைகளை குன்றச் செய்திட வேண்டுமென்ற நபிமார் வலிமார் போன்றோர் எதையும் அறியாதவர்களென்றும், மறுமையைப் பற்றிய ஞானம்கூட அவர்களுக்குக் கிடையாதென்றும் கூறுவதைப் பாருங்கள்.

இவ்வுலகிலோ அல்லது கப்ரிலோ, அல்லது இறுதி நாளாகிய மறுமையிலோ இறைவன் தன்னடியார்களை என்ன

செய்வான் என்பதன் உண்மைநிலை யாருக்கும் தெரியாது. நபிமார் வலிமார் போன்றோருக்கும் கூடத்தெரியாது. அன்றி, தங்களுக்கு என்ன நிகழப் போகின்றதென்பதைப் பற்றியோ அல்லது பிறருக்கு என்ன நேரும் என்பதைப் பற்றிக்கூட ஒருவருக்கும் தெரியாது.

(ஆதாரம் : தக்விய்யதுல் ஈமான் பக்கம் 31)

நபிமார் வலிமார் போன்றோர்மீது இந்த வஹ்ஹாபிகள் எத்துணை துவேஷம் கொண்டிருக்கிறார்கள் பார்த்தீர்களா? எத்தனை பகிரங்கமாக நபிமார்களுக்கும், வலிமார்களுக்கும் மறுமையைப் பற்றிய ஞானமேயில்லையென்றும், அதைப் பற்றி அவர்கள் அறியாதவர்களாயிருக்கிறார்கள் என்றெல்லாம் எழுதுவதன்மூலம் தங்களின் வெறுப்பைக் கக்குககின்றனர் பாருங்கள்.

ஆனால் உண்மை நிலை என்னவெனில், உலக மாந்தர் அனைவருக்கும் கிருபையாளனாகிய அல்லாஹ் தனது நேசத்திற்குரிய நல்லடியார்களுக்கு இம்மை, மறுமை, கப்ரு, மஹ்ஷர், ஸிராத்தென்னும் பாலம், சுவர்க்கம், நரகம் போன்ற எல்லா வஸ்துக்களைப் பற்றிய எண்ணிலடங்கா ஞானமென்னும் கல்வியறிவை வழங்கியுள்ளான்.

**இதைப்பற்றி இறைவன் தனது ஃபுர்கானில்,.....**

(ஓ எனது ஹபீபாகிய முஹம்மதே) உமது இறுதி முன்னதைவிட மிகச் சிறப்பானது. இன்னும் உமது இறைவன் எவ்வளவு தருவான் எனில், அதனை நீர் பொருந்திக் கொள்வீர்.

அல்குர்ஆன்

இனி இவ்வசனத்தைப் பற்றி வேத வியாக்யானிகளின் தலைவர் என வர்ணிக்கப்படும் ஸைய்யிதுல் முஃபஸ்ஸிரீன் ஹள்ரத் இப்னு அப்பாஸ் ரளியல்லாஹுு அன்ஹுு அவர்கள் இவ்வாறு கூறுகின்றனர்.

எனது உம்மத்தினரில் ஒரு மனிதனாவது நரகில் உள்ளவரை நான் அதனை பொருந்திக் கொள்ள மாட்டேன்



என்பதாக அண்ணல் நபி ஸல்லல்லாஹுு அலைஹிவஸல்லமவர்கள் கூறினார்களென்பதாகக் குறிப்பிடுகின்றனர். (ஆதாரம் : தஃப்ஸீர் காஜின்)

இதன்றி கணக்கில்லாத ஹதீஸ்களின் வாயிலாக அண்ணல் நபி ஸல்லல்லாஹுு அலைஹி வஸல்லமவர்கள் தம்மைப் பற்றியும், தமது உம்மத்தினரைப் பற்றியும் இம்மை மறுமை பற்றியும், கப்ரு, மஹ்ஷர் போன்றவற்றில் நிகழவிருக்கும் நிகழ்ச்சியினைப் பற்றியும் அறிவித்துத் தந்துள்ளனர்.

அத்துடன் இறைவன் அண்ணல் நபியை மண்ணறையில் எவ்வாறு நடத்துவான்? முஃமின்களுக்கும், காஃபிர்களுக்கும் கப்ரில் என்ன நிகழும்? ஸிராத்துல் முஸ்தகீமென்னும் பாலத்தை எவ்வாறு கடந்து செல்வது? மறுமையில் தன்னையும் தனது உம்மத்துக்களையும் இறைவன் என்ன செய்வான் என்பதைப் பற்றியெல்லாம் நபிகளார் முன்னரே அறிவித்து விட்டனர்.

ஆதமுடைய மக்களில் எல்லோரையும்விட நான் உயர்ந்த ஸ்தானத்தில் இருப்பேன். அனைவருக்கும் முன்னதாக நான் கப்ரிலிருந்து எழுப்பப்படுவேன். அனைவருக்கும் முனனதாகவே எனது ஷஃபாஅத்தைத்தான் இறைவனின் சன்னிதானத்தில் ஒப்புக் கொள்ளப்படும் என்று நபிகளார் நவிலுகின்றனர். (ஆதாரம்: முஸ்லிம் ஷரீஃப்)

**மற்றோர் ஹதீஸில் பெருமானார் (ஸல்) அவர்கள்,...**

மறுமையில் எல்லா நபிமார்களின் உம்மத்துக்களைவிட என் உம்மத்தினரே மிகைத்திருப்பர். இன்னும் அனைவருக்கும் முன்னர் நான்தான் முதல் முதலில் சுவனத்தின் கதவுகளைத் தட்டுவேன். (ஆதாரம் : முஸ்லிம் ஷரீஃப்)

இன்னுமோர் ஹதீஸில் பெருமானார் (ஸல்) அவர்கள்,...

எல்லோருக்கும் முன்னராக நான் தான் முதன்முதலில் சென்று சுவனத்தின் கதவுகளைத் திறப்பேன். அதுபோது,

சுவனக் காவலர்களில் ஒருவரான காஜின் என்னைப் பார்த்து நீ யார் என்று வினவ, அதற்கு நான் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் என்று பதிலளிப்பேன். அதைக்கேட்டு மேற்படி காஜின் உங்களுக்காகவே நான் அமர்த்தப்பட்டிருக்கிறேன். உங்களுக்கு முன்னர் வேறு யாருக்கும் சுவனத்தின் கதவுகள் திறக்கப்படக் கூடாதென நான் உத்திரவிடப்பட்டிருக்கிறேன் என்று பதிலளிப்பார் என்று கூறுகின்றனர். (ஆதாரம் : மிஷ்காத் ஷரீப்)

ஸுப்ஹானல்லாஹ்!
அருமை நபிகள் நாதரின் மகத்துவம் தான் என்னே!

இப்படிப்பட்ட எண்ணிலடங்கா ஹதீஸ்கள் பெருமானாரின் கல்விக்கலை ஞானத்தை பறைசாற்றிக் கொண்டிருக்கும்போது எவ்வளவு துணிவிருந்தால் கொஞ்சங்கூட வெட்கமோ தயக்கமோ இன்றி நபிமார்களுக்கும் வலிமார்களுக்கும் தமது இறுதி நிலை என்னவாகுமென்று தெரியாதென்றும், தங்களின் உம்மத்தவரது முடிவு எப்படியாகுமென்பதும் தெரியாதென்று எழுதுவார்.?

முஸ்லிம்களே! மவ்லவீ இஸ்மாயீல் ஸாஹிபின் இந்த கல்வித்திறன் மிக்க பேச்சைக் கொண்டு ஈருலக நாயகர் எம்பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்களின் கால் தூசிக்குக்கூட ஒரு சிறிதும் களங்கம் ஏற்படவில்லை. ஆனால் அவரது இருதயத்தில் நபிகளாரின்மீது கொண்டிருந்த வன்மமும், குரோதமும் இப்போது அம்பலமாகிவிட்டன.

மேலும் இந்த மவ்லவீ ஸாஹிப் தமது நூலில் இஸ்லாமியக் கொள்கையைப் பற்றி இப்படிக் கூறுகிறார், அந்த மன்னாதிமன்னனின் (அல்லாஹ்வின்) பெருமை எப்படிப்பட்டதென்றால், ஒரு விநாடிக்குள் **'குன்'** என்ற ஓர் கட்டளையைக் கொண்டு அவன் நாடினால் கோடிக்கணக்கான நபிமார்களையும், வலிமார்களையும் , ஜின்களையும் மலக்குகளையும், ஜிப்ரீலையும் மற்றும் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்களுக்குச் சமமாகப் படைத்து விடுவான்.

(ஆதாரம் : தக்வியதுல் ஈமான் - பக்கம் 35)



இவ்வாசகத்தைத் திரும்பத் திரும்ப நன்குஊன்றிக் கவனிப்பீர்களேயானால், வஹ்ஹாபிகளின் உள்ளத்தில் மறைந்துள்ள திருடன் தமது கோரமான உருவத்தோடு உங்கள்முன் நிற்பதை நீங்கள் கண்டுகொள்ளலாம். காரணம் இவ்வாக்கியத்தில் மேற்படி மவ்லவிக்கு இறையாற்றலையும், அவனது வல்லமையையும் சுட்டிக்காட்டும் நோக்கம் துளியளவும் கிடையாது. மாறாக அண்ணல் நபிகளாரின் ஒப்புயர்வற்ற கண்ணியத்திற்கு, மகத்துவத்திற்கு மாசுகற்பிக்க வேண்டும். அவர்களின் புகழ்மீது புழுதிவாரித் தூற்றவேண்டுமென்பதுதான் அசல் நோக்கமென்பதைப் புரிந்து கொள்ளலாம்.

இனி எந்த வஹ்ஹாபியாவது இல்லவே இல்லை! இவ்வாக்கியத்தில் இறையாற்றலை வெளிப்படுத்து வதொன்றுதான் எங்களின் நோக்கமே தவிர, நபிகளாரின் மகத்துவத்திற்கு மாசு கற்பிக்கும் எண்ணம் துளியளவுகூட எங்களுக்குக் கிடையாதென்று சொல்வாரேயானால்,... அப்படிக் கூறும் அந்த வஹ்ஹாபியைப் பார்த்து, இப்படிச் சொல்லிப் பாருங்கள்! அந்த மன்னாதி மன்னனின் பெருமை எப்படிப்பட்டதென்றால் ஒரு விநாடிக்குள் 'குன்' என்ற ஓர் கட்டளையைக் கொண்டு கோடிக்கணக்கான குரங்குகளையும் பலநூறு கோடிக்கணக்கான பன்றிகளையும் மவ்லவீ இஸ்மாயீல் ஸாஹிபுக்குச் சமமாக படைத்து விடுவான் என்று.

பின்னர் அவர்களைக் கேளுங்கள். இவ்வாக்கியத்தில் இறையாற்றலை வல்லமையை அவனது சக்தியை வெளிப்படுத்துவது நோக்கமா? அல்லது மவ்லவீ இஸ்மாயீல் ஸாஹிபை அவமதித்தல் நோக்கமா? எது சரி! என்று கேட்டுப் பாருங்கள்.

இனி மேற்கண்ட வாக்கியத்தைத் திருப்பிச் சொல்வதுகூட குப்ரா (இறை மறுப்பா)கும். அவ்வாறு இல்லையெனில் இவ் வாசகம் நம்மிடம் இறைவனை நோக்கிச் சொல்லப்பட்ட நிந்தனைக்குரிய ஓர் வார்த்தைத்தான் என்று சொல்வோம். (அல்லாஹ் நம்மை காப்பானாக!)

மேலும் எவ்வாறு மவ்லவீ இஸ்மாயீல் ஸாஹிப் இறைவனது மகத்துவத்தை வெளிப்படுத்துகிறேன் என்னும் பெயரில் பெருமானாரின் கண்ணியத்தை சீர்குலைத்துள்ளாரோ? அதேப்போன்று இறைவனின் ஆட்சி அதிகாரத்தைப் பற்றி விபரிக்கிறேன் என்னும் பெயரில் அண்ணலாரின் உயர்நிலைக்கு குழிதோண்ட முயற்சித்துள்ளதைப் பாருங்கள்.
மேலும் அவர் கூறுகிறார்,

முன்பின் தோன்றிய எல்லா மனிதர்களும் ஜின்களும் சேர்ந்து ஜிப்ரீலைப் போன்றும், நபியைப் போன்றும் ஆகிவிட்டால்கூட, அந்த சர்வ லோக நாயகனான அல்லாஹ்வின் ஆட்சிக்கு எந்தப் பொலிவும் ஏற்பட்டு விடப்போவதில்லை! அல்லது எல்லோரும் சேர்ந்து ஷைத்தான்களாகவும், தஜ்ஜால்களாகவும் மாறிவிட்டால்கூட, இறையாட்சியின் பொலிவு ஒன்றும் குறைந்துபோய்விடப் போவதில்லை.
(ஆதாரம் : தக்விய்யதுல் ஈமான் பக்கம் 35)

இறையாட்சியின் பெருமை, சிறப்பு, மகிமை, பொலிவு , அழகு முதலியவை பற்றி எத்தனையோ பிரசங்கங்களை நீங்கள் கேட்டிருப்பீர்கள், படித்துமிருப்பீர்கள். ஆனால் அண்ணல் நபிகளாரைத் தூற்ற வேண்டும். அவர்கள்மீது புழுதிவாரித் தூற்ற வேண்டும். அவர்களின் மகத்துவமிக்க கண்ணியத்திற்கு மாசு கற்பிக்க வேண்டுமென்னும் ஒரே நோக்கத்திற்காக எழுதப்பட்ட ஒரு வாக்கியத்தை நீங்கள் இதுவரை எங்கேயும் கண்டிருக்க முடியாது.

மேலும் மேற்படி மவ்லவீ ஸாஹிப் மற்றோரிடத்தில் இறைவனது மகிமையைப் பற்றி கூறுவதைப் பாருங்கள்.



இவ்வாக்கியத்தை சற்று கவனித்துப் பார்ப்பீர்களேயாயின் உங்களின் உள்ளம் பதறிப்போய் உயிர் உடலை விட்டும் பறந்துவிடத் துவங்கிவிடும். ஆம், இந்த வஹ்ஹாபி மவ்லவீ படைப்புகளில் பெரியவரென்று நபிமார்களையும், ரஸூல்மார்களையும் குறிப்பிடுகின்றார். பின்னர் அவர்களைத்தான் சக்கிலியனைவிடத் தாழ்ந்தவர்களென்றும் கூறுகின்றார்.

முஸ்லிம்களே! உங்களின் ஈமானுடைய கண்களைச் சற்று திறவுகள். உங்களின் ரப்பாகிய இறைவன் உங்களின் முன் இருக்கிறான் என்பதையும், அவன் உங்களின் ஒவ்வொரு அசைவையும் நோட்டமிட்டுக் கொண்டிருக்கிறான் என்பதையும் ஒரு கணம் உங்களின் உள்ளத்தில் நிச்சயப்படுத்திக் கொள்ளுங்கள். அதன்பின் இப்படிப்பட்ட ஒரு வாசகம் உண்மையானதோர் முஃமினான விசுவாசியின் நாவினின்னும் பேச்சாகவோ அல்லது எழுத்தாகவோ வெளிப்பட்டிருக்க முடியுமா என்பதை நீங்களே தீர்ப்புச் செய்யுங்கள்!

இதே மவ்லவீ ஸாஹிப் பிரிதோரிடத்தில் பெரிய படைப்பு, சிறிய படைப்பு என்னும் வார்த்தை ஜாலங்களையெல்லாம் ஒருமூலையில் தூக்கியெறிந்துவிட்டு நேரடியாகவே நபிமார்களையும், வலிமார்களையும் ஒரு அணுவைவிடத் தாழ்ந்தவர்கள் என்று எழுதியுள்ளதைப் பாருங்கள். இன்னும் இந்த வஹ்ஹாபிகளது தௌஹீத் என்னென்ன விபரீதங்களையும் அக்கிரம அநியாயங்களையும் தோற்றுவிக்குமோ தெரியவில்லை.

**எல்லா நபிமார்களும், வலிமார்களும் அவனு (இறைவனு)க்கு முன்பு ஒரு இழிவான அணுவைவிடத் தாழ்ந்தவர்கள். (ஆதாரம்: தக்விய்யதுல் ஈமான் – பக்கம் 63)**

இதுவரை மேற்கூறிவரப்பட்ட மவ்லவீ இஸ்மாயீல் ஸாஹிபின் கொள்கை, கோட்பாடு, ஈமான் போன்றவை

எப்படிப்பட்டவை என்பதை தெரிந்து கொள்ளப் போதுமானவைகளாயிருக்கின்றன. நபிகளைப் பற்றி எத்தகைய நம்பிக்கையும், மதிப்பும் நபித்தோழர் பெருமக்கள் கொண்டிருந்தனரோ அதைப் போன்றுதான் மவ்லவீ இஸ்மாயீல் ஸாஹிபுடைய சொல்நடை அமைந்துள்ளதா? அல்லது நஜ்தீ வஹ்ஹாபிகளின் இகழ்ச்சியும் நிந்தனையும் நிறைந்துள்ளதா என்பதை நியாய உணர்வுள்ளம் கொண்ட முஃமின்கள் தீர்மானித்து விடுவர்.

போகிறபோக்கில் மவ்லவீ இஸ்மாயீல் ஸாஹிப் ஒரு முஸ்லிம் என்ன பாவம் வேண்டுமானாலும் செய்யலாம் என்று தூண்டிவிட்டுள்ள ஒரு சில வாசகங்களையும் பார்த்துக் கொண்டே செல்லுங்கள். புறத்தோற்றத்தில் பிறரைவிட அதிகமதிகம் தொழுகை, நோன்பு, தஸ்பீஹ் நஃப்பில் போன்ற வணக்க வழிபாடுகளில் திளைத்திருப்பதைப் போன்று காட்டிக்கொள்ளும் வஹ்ஹாபிகள், உண்மையில் அந்தரங்கத்தில் எத்துணை ஆபாசமானவர்கள், அருவருக்கத் தக்கவர்கள் என்னும் உண்மையை ஓரளவுக்கு நீங்கள் இதுவரை புரிந்து கொண்டிருப்பீர்கள். இப்போது இதையும் பாருங்கள்.

***பிறரது வணக்க வழிபாடுகள் சாதிக்க முடியாதவை களைக்கூட பரிபூரணமான தௌஹீதுடையவரது பாவங்கள் சாதித்துவிடும். (ஆதாரம்: தக்விய்யதுல் ஈமான் – பக்கம் 23)***

இதற்குமுன் எடுத்துக் காட்டப்பட்ட வாசகங்களிலிருந்து நபிமார், வலிமார் போன்றோரை இழிவுபடுத்துவதைக் கொண்டு மட்டுமே வஹ்ஹாபிகளது தௌஹீதென்னும் கொள்கை பூரணத்துவத்தைப் பெறும் என்பதைக் கண்டீர்கள்.

இப்போது அந்த இறையன்பர்களை இழிவுபடுத்தி நிந்தித்தற்கு மவ்லவீ இஸ்மாயீல் ஸாஹிப் இவ்வாக்கியத்தில் சுபச்செய்தி அறிவிக்கின்றார். இனி என்ன வேண்டுமானாலும் செய்யலாம். எத்தனை பாவங்கள் ஹராமான



அழிச்சாட்டியங்கள் வேண்டுமானாலும் செய்யலாம். ஏனெனில், பிறருடைய வணக்க வழிபாடுகள் சாதிக்க முடியாதவற்றைக்கூட பரிபூரணமான தௌஹீதுடையவரது பாவங்கள் சாதித்துவிடும். இதனால்தான் சிறியவரிலிருந்து மிகப் பெரும் பெரியவர்களான வஹ்ஹாபிகள்கூட இன்றும் சமயம் வாய்க்கும்போது பெரும் பெரும் பாவமான காரியங்களைச் செய்வதற்கு சற்றும் தயாராவதில்லை. இதையடுத்து மவ்லவீ இஸ்மாயீல் ஸாஹிப் அவர்கள் மேலும் சொல்வதைப் பாருங்கள்.

***இறையச்சம் மிகுந்த ஒரு பிரிவினைவாதியைவிட தௌஹீத் வாதியான ஒரு பெரும்பாவி ஆயிரம் மடங்கு உயர்ந்தவன். (ஆதாரம்: தக்விய்யதுல் ஈமான் – பக்கம் 23)***

இக்கூற்றைக் கொண்டு நமக்குக் கிட்டும் படிப்பினை யாதெனில், வஹ்ஹாபிகள் கூறுவதைப்போன்று ஒருவன் பாவம் செய்தாலும் கூட, அவன் தௌஹீத்வாதியாக இருப்பதால் அப்பாவங்களின் காரணங்கொண்டு அவனில் எவ்வித மாறுதலும் ஏற்படுவதில்லை. அதேபோல ஒருவன் பிரிவினைவாதியாக இருந்தால் அவன் எப்படிப்பட்ட இறையச்சமுடையோனாயிருந்தாலும் அவன் இறையச்சம் அற்றவனாகவே கருதப்படுவான்.

மேற்படி வாக்கியத்தில் பெரும் பெரும் பாவங்கள் செய்திடத் தூண்டிவிட்ட வாசகம் மறைந்தும் மறையாமல் அவ்வளவு தெளிவாக இல்லையென்று மவ்லவீ இஸ்மாயீல் ஸாஹிப் அவர்கள் நினைத்துக் கொண்டார்போலும். அக்குறையையும் ஏன்விட்டு வைப்பானேன்! என்று மிகத் தெளிவாக பளிச்சென்று முகத்திலறைந்தார்போல் அடுத்துக் கூறுகிறார்.

***ஒரு மனிதன் எவ்வளவுதான் பாவத்திலேயே மூழ்கிப் போகட்டும்! சரியான வெட்கங்கெட்டவனாகவே ஆகிப்போகட்டும்! மேலும் பிறரது பொருளை அபகரித்துத் திண்பதில் ஒருசிறு குறைகூட வைக்காதிருந்தாலும் சரியே! நன்மை தீமைக்கிடையில்***

***வேறுபாடு காணாதிருந்தாலும் சரி! இறைவனுக்கு இணை கற்பிப்பதைவிட அல்லாஹ்வையன்றி வேறொன்றை விசுவாசிப்பதைவிட மேலானதே. (ஆதாரம் : தக்விய்யதுல் ஈமான் பக்கம் 52)***

*மறந்து விடாதீர்கள்! அல்லாஹ்வையன்றி வேறு எவரை விசுவாசித்தாலும் சரி! அது நபியோ, வலியோ, மலக்கோ யாராகயிருந்தாலும் சரி! இந்த வஹ்ஹாபிகள் கருத்துப்படி அதுதான் ஷிர்க்காகும்.*

*மேலும் யார் நபியையும் வலியையும் விசுவாசித்து ஏற்றுக் கொள்ளவில்லையோ, அவன் இந்த வஹ்ஹாபிகள் கூறுவது போன்று எவ்வளவு பாவங்கள் செய்தாலும், வெட்கங்கெட்டுப்போய் விட்டாலும் மாற்றார் பொருளை அபரித்துத்தின்றாலும், நன்மை தீமைக்கிடையே வேறுபாடு காணாவிட்டாலும்கூட அப்போதும் அவன் உயர்ந்தவனே!*

*ஆம்! இத்தகைய கொள்கைக் கேட்பாடுகளைப் பார்த்தால் இந்த வஹ்ஹாபிகளைவிட நாஸ்திகர்கள் நல்லவர்களாகி விடுவார்கள்போல் தெரிகிறது. காரணம், அவர்களும் இறைவனுடன் யாரையும் இணைவைப்பதில்லை. (இறைவனையே அவர்கள் நம்பாதபோது அவனுடன் யாரை இணை வைக்க முடியும்) மேலும் இந்த நாஸ்திகர்கள் இறைவனைத் தவிர நபியையோ, வலியையோ அல்லது வேறு யாரையுமே அவர்கள் விசுவாசிப்பதில்லை.*

*ஆனால் மவ்லவீ இஸ்மாயீல் ஸாஹிப் அப்படிப்பட்டவரல்ல! குறைந்தபட்சம் எம்பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்களையேனும் ஏற்றுக் கொண்டிருப்பார் என்று யாரும் எண்ணிவிடாதீர்கள். காரணம் இவரது தௌஹீதுடைய பூரணமான நிலையில் பெருமானார் (ஸல்) அவர்களை விசுவாசிப்பதை, ஏன்? நபிகளாரின் நினைவு வருவதைக்கூட மவ்லவீ இஸ்மாயீல் ஸாஹிப் தமது 'ஸிராத்தே முஸ்தகீம்' என்னும் நூலில் மிக வன்மையாகக் கண்டிக்கிறார்.*



**என்ன கொடுமை இது?**

***தொழுகையில் ஷைகு அல்லது அவர் போன்ற பெரியார், ஏன் நாயகமேயானாலும் சரியே! அவர்களின் நினைவில் மூழ்குவதானது தனது ஆடு, மாடு, கழுதையுடைய எண்ணத்தில் மூழ்குவதைவிட மிகக் கெட்டதாகும்.***

***(ஆதாரம்: ஸிராத்தே முஸ்தகீம் பக்கம் 95)***

*இவ்வாசகத்தைப் பற்றி நாம் மேலும் விளக்கத்துடன் விபரிக்க வேண்டுமா என்ன? பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் நினைவு தொழுகையில் மிகமிகத் தேவையான ஒன்றென இஸ்லாமியக் கொள்கைகள் வலியுறுத்துகின்றன. இதனால்தான் தொழுகையில் அத்தஹிய்யாத்துடைய இருப்பின்போது 'அஸ்ஸலாமு அலைக்கும் அய்யுஹன் நபிய்யு' (நபிகள் நாதரே! உங்கள்மீது ஸலாம் உண்டாவதாக!) என்று கூற வேண்டுமெனப் பணிக்கப்பட்டுள்ளது. மேலும் உங்களின் உள்ளத்தில் அண்ணல் நபிகளாரின் திருவுருவமான (தாத்தை) ஆஜர்படுத்திக் கொள்ளுங்கள். நபிகளாரது குணநலன்கள்மீது ஒருமித்த ஆழ்ந்த சிந்தனை செலுத்துங்கள். அதன்பின்னர், ஓ! நபிகளாரே! உங்கள்மீதும் ஸலாமும் இறைவனின் ரஹ்மத்தும் பரக்கத்தும் உண்டாவதாக எனக் கூறுங்கள். இன்னும் நீங்கள் சொல்லும் ஸலாம் நிச்சயம் பெருமானாரைப் போய் சேருகிறதெனத் திடமாக நம்புங்கள். திருநபியவர்களும் தமது சிறப்புக்குத் தக்கவாறு இதற்குரிய பதில் தருவார்களென இமாம் கஜ்ஜாலி ஹுஜ்ஜத்துல் இஸ்லாமில் கூறுகின்றனர்.*

*(ஆதாரம்: இஹ்யாவுல் உலூம் பாகம் 1 பக்கம் 10)*

*ஸுப்ஹானல்லாஹ்! அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் மகத்துவம்தான் எத்தனை உயர்ந்தது! கலிமாவில் பாங்கில், இகாமத்தில், ஏன்!*

*தொழுகையில் கூட இறைவன் தன்னைப் பற்றிக்கூறும்போது, தனது ரஸூலைப் பற்றியும் கூறியிருக்கின்றான்.*

*அதுமட்டுமா! ஒவ்வொரு இடத்திலும் அவர்களின் நினைவு அவர்களைப் பற்றிய ஆழ்ந்த ஒருமித்த சிந்தனை உயிருக்கு நிம்மதியளிப்பாதாக அல்லவா உண்மை விசுவாசிகளுக்கு அமைந்துள்ளது. ஆனால் நஜ்திகளான வஹ்ஹாபிகளுக்கோ நபிகளாரின் நினைவு மாடு கழுதையுடைய நினைவைவிட மிக இழிவாகத் தோன்றுகிறது.*

*மவ்லவீ இஸ்லாயீல் ஸாஹிபை அடுத்து இரண்டாம் ஸ்தானத்தின் இமாமான மவ்லானா ரஷீத் அஹ்மத் கங்கோஹி ஸாஹிபைப் பற்றி, இந்திய வஹ்ஹாபிகள், தேவ்பந்திகளிடையே மேற்படி மவ்லானா ரஷீத் அஹ்மத் கங்கோஹி ஸாஹிபுக்கு மிகப் பெரும் ஸ்தானம் வழங்கப்பட்டுள்ளது. ஆதலால் நாமும் அவரது உயர்நிலையைக் கருத்தில் கொண்டு தாழ்ந்த நிலையிலுள்ள எந்த ஒரு விஷயத்தையும் பேச மாட்டோம். இருப்பினும் மேற்படி மவ்லவீ ஸாஹிப் அல்லது அவரது மாணவர்களான மவ்லவீகள் அல்லது அவரது முரீதீன்கள் எழுதியவற்றிலிருந்து சில வாசகங்களை உங்கள்முன் எடுத்துக் காண்பிக்கிறோம். அதன்மூலம் வாசகப் பெருமக்களாகிய நீங்கள் மவ்லவீ ரஷீத் அஹ்மத் கங்கோஹி ஸாஹிப் எத்தகைய சிந்தனையோட்டமுள்ள கொள்கைவாதி என்பதை நீங்கள் அறிந்து கொள்ளலாம்.*

*இந்நூலில் முன்னால் விபரிக்கப்பட்ட நஜ்தி வஹ்ஹாபிகளது கூட்டத் தலைவராகிய முஹம்மத் இப்னு அப்துல் வஹ்ஹாப் நஜ்தியைப் பற்றி மவ்லவீ ரஷீத் அஹ்மத் கங்கோஹி மிகவுயர்ந்த நல்லெண்ணமும் அபிப்பிராயமும் உடையவர். அத்துடன் திருத்தூதுவ நிந்தனையாளர்களான வஹ்ஹாபிகளை மவ்லானா ஸாஹிப் மிக நல்லவர்களென்றும் சாட்சி பகர்கிறார். அவரே கூறுவதைக் கேளுங்கள்,*



***முஹம்மத் இப்னு அப்துல் வஹ்ஹாப் நஜ்தியைப் பின்பற்றுபவர்கள் வஹ்ஹாபிகள் என்றழைக்கப்படுகின்றனர். அவரது கொள்கைகள் மிகவும் உயர்ந்தவை. அவருடைய மத்ஹபு ஹன்பலியாகும். அவரது குணத்தில் சற்று கடுமை இருந்தது. அவரைப் பின்பற்றுவோர் மிகவும் நல்லவர்கள்.***

***(ஆதாரம் : ஃபதாவா ரஷீதிய்யா பாகம் 1 பக்கம் 119)***

*திருத்தூதுவ நிந்தனையாளர்களையெல்லாம் ஒன்று திரட்டிக் கொண்டு மக்கா, மதீனா போன்ற புனி நகரங்களில் நுழைந்து தமது அராஜகத்தை அழிச்சாட்டியத்தை அவிழ்த்துவிட்ட அதே முஹம்மத் இப்னு அப்துல் வஹ்ஹாப் நஜ்திதான். ஆம்! இஸ்லாத்தின் அறிஞர் பெருமக்களான உலமாப்பெருமக்களையும் அண்ணலாரின் வழித்தோன்றல்களான குடும்பத்தினரையும் கொஞ்சங்கூட ஈவிரக்கமின்றி கொன்று குவித்த கூட்டத்தின் தலைவன் முஹம்மத் இப்னு அப்துல் வஹ்ஹாப் நஜ்தியைப் பற்றித்தான் மவ்லானா ஸாஹிப் மேற்கண்டவாறு நற்சாட்சிப் பத்திரம் தருகிறார். சந்தேகம் வேண்டாம்! இதே வஹ்ஹாபிகள் தான் மக்கா, மதீனா வாழ் பெண்களின் கற்பை பட்டப் பகலிலேயே சூரையாடினர். திருநபியவர்கள் கொலு வீற்றுள்ள மஸ்ஜிதுன் நபவீயாகிய பள்ளியிலிருந்த விளக்குச் சரங்கள், விளக்குத் தூண்கள் விலை உயர்ந்த விரிப்புக்கள் அனைத்தையும் கொள்ளை கொண்டு அவற்றை நஜ்துப் பிரதேசத்திற்கு அள்ளிச் சென்றவர்கள் உண்மைதான். இதே அப்துல் வஹ்ஹாப் நஜ்தீயால் தொகுக்கப்பட்ட நூலாகிய கிதாபுத் தௌஹீத் விளைவித்த குழப்பம்தான் இந்திய நாட்டின் கோடிக்கணக்கான இஸ்லாமியர்கள் இன்றுவரை ஸுன்னி, வஹ்ஹாபி என்னும் பெயரில் ஒருவருக்கொருவர் சண்டையிட்டுக் கொண்டுள்ளனர். இத்தனையும் செய்த அந்த முஹம்மத் இப்னு அப்துல் வஹ்ஹாப் நஜ்தியைத்தான் மௌலானா ரஷீத் அஹ்மத் கங்கோஹி மிகமிக நல்ல மனிதரென்றும், அவரது கொள்கைகள் உயர்ந்தவையென்றும், அவரைப் பின்பற்றுவோர் மிகப்பெரும் பாக்கியவான்களென்றும் தமது ஃபதாவா ரஷீதிய்யாவின்*

மூன்றாம் பாகத்தில் இப்படிக் கூறுகின்றார்.

***முஹம்மத் இப்னு அப்துல் வஹ்ஹாபை ஜனங்கள் வஹ்ஹாபி என்றழைக்கின்றனர். அவர் மிகவும் நல்லவர் ஹன்பலி மத்ஹபைச் சார்ந்தவரெனக் கேள்விப்படுகிறேன். மேலும் அவர் ஹதீஸின்படி முழுக்க முழுக்க நடப்பவராயிருந்தார். பித்அத் (அனாச்சாரம்) மற்றும் ஷிர்க் (இணைவைத்தல்)குகளைத் தடுத்தார்.***

***(ஆதாரம்: ஃபதாவா ரஷீதிய்யா பாகம் 3 பக்கம் 79)***

**எது ஷிர்க் – இணைவைத்தல்?**

இங்கு வாசகப் பெருமக்களுக்கோர் சந்தேகம் தோன்றலாம். அதாவது, முஹம்மத் இப்னு அப்துல் வஹ்ஹாப் நஜ்தீ ஹதீஸைத்தானே பின்பற்றி நடந்தார்? அனாச்சாரங்களையும் இணைவைத்தலையும் தானே தடுத்தார்! இவையனைத்தும் நல்லவைதானே என்பதாக. ஆனால் உண்மை அதுவல்ல. மாறாக இது ஓர் மாபெரும் ஏமாற்றுச் சதிவேலை என்றுதான் சொல்வோம். காரணம் இஸ்லாமியர்களிடையே ஷிர்க், பித்அத் போன்றவற்றுக்கு என்ன கருத்து வழங்கப்படுகின்றதோ, அதன்படி வஹ்ஹாபிகள் செயல்படவில்லை. மாறாக இந்த வஹ்ஹாபிகளின் அகராதிப்படி ஷிர்க், பித்அத் என்பதற்கு இவர்கள் ஒரு புதுமாதிரியான விளக்கம் தருகின்றனர்.

அதைப்பற்றி மேற்படி முஹம்மத் இப்னு அப்துல் வஹ்ஹாப் நஜ்தீ தமது நூலான கிதாபுத் தௌஹீதில் தரும் சில விளக்கங்களைத் தருகிறோம். அதைக்கொண்டு மேற்படி வஹ்ஹாபிய இயக்கத் தலைவர் எந்த அளவிற்கு ஹதீஸைப் பின்பற்றினார்? என்பதை நீங்களே தெரிந்து கொள்வீர்கள்.

எவரேனும் நபியோ அல்லது அவரைப் பின்பற்றுவரோ தமக்கு இறைவனிடம் ஷஃபாஅத்துச் செய்வார் என்றோ அல்லது உதவுவார் என்றோ நம்பிக்கைக் கொண்டால் அவர், அந்த நபியை அல்லது அவரைப் பின்பற்றியவரை



வணங்கியவராவார். இது ஷிர்க்குடைய தரத்திலேயே மிகக் கெட்ட ஒன்றாகும். (ஆதாரம்: கிதாபுத் தௌஹீத்)

கேட்டீர்களா? நமக்காக நபிமார்கள் இறைவனிடம் ஷஃபாஅத்துச் செய்வார்களென்று நம்பினால் அது வஹ்ஹாபிகளிடம் ஷிர்க்கிலேயே ஆக மகா கெட்ட ஷிர்க்காகும். ஆனால் திருமறையிலும் நபிமொழியிலும் கணக்கற்ற ஆயத்துக்களும் ஹதீஸ்களும் ஷஃபாஅத்தைக் குறித்தே காணப்படுகின்றன. எனினும் வஹ்ஹாபிகள் அதையெல்லாம் நம்புவதில்லை.
மேலும் கேளுங்கள், யார் தமது நபிமார்களைத் தமது வலியா (காரிய கர்த்தராக நேசராக, பாதுகாவலரா)க நம்பிக்கை கொண்டவர்களோ, அவர்களும் அபூஜஹ்லும் ஷிர்க் செய்வதில் சமமானவர்களே! (ஆதாரம்: கிதாபுத் தௌஹீத்)

ஒரு அடிமை, தனது எஜமானனை தனக்கு வலியாக (பாதுகாவலனா)கக் கருதுகின்றான். ஒரு மனைவி தன் கணவனை தனக்குவலியா (நேசனாக, காரிய கர்த்தனா)கக் கருதுகின்றாள். ஒரு பெண் தன் தந்தையை தனக்கு வலியா(காப்பாளரா)கக் கருதுகின்றாள், இப்படி உலகமுழுவதுமே ஒருவர் மற்றவரை தமது வலியாக, நேசராக, காரிய கர்த்தராக, காப்பாளராக உதவுபவராக எண்ணியே வாழ்ந்து கொண்டுள்ளனர்.

மேலும் வஹ்ஹாபிகள்கூட தமது அன்றாட வாழ்க்கையிலும் இதனைப் பின்பற்றத்தான் செய்கின்றனர். ஆனால் ஒரு முஸ்லிம் ஈருலக நாயகர் எம்பெருமானார் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை தனக்கு வலியாக, தன் நேசராக, தனது பாதுகாவலாக, தன் காரிய கர்த்தராக, தனக்கு உதவுபவராக நம்பினால், இந்த முஹம்மத் இப்னு அப்துல் வஹ்ஹாப் நஜ்தி மற்றும் அவரைப் பின்பற்றும் வஹ்ஹாபிகளுடைய கருத்துப்படி அவரும்அபூஜஹ்லும் ஷிர்க் செய்வதில் சமமானவர்களாகக் கருதப்படுவர். ஆனால்

இறைவன் என்ன சொல்கிறான் என்பதைப் பாருங்கள்.

**யார் இணைவைப்பவன்?**

***திடனாக அல்லாஹ்வும், அவனது ரஸூலும் உங்களுக்கு வலியாக இருக்கின்றனர். அல்குர்ஆன்***

அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாஅத்தினருக்கும், வஹ்ஹாபிகளுக்குமிடையே மிகமிச் சாதாரண மேம்போக்கான வேறுபாடு வித்தியாசம்தான் எனக் கூறுவோர் தமது கண்களை நன்றாகக் கசக்கிவிட்டுக் கொண்டு பார்க்க வேண்டும். இவ்வேறுபாடு என்ன வெறும் மேம்போக்கானதா என்ன? அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாஅத்தின் கொள்கைப்படி அல்லாஹ்வையும் அவனது ரஸூலையும் ஒரு முஸ்லிம் தனது வலியாக நம்பிக்கைக் கொள்ள வேண்டியது மேற்கண்ட திருமறை வசனத்திற்கேற்ப மார்க்கக் கொள்கையில் அடிப்படையான ஒன்று. இனி திருமறையின் ஏதாவது ஓர் வசனத்தை ஏற்க மறுத்தாலும் அது குஃப்ரா (இறைமறுப்பா)கும். ஆனால் இந்த வஹ்ஹாபிகளிடத்திலோ, ரஸூலுல்லாஹ்வை தனது வலியென்று நம்புதல் மிகக் கெட்ட ஷிர்க்காகும். மீறி ரஸூலுல்லாஹ்வைத் தமது வலி என்று நம்பும் ஒரு முஸ்லிமும் அபூஜஹ்லும் ஷிர்க் செய்வதில் சமமானவர்கள்.

இதோ இந்த வஹ்ஹாபிகளின் இமாம் கூறும் மற்றோர் வாசகத்தைப் பாருங்கள்.

நபிமார் வலிமார் போன்றோரின் கப்ரை நோக்கி (ஜியாரத்துக்காக) பயணம் செய்வது விக்கிரகங்களை நோக்கி பயணம் செய்வதைவிட மகா கெட்ட ஷிர்க்காகும். (அதாவது லோக நாயகர் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் புனிதமிகு ரவ்ளா ஷரீபை தரிசிக்கும் எண்ணத்தோடு பயணம் செய்யும் ஹாஜிகள் கூட மிகக் கொடிய முஷ்ரிக்கு (இணைவைப்பவர்)களே!

(ஆதாரம் : கிதாபுத் தௌஹீத்)



இப்போது மவ்லானா ரஷீத் அஹ்மத் கங்கோஹி ஸாஹிப் முஹம்மத் இப்னு அப்துல் வஹ்ஹாப் நஜ்தியை முற்ற முழுக்க ஹதீஸைப் பின்பற்றுபவர் ஷிர்க் பித்அத் போன்ற அனாச்சாரங்களைவிட்டு தடுப்பவர் என்று கூறுவதன் அர்த்தமென்ன என்பதை வாசகர்களாகிய நீங்கள் புரிந்து கொண்டிருப்பீர்களென எண்ணுகிறேன்.

மேலும் உண்மை என்னவென்றால், நபிகளாரை இழித்துப் பழிப்போரும் நபிமார் வலிமார்களை நிந்தனை செய்வோரும் தான் ஹதீஸ்களை முழுமையாக பின்பற்றுபவர்கள் மற்றும் ஷிர்க் பித்அத் போன்றவற்றை தடுப்பவர்கள் என்பது மவ்லானா ஸாஹிபவர்களின் கருத்துபோலும்.

அதன்றி நபிகளாரின்மீது ஸலவாத்து மற்றும் ஸலாம் சொல்வதை எதிர்ப்பவர்களும், நபிமார் வலிமார்களை சங்கையாக்கி கண்ணியப்படுத்துபவர்களை எதிர்ப்பவர்களும்தான் உண்மையான மார்க்கப்பற்று நிறைந்தோரும் ஸுன்னத்தைப் பேணி நப்படவர்கள் என்பது மவ்லானா ஸாஹிபவர்களின் எண்ணம்.

இதையே மற்றோர் வகையாகக் கூறினால், ஒருவன் தீவிரமான உறுதி வாய்ந்த வஹ்ஹாபியாக இருக்க வேண்டும். அப்போதுதான் அவன் மார்க்கப்பற்று நிறைந்தோனாயும் ஸுன்னத்துக்களை பேணி நடப்பவனென்றும் கருதப்படுவான். எனவே இன்றுள்ள வஹ்ஹாபிகளைப் பற்றி மேற்படி மவ்லானா ஸாஹிப் என்ன சொல்கிறாரென்று பாருங்கள்.

***இக்காலத்தில் மார்க்கப் பற்றுள்ளோரையும் ஸுன்னத்துக்களைப் பேணி நடப்போரையும் தான் நம்மிடையே (நமது நாட்டில்) வஹ்ஹாபி என்றழைக்கப்படுன்றது.***

***(ஆதாரம் : ஃபதாவா ரஷீதிய்யா பாகம் 2 பக்கம் 11)***

மேற்கூறப்பட்ட வாசகங்களிலிருந்து முஹம்மத் இப்னு அப்துல் வஹ்ஹாப் நஜ்தியின்மீது மௌலானா ரஷீத் அஹ்மத் கங்கோஹி ஸாஹிப் எவ்வளவு அபிமானமும், நல்லெண்ணமும், ஈடுபாடும் கொண்டுள்ளார் என்பதைப் பற்றி நன்கு விளங்கியிருப்பீர்கள்.

இனி இப்னு அப்துல் வஹ்ஹாப் நஜ்தியின் வாரிசைப் போன்று கருதப்படும் இந்திய திருநாட்டில் இப்னு அப்துல் வஹ்ஹாப் நஜ்தியின் பட்டத்து இளவரசருமான மவ்லவீ இஸ்மாயீல் தெஹ்லவி ஸாஹிப் (இவர்தான் இப்னு அப்துல் வஹ்ஹாப் நஜ்தியின் கிதாபுத் தௌஹீத் என்னும் நூலைத் தாங்கி தக்விய்யத்துல் ஈமான் என்னும் ஒரு நூலை எழுதி வெளியிட்டவர்) பற்றியும் அவரது நூலான தக்விய்யத்துல் ஈமானைப் பற்றியும் மவ்லானா ரஷீத் அஹ்மத் கங்கோஹி ஸாஹிப் சொல்வதைக் கேளுங்கள்.

***தக்விய்யதுல் ஈமான் என்னும் நூல் மிகவுயர்ந்த ஓர் நூலாகும். ஷிர்க் மற்றும் பித்அத்தை எதிர்ப்பதில் அதற்கு இணை எதுவும் கிடையாது. இதில் காணப்படும் ஆதாரங்களனைத்தும் கிதாபுல்லாஹ் வாகிய திருக்குர்ஆனிலிருந்தும், ஹதீஸிலிருந்துமே எடுக்கப்பட்டுள்ளன. இந்நூலை (தக்விய்யதுல் ஈமானை) வைத்திருப்பதும், அதனைப் படிப்பதும் அய்ன இஸ்லாமா (அதுதான் உண்மையான மார்க்கமா)கும்.***

***(ஆதாரம் : ஃபதாவா ரஷீதிய்யா பாகம் 1 பக்கம் 115)***

கண்ணியமிகும் வாசக அன்பர்களே!
மேற்படி தக்வியத்துல் ஈமான் என்னும் நூலின் வாசகக் குறிப்புக்களை முன்பே நீங்கள் பார்த்துவிட்டீர்கள். அவை உங்களின் பார்வையிலிருந்து கடந்து சென்றுள்ளன.

அதில் நபிமார்களையும் வலிமார்களையும் வகையற்றவர்களென்றும், சக்தியற்றவர்களென்றும், அறிவற்றவர்களென்றும், ஞானமில்லாதவர்களென்றும் கூறப்பட்டிருப்பதைக் கண்டீர்கள்.



அதிலும் ஓரிடத்தில் எவரது பெயர் முஹம்மத் என்றோ, அலீ என்றோ உள்ளதோ, அவர் எந்தச் சக்தியுமற்றவர் என்றும், வேறோர் இடத்தில் ரஸூல் விரும்புவதன்மூலம் எதுவுமே நடப்பதில்லையென்றும், மற்றோரிடத்தில் ரஸூலுல்லாஹ்வை ஒரு சாதாரண மனிதரைப் புகழ்வதைப் போன்று புகழுங்களென்றும் அதிலும் குறைவாகவே புகழுங்களென்றும் பிரிதோரிடத்தில், இறைவனின் சமீபத்துவத்தைப் பெற்ற எந்த அடியாராயிருந்தாலும் அவருக்கு எவ்விதச் சக்தியுமில்லையென்றும், இறைவனின் திருத்தூதரை ஓரிடத்தில் ஒரு கூட்டத்தாரின் பண்ணைக்காரர், நாட்டாண்மையென்றும், கிராமத்தின் ஜமீன்தாரைப் போன்றவரென்றும் கூறிக்கொண்டே வந்தவர் அதிலும் திருப்தியடையாது கோடிக்கணக்கான நபிமார் வலிமார் ஜிப்ரீல் போன்றோர் அண்ணல் நபிக்குச் சமமானவர்களென்றும் கூறியவர், திருத்தூதுவ நிந்தனையென்னும் தீ வஹ்ஹாபிய்யக் கொள்கையைத் தாங்கிய இவரது உள்ளத்தில் கொழுந்துவிட்டு எரியும்போது ஒவ்வொரு படைப்பும் அது ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்ல மவர்களானாலும் சரிதான்! ஒரு இழிவான அணுவைவிடத் தாழ்ந்தவர்களென்றும், ஒரு சக்கிலியனைவிட மிக மிகக்கீழ்த்தரமானவர்களென்றும் எழுதியுள்ளார்.

சுருங்கச் சொல்வதாயின் முழுக்க முழுக்க அண்ணல் நபிகளாரை இழிவுபடுத்தியும், அவர்களது கண்ணியத்தின் மீது புழுதிவாரித் தூற்றியும் எழுதப்பட்டுள்ள ஒரு நூல்தான் தக்விய்யதுல் ஈமான்.

ஆனால் மௌலானா ரஷீத் அஹ்மத் கங்கோஹி ஸாஹிபோ அந்நூலை வைத்திருப்பதும், அதனைப் படிப்பதும் 'அய்ன இஸ்லாம்' அதுதான் உண்மையான இஸ்லாமென்றும் கூறுகின்றார். இத்தனை விஷயங்களைத் தெரிந்தகொண்ட நீங்கள் அய்ன இஸ்லாம் என்பது என்னவென்பதைப் பற்றியும்

கொஞ்சம் தெரிந்து கொள்ளுங்கள்.

**உண்மையான இஸ்லாம்:**

'அய்ன இஸ்லாம்' என்பதன் கருத்தானது, இஸ்லாமிய மார்க்கத்தில் முக்கியத்துவம் வாய்ந்த ஓர் அங்கமென்றோ அல்லது ஒரு கடமையென்றோ சொல்ல முடியாது. மாறாக அதுதான் உண்மையான இஸ்லாம் என்று விளக்கப்படுத்தலாம். இன்னும் விரிவாகச் சொல்வதானால், தக்விய்யத்துல் ஈமான் என்னும் நூலின் ஒரு வாசகத்தை நீங்கள் அந்நூலிலிருந்து நீக்கி விடுவீர்களேயானால் அதற்குப்பின் உங்களிடம் இஸ்லாம் என்பதே இருக்காது. அதாவது ஈமானே பறிபோய்விடும் என்பதுதான் அய்ன இஸ்லாம் என்பதன் கருத்தாகும்.

மேலும் மவ்லானா ரஷீத் அஹ்மத் கங்கோஹி ஸாஹிப் மேற்படி தக்விய்யத்துல் ஈமானை வைத்திருப்பது அய்ன இஸ்லாம் என்று கூறியதற்கொப்ப அதனை வைத்திருந்தவர்கள் நபிகளாரின் மகத்துவத்திற்கு எப்படியெல்லாம் மாசு கற்பித்தனரென்பதை இனி அடுத்துவரும் பக்கங்களில் நீங்கள் காணலாம்.

மவ்லானா முஃப்தி அஹ்மத் யார் கான் ஸாஹிப் மத்தலில்லஹுல் ஆலியவர்கள், தமது ஜாஅல் ஹக் வ ஜஹகல் பாத்தில் (பாகம் 1 பக்கம் 401) என்னும் நூலில் தந்துள்ள ஒரு வாசகத்தை அப்படியே உங்கள்முன் வைக்கிறேன். இவ்வாசகம் 'பல்கத்துல் ஹைரான்' என்னும் நூலிலிருந்து எடுத்துள்ளார்கள். இந்நூல் மவ்லானா ரஷீத் அஹ்மத் கங்கோஹி ஸாஹிப் அவர்களின் மாணவர்களில் ஒருவரான மவ்லவீ ஹுஸைன் அலீ என்பவரால் எழுதப்பட்ட ஒரு நூலாகும். இவர் தமது நூலில் கூறுகிறார்,.

***அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் என்னை (ஹுஸைன் அலீயை) ஸிராத்துல் முஸ்தகீம் பாலத்தில் அழைத்துக் கொண்டு செல்வதாகக் கனவு கண்டேன். அப்போது நபிகளார் பாலத்தினின்றும் தவறிக் கீழே***



***விழுந்து கொண்டிருந்தனர். உடனே நான் பெருமானார் கீழே விழுவதினின்றும் தடுத்துக் கொண்டேன்.***

***(ஆதாரம் : பல்கத்துல் ஹைரான்)***

பார்த்தீர்களா! இவர்தான் மவ்லானா ரஷீத் அஹ்மத் கங்கோஹி ஸாஹிபின் அடியொற்றி நடந்த உண்மையான மாணவமணி மவ்லவீ ஹுஸைன் அலீ ஸாஹிப், தமது ஆசிரியப் பெருந்தகை இட்ட உத்திரவுக்கொப்ப தக்விய்யதுல் ஈமானை அய்ன இஸ்லாமாகக் கருதியதன் பலன் எத்துணை மாபெரும் தகுதிபடைத்தவராகி விட்டார் பாருங்கள்! அகிலங்களுக்கெல்லாம் அருட்கொடையாகிய 'ரஹ்மத்துல் லில் ஆலமீன்' என்று இறைவனால் புகழப்பட்ட எம்பெருமானார் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் ஸிராத்தென்னும் பாலத்திலிருந்து கீழே விழுந்து கொண்டிருக்கின்றனராம். இத்திருத்தூதுவ நிந்தனையாளரான மரியாதையற்ற மவ்லவீ ஹுஸைன் அலீ நபியவர்களை காப்பாற்றி விழுவதிலிருந்து தடுத்துக் கொள்கிறாராம்! (அல்லாஹ் காப்பானாக!)

முஸ்லிம்களே! ஈமான் என்னும் விசுவாசத்தை உங்களில் உள்ளத்தில் நிறத்திக் கூறுங்கள். உம்மத்தார் அனைவரையும் ஸிராத்துல் முஸ்தகீமென்னும் பாலத்தை கடந்திட உதவ செய்யவிருக்கும் நபி பெருமானாரைக் குறித்து இப்படி ஒருவர் எழுதுகின்றாரெனில், உங்களது ஈமானுடைய ரோஷம் கொதித்தெழவில்லையா?

மேலும் இங்கு மவ்லானா ரஷீத் அஹ்மத் கங்கோஹியவர்கள் கண்ட ஓர் கனவை விபரிப்பது உசிதமெனக் கருதுகிறேன். இதனை அவரது அன்புக்குப் பாத்திரமான நம்பிக்கைக்குரிய ஒருவர் விபரிக்கிறார். இது அச்சிடப்பட்டும் வெளி வந்துள்ளது.

***அவர்கள் (மவ்லானா ரஷீத் அஹ்மத் கங்கோஹி ஸாஹிப்) ஒருமுறை கனவொன்றை விவரிக்கத் துவங்கினர். அதாவது, தாருல் உலூம் தேவ்பந்த் மத்ரஸாவின் ஸ்தாபகரான மவ்லவீ காசிம் நானூத்தவீ ஒரு மணமகள் உருவில் இருப்பதைக் கண்டேன். மேலும் அவருடன் எனக்குத் திருமணமும் நடந்தது.***

***(ஆதாரம் : தத்கிரத்துர் ரஷீத் பாகம் 2 பக்கம் 245)***

*பின்னர் அதே மாதிரியாக மீண்டுமொருமுறை கனவு கண்டு அதனை கீழ்க்கண்டவாறு இப்படி விவரிக்கிறார்,..*

***நான் ஒருமுறை (மௌலானா ரஷீத் அஹ்ம கங்கோஹி ஸாஹிப்) கனவில் என்ன பார்க்கிறேன் என்றால், மவ்லவீ காசிம் (தாருல் உலூம் தேவ்பந்த் மத்ரஸாவின் ஸ்தாபகர்) மணமகளுடைய தோற்றத்திலிருக்கிறார். அவருடன் எனக்குத் திருமணமும் நடக்கின்றது. மேலும் எவ்வாறு ஒரு மனைவிக்கு அவளது கணவனிடமிருந்து ஒருவரைக் கொண்டு மற்றவருக்குப் பலன் கிடைக்குமோ, அவ்வாறே எனக்கு அவராலும், அவருக்கு என் மூலமும் பலன் கிடைக்கின்றது.***

***(ஆதாரம் : தத்கிரத்துர் ரஷீத் பாகம், 2 பக்கம் 289)***

*முதல் கனவிலேயே மவ்லானா ரஷீத் அஹ்மத் கங்கோஹிக்கும், மவ்லவீ காசிம் நானூத்விக்கும் நிகாஹ் நடந்ததென்று கூறப்பட்டதிலேயே ஒருவாறு அனைத்துமே விளங்கிவிட்டது. ஆனால் அடுத்த கனவில் விபரிக்கப்பட்ட வாசகம் திரைபோட்டு மூட வேண்டிய விஷயத்தை பகிரங்கப்படுத்தும் வண்ணம் எவ்வாறு கணவன் மனைவிக்கிடையே ஒருவரால் மற்றவருக்குப் பிரயோஜனம் கிடைக்கின்றதோ என்பதன்மூலம் வாசகப் பெருமக்கள் நன்கு உணர்ந்து கொண்டிருக்கலாம். ஆம், கணவன் மனைவியாக ஆனாலன்றி கிடைக்க முடியாத அப்பலன் இரு மவ்லானாக்களுக்கும் கிடைத்துவிட்டது.*



*ஒருவேளை இது கனவுதானே! அதனாலென்ன? என்று கூறலாம். பின்னும் கனவு மனிதனின் கட்டுப்பாட்டிலேயா இருக்கின்றது? ஷைத்தான் எந்த வடிவில் வேண்டுமானாலும் தோன்றி தனது காரியத்தை சாதித்துக் கொண்டு போவான் என்றும் சொல்லலாம்.*

*அவ்வாறாயின் ஒரு தாழ்மையான வேண்டுகோள்! இதுயார் கண்டகனவோ, அந்த மவ்லானாவின் முரீதுகளிடமோ அல்லது அவரது அபிமானிகளிடமோ அல்லது அவருடைய மாணவ மணிகளிடமோ இப்படிக் கேளுங்கள்.*

*மேற்படி கங்கோஹி ஸாஹிபின் கனவு ஷைத்தானின் வேலையா என்ன? அப்படியானால் சபிக்கப்பட்ட அந்த ஷைத்தான் தான் மவ்லவீ காசிம் தானூத்வியுடைய வடிவில் மணமகள் வேடமிட்டுக் கொண்டு வந்து மௌலானா ரஷீத் அஹ்மத் கங்கோஹியுடன் உறவு செய்து கொண்டிருந்தானா என்று கேட்டுப் பாருங்கள். மவ்லானா ரஷீத் அஹ்மத் ஸாஹிபுடைய எந்த அபிமானியும் இதனை ஏற்றுக் கொள்ள மாட்டாரென்பது என் எண்ணம்.*

*இனி இது வெறும் கனவுதான் மனதில் தோன்றிய எண்ணமல்ல. மாறாக இது இவ்விரு மவ்லானாக்களுக்குமிடையே இருந்த நெருக்கத்தைச் சுட்டிக்காட்டும் ஒரு கண்ணாடியைப் போன்றதுதான். மேற்படி கனவு என்பதாகச் சொல்லப்பட்டால்.... அவர்களிருவருக்குமிடையே விழிப்பு நிலையில் நனவுலகில் எந்த மாதிரியான தொடர்பிந்தது என்பதைப் பாருங்கள். இன்னும் இவ்விரு மவ்லானாக்களுக்குமிடையே இருந்த தொடர்பின் அந்தரங்க உண்மை நிலையைப் பற்றி வேறு யாரும் சொல்ல வேண்டாம். மாறாக அவர்களின் மெய்ஞானச் சீடர்கள், அபிமானிகள், மாணவர்களின் வாய்மொழியைக் கொண்டே நீங்கள் அறிந்து கொள்ளலாம்.*

***ஒருமுறை கங்கோஹீ ஸாஹிபின் கான்காஹ் (மெய்ஞானப் போதனைப் பள்ளி)வில் கூட்டமாயிருந்தது. அது போது ஹள்ரத் கங்காஹீ மற்றும் ஹள்ரத் நானூத்வீ ஸாஹிபின் மெய்ஞானச் சீடர்கள் (முரீதீன்கள்) மற்றும் மாணவர்களனைவரும் அங்குதிரண்டிருந்தனர். மேற்படி இரு மவ்லானாக்களும் கூட அங்கேயிருந்தனர்.***

***அப்போது ஹள்ரத் மவ்லானா ரஷீத் அஹ்மத் கங்கோஹி காதல் ரசம் ததும்பும் குரலில் ஹள்ரத் மௌலானா காசிம் நானூத்வியை நோக்கி, இங்கே சிறிது (எனது பக்கத்தில் வந்து) படுத்துக் கொள்ளுங்களேன் என்று கூற, ஹள்ரத் காசிம் நானூத்வி சிறிது நாணமுற்றாலும்கூட, மறுபேச்சு எதுவும் பேசாமல் உடனே தயக்கத்துடன் மவ்லானாவை பார்க்க... மவ்லானா ரஷீத் அஹ்மத் கங்கோஹி மீண்டும் வற்புறுத்தவே,... உடனே சட்டென்று வந்து படுத்துக் கொண்டார். அடுத்து ஹள்ரத்தவர்களும் மவ்லானா காசிம் நானூத்விக்குப் பக்கத்தில் வந்து அதே கட்டிலில் படுத்துக் கொண்டனர். இதன்பின் மவ்லானா ரஷத் அஹ்மத் கங்கோஹி காசிம் நானூத்வியின் பக்கமாகத் திரும்பிப் படுத்து தமது கைகளை அவரது மார்பின்மீது எவ்வாறு ஒரு உண்மையான காதலன் தனது காதலியின் உள்ளத்தை அமைதியுறச் செய்வானோ அப்படி நெஞ்சில் வைத்துத் தடவ மவ்லானா காசிம் நானூத்வி, மியான் என்ன செய்கிறீர் இவர்கள் என்ன சொல்வார்கள் என்று கேட்க ஹள்ரத் கங்கோஹி,... சொல்வார்கள்தான்! சொன்னால் சொல்லி விட்டுப் போகட்டும் என்று கூறினார்.***

***(ஆதாரம்: அர்வாஹெ ஸலாஸஹ் பக்கம் 289)***

இது கனவல்ல. ஆம்! விழிப்பில் நடைபெற்றதோர் உண்மை. அது மட்டுமா! இதனை இரு மௌலானாக்களும் அச்சிட்டும் வெளியிட்டுள்ளனர். இதைப்பற்றி நான் விமர்சிப்பதை பண்பாட்டிற்கு எதிரான ஒன்றெனக் கருதுகிறேன். மேலே கூறப்பட்ட வாசகங்களின் சில பகுதிகளே இதன் உண்மை நிலையை வெளிப்படுத்தப் போதுமானவையாகும்.

இங்கே சிறிது படுத்துக் கொள்ளுங்களேன்! நானூத்வி சிறிது நானமுற்றவராக, பின்னர் சட்டெனப்படுத்துக் கொண்டார்; ஹள்ரத்தும் அதே கட்டிலில்; பின்னர் நானூத்வியின் பக்கம் திரும்பி அவரதுமார்பின்மீது தம் கையை வைத்து; பின்னர் நானூத்வியின் பக்கம் திரும்பி அவரது மார்பின்மீது தம் கையை வைத்து, எப்படி உண்மைக் காதலன் தன் காதலியின் உள்ளத்தை அமைதிப்படுத்துவானோ அப்படி மியான்! என்ன செய்கிறீர்? இவர்கள் என்ன சொல்வார்கள்? ஆம் சொல்வார்கள், சொல்லிவிட்டுப் போகட்டும்....

இவைதான் இந்த வஹ்ஹாபிகளது தலைமைப்பீடத்திலிருக்கும் இவர்களது இமாம்களின் அறிய சாதனை! முரீதுகளுக்கும் அபிமானிகளுக்கும் வெட்கப்படுகின்றனர். ஏன்! நானூத்வியே நாணத்தால் கூனிக்குறுகிப் போனார்! தனிமையில் இல்லை. நாலுபேருக்கு மத்தியில் நாமிருக்கிறோம் என்பதையும் நினைவுபடுத்துகின்றார். இவர்கள் என்ன சொல்வார்கள் என்று கூறுகிறார். ஆனால் அனைத்தையும் நோட்டமிட்டுக் கொண்டுள்ள அல்லாஹ்வின் நினைவுதான் இல்லாமற் போய்விட்டதென்றால் அல்லாஹ்வுடைய அடியார்கள் பார்த்துக் கொண்டிருக்கிறார்களே! என்ற வெட்கம் கூடாவா இல்லாமற் போய் விட்டது? இவர்கள் என்ன சொல்வார்கள்? என்று நானூத்வி கேட்கிறார். ஆனால் காங்கோஹி ஸாஹிபுக்கோ பித்தம் தலைக்கேறிவிட்டது. அதன் காரணமாக நானூத்வியின் மார்பிலிருந்து கையை எடுக்கத் தயாரில்லை. தொடர்ந்து தனது கைங்கரியங்களை நடத்திக் கொண்டேயிருக்கிறார். சுற்றுச் சூழலை நினைவூட்டும் நானூத்விக்கு எத்தனை துணிச்சலாகப் பதிலளிக்கிறார் கங்கோஹி. ஆம்! சொல்வார்கள்! சொன்னால்

சொல்லிவிட்டுப் போகட்டும்.

இதற்கெல்லாம் காரணம் என்ன தெரியுமா? தக்விய்யதுல் ஈமானை அய்ன இஸ்லா (அதுதான் உண்மையான இஸ்லா)மென்று மவ்லானா ரஷீத் அஹ்மத் கங்கோஹீ ஏற்றுக் கொண்டதென்பதுதான் என் எண்ணம். ஏனெனில் மவ்லானா ஸாஹிப் கொடுத்த பத்வாவைத்தான் முன்பே பார்த்தீர்களே!

***பிறரது வணக்க வழிபாடுகள் சாதிக்க இயலாதவற்றைக் கூட, எவருடைய தௌஹீத் பூரணமாயிருக்கின்றதோ, அவரது பாவங்கள் சாதித்துவிடும். (ஆதாரம் : தக்விய்யதுல் ஈமான் பக்கம் 23)***

ஆதலினாலேயே மவ்லானா ரஷீத் அஹ்மத் கங்கோஹீ ஸாஹிபவர்களது செயல்களிலோ அல்லது கனவுகளிலோ எவ்விதக் குற்றங்குறைகளும் கண்டுபிடிக்கும் வாய்ப்பே இல்லாமற் போய்விட்டது.

மேலும் மேற்படி மவ்லானா அவர்களை ஏற்றுக் கொண்டுள்ள வஹ்ஹாபிகளிடமே சற்று விசாரித்துப் பாருங்களேன். ஹள்ரத் கங்கோஹியுடைய தௌஹீத் பரிபூரணமாயிருந்ததா? அல்லது அரைகுறையாயிருந்ததா என்று?

அவர்கள் கங்கோஹீ ஸாஹிபின் தௌஹீத் பூரணமாகத்தான் இருந்ததென்று கூறுவார்களேயானால், வஹ்ஹாபிகளின் கருத்துப்படி கங்கோஹியின் பாவம் பிறரது வணக்க வழிபாடுகளைவிட அதிக சாதனைகளைப் புரியத் தக்க ஒன்றென்பதை விளங்கிக் கொள்ளுங்கள்.

சரி! இத்துடன் மற்றோர் விஷயத்தையும் இங்கு தெரிந்து கொள்ளுங்கள்! மவ்லானா ரஷீத் அஹ்மத் கங்கோஹி ஸாஹிப் மவ்லவீ காசிம் நானூத்வியைத் தன்னோடு கட்டிலில்



படுக்கச் செய்து உண்மையான காதலனைப் போன்று உள்ளத்திற்கு அமைதியைத் தேடினாரே! அந்த மவ்லவீ காசிம் நானூத்வியின் நிலை எவ்வாறிருந்ததென்பதைப் பற்றியும் கொஞ்சம் தெரிந்து கொள்ளுங்கள்.

***மவ்லானா (காசிம் நானூத்வி) அவர்கள் சிறுவர்களோடு கேலி பேசிச் சிரித்து விளையாடுவதுண்டு. அப்போதெல்லாம் மவ்லானா முஹம்மத் யாகூப் ஸாஹிபுடைய குமாரர் ஜலாலுத்தீன் ஸாஹிபைத்தான் (அப்போது இவர் மிகவும் சிறுவராயிருந்தார்) அதிகமாகக் கேலி செய்தார்கள். சில சமயம் தொப்பியைப் பிடுங்கிக் கொள்வார். மற்றும் சில சமயங்களில் அவருடைய பைஜாமாவின் நாடாவை உருவி அவரது ஆடையையும் அவிழ்த்துவிட்டு விடுவார். (ஆதாரம் : அஷ்ரஃபுத் தன்பீஹ் பக்கம் 40)***

மேற்கண்ட வசனங்கள் யாரோ ஒரு பொறுப்பற்றவர் சொன்னதல்ல! இது அவர்களின் கூட்டத்தைச் சேர்ந்த, அவர்களால் ஹகீமுல் உம்மத் என்று வர்ணிக்கப்படும் மவ்லானா அஷ்ரஃப் அலீ தானவீ என்னும் மகா கண்ணியத்திற்குரிய மகானுடைய பயானாகும். வஹ்ஹாபி தேவ்பந்திகளின் உம்மத்துடைய இந்த ஹகீம் ஸாஹிப் கூறும் மேற்கண்ட வாசகத்தில் ஒருபோதும் ஹிக்மத் பெரும் தாத்பரியம் இல்லாமலிருக்காது என்பது என் எண்ணம்.

மவ்லானா காசிம் நானூத்வியின் சிறுவர்களோடு கேலி பேசிச் சிரிக்கும் பழக்கம் அன்றி, ஜலாலுத்தீன் ஸாஹிபுடைய தொப்பியை சில சமயம் பிடுங்கிக் கொள்ளுதல் மற்றும் சில சந்தர்ப்பங்களில் இடுப்பிலுள்ள பைஜாமாவின் நாடாவை அவிழ்த்துவிட்டு கீழே விழச் செய்தல் போன்ற ‘இப்புனிதமான’ காரியங்களில் இந்த ஹகீமுல் உம்மத்துடைய தீட்சண்யம் நிறைந்த அறிவும், பின்னும் பற்பல அரும்பெரும் தாத்பரியங்கள் கொண்ட நுணுக்கங்களை வெளிப்படுத்தும் அருந்திறனும் நிச்சயம் ஒரு மிக முக்கியமான ஸுன்னத்தைக்

கண்டுபிடித்திருக்க வேண்டும். மேலும் அந்த முக்கியமான ஸுன்னத் உலகத்து மாந்தருக்கு நேர்வழிகாட்ட மிகமிக அவசியமானதென்பதையும் இந்த ஹகீமுல் உம்மத் ஸாஹிப் உணர்ந்து கொண்டிருக்க வேண்டும். ஆதலாலேயே இவ்விஷயத்தை முறைப்படி எழுதி அஷ்ரஃபுத் தன்பீஹ் என்னும் பெயரில் அச்சிட்டு நூலுருவில் வெளியிட்டுள்ளார்.

மீலாத், ஃபாத்திஹா செய்வோர், ஸலவாத்து ஸலாம் போன்றவற்றை ஓதுவோரைப் பார்த்து, இச்செயல்கள் ரஸூலுல்லாஹ்வோ, ஸஹாபாக்களோ செய்த ஒன்றல்ல:ஆதலால் இவையனைத்தும் பித்அத்தா (அனாச்சாரமா)குமென்று கூறும் மரியாதைக்குரிய பெரியோர்களது புனிதமிக்க நடைமுறை பழக்க வழக்கங்கள்தான் இதுவரை நீங்கள் பார்த்தவை.

வாசகப் பெருமக்களே! இப்போது நீங்களே நீதி நெறி நின்று இதற்கோர் முடிவைச் சொல்லுங்கள்! ஒரே கட்டிலில் ஒரு ஆணுடன் மற்றோர் ஆண் படுத்துக் கொள்ளுதல். ஒருவரை நோக்கி மற்றவர் திரும்பிப்படுத்தல், அடுத்தவர் மார்பில் கை வைத்து உண்மையான காதலனைப் போன்று நீவுதல், சிறுவர்களது இடுப்பிலுள்ள ஆடைகளை அவிழ்த்து விடுதல் போன்ற இவையனைத்தும் பித்அத்துக்களா? சுன்னத்துக்களா?

**தமது ஜமாஅத்தினரால் ஹகீமுல் உம்மத் என்றழைக்கப்படும் மவ்லானா அஷ்ரஃப் அலீ தானவீ பற்றி சில உண்மைத் தகவல்கள்**

இந்தியத் திருநாட்டில் பல்வேறு வகைகளிலும் மிக அதிகமாகப் புகழ்பெற்ற குணநலன்களைப் பெற்றவர் இவர். உதாரணமாக,.

(1) இவர் எழுதியுள்ள நூல்கள் வஹ்ஹாபி தேவ்பந்திகளின் மத்தியில் மிகுந்த வரவேற்பைப் பெற்றுள்ளன.



(2) இவர் தமது சுயலாபத்திற்காக வேண்டியும், தமது ஜீவனோபாயத்திற்காக வேண்டியும் வெகுநாட்கள் ஸுன்னத் வல் ஜமாஅத்தைச் சேர்ந்தவர்போல் இருந்திருக்கிறார். இதனால் அஹ்லெ ஸுன்னத் வல் ஜமாஅத்தைச் சார்ந்த முஸ்லிம்களை ஏமாற்றக் கூடிய ஒரு புதிய யுக்தி நிறைந்த தந்திர வழியை இவர் வஹ்ஹாபிகளுக்கு உருவாக்கித் தந்தார். அதாவது ஸுன்னத் வல் ஜமாஅத்தினரைப் போன்று வேடம் தரித்துக் கொண்டு அவர்கள் மத்தியில் புகுந்து அவர்களிடமே ஊதியமும் வாங்கிக் கொண்டு அவர்களை வஹ்ஹாபியக் கொள்கைக்கு மாற்றும் முறைதான் இவர் கற்றுத்தந்த பாடம்.

(3) இவர் தமது முரீதுக்கு (ஞானசீடருக்கு) லா இலாஹ இல்லல்லாஹ் அஷ்ரப் அலீ ரஸூலுல்லாஹ் என்றும், அல்லாஹும்ம ஸல்லி அலா ஸையிதினா வநபிய்யினா வ மௌலானா அஷ்ரஃப் அலீ என்றும் ஓதுவதை அது கனவிலோ அல்லது சுயநினைவிலோ இரண்டுமே ஆகுமான ஒன்றுதான் என்று ஒப்புக் கொண்டுள்ளார். ஏனெனில் தமது முரீதுடைய நாவு அவருடைய (முரீதுடைய) கட்டுப்பாட்டிற்குள் இல்லாமல் போய்விட்டதென்று காரணங் காட்டினார்.

(4) தமது முரீதின்கனவில் உம்முல் முஃமினீன் முஃமின்களது தாயாகிய அன்னை ஆயிஷா ஸித்தீகா ரளியல்லாஹு அன்ஹாவை பார்த்துவிட்டு அதைப்பற்றி குறிப்பிடும்போது வயது முதிர்ந்த நிலையிலுள்ள தனக்கு இளம் பொண்ணொருத்தி கிடைப்பாள் என்பதாக கனவுக்கு வியாக்யானம் செய்தார்.

(5) பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் அறிவு, ஞானம் சிறு குழந்தைகள், பைத்தியக்காரர்களது அறிவு ஞானத்திற்கு ஒப்பானது என்று (அல்லாஹ் காப்பானாக!) எழுதியுள்ளார்.

அண்ணல் நபியை இழிவுபடுத்துவதற்கென்றே தானவீ ஸாஹிபால் கண்டுபிடிக்கப்பட்ட இப்புதிய வழிமுறை

*காரணமாகத்தான் ஒருவேளை இந்திய நாட்டின் வஹ்ஹாபிகள் அவருக்கு ஹகீமுல் உம்மத் என்றும், முஜத்திதே மில்லத் என்றும் பாராட்டிப் பரவசமடைகின்றனரோ என்னவோ, இதோ தானவீ ஸாஹிப் கூறுவதைக் கேளுங்கள்.*

***அங்கு (கான்பூரில்) மீலாத் கூட்டங்களில் கலந்து கொண்டால் ஒழிய தங்குவதென்பது இயலாத ஒன்றெனக் கண்டேன். இனி மீலாத் கூட்டங்களில் கலந்து கொள்ள சிறிது மறுத்துவிட்டோமானாலும்கூட வஹ்ஹாபி என்று கூறிவிடுவார்கள். அவ்வளவுதான்! மிகுந்த இழிவுக்கும் அவமரியாதைக்கும் நாம் (அஷ்ரஃப் அலீ தானவீ) ஆளாகிவிடுவோம்.***

***(மேலும் சொல்கிறார்) எவ்வகையிலும் மீலாத் விழாக்களில் கலந்து கொண்டாலொழிய அங்கு (கான்பூரில்) தங்குவதென்பது நடவாத ஒன்றென்பதைக் கண்டேன். இனி அங்கு தங்குவது ஏற்றமாக எனக்குத் தெரிந்தது. ஏனெனில், அதில் லாபமும் இருந்தது. மத்ரஸாவிலிருந்து சம்பளமும் கிடைத்துக் கொண்டிருந்தது.***

***(ஆதாரம் : ஸைபே யமானி பக்கம் 23, 24)***
***(தொகுப்பு : மவ்லவீ மன்ஜூர் ஸம்பலி தேவ்பந்தி)***

*இனி இதே மவ்லவீ அஷ்ரஃப் அலீ தானவீ ஸாஹிப் தான் மீலாத் ஷரீபை ஷிர்க்கென்றும், பித்அத்தென்றும் ஹராமென்றும் தமது நூலில் வரிசைப்படுத்தி எழுதியவர். இவர் தமது சுயநலத்திற்காகவும், மத்ரஸாவின் சம்பளத்திற்ககாகவும் தம்மாலேயே ஷிர்க், பித்அத், ஹராமென்று கூறப்பட்ட மீலாதில் கலந்து கொள்வதை எவ்வளவு இலேசாகக் கூறுகிறார் பார்த்தீர்களா? காசுக்காக, தானே ஹராமென்று கூறிய விஷயத்திலிருந்து தன்னைக் காத்துக் கொள்ளவில்லை. இவ்வாறாக மேற்படி மவ்லவீ ஸாஹிப் நீண்ட நெடியகாலம் வரை அஹ்லெ ஸுன்னத் வல் ஜமாஅத்தினரைப் போன்று தம்மை உருமாற்றிக் கொண்டும், மத்ரஸாவிலிருந்து சம்பளம் வாங்கிக் கொண்டும் அதே நேரம் வஹ்ஹாபியக் கொள்கையையும் பரப்பிக் கொண்டுள்ளார்.*

*இதோ 'அஷ்ரஃப் அலீ ரஸூலுல்லாஹ்' என்று கனவிலும், அல்லாஹும்ம ஸல்லி அலா ஸைய்யிதினா வ மௌலானா அஷ்ரஃப் அலீ என்று விழிப்பு நிலையிலும் தனது முரீதொருவர் (மெய்ஞான சீடர்) கூறுவதை ஆகுமானதேயென்றும், தமது முரீதின் நாக்கு அவரது கட்டுப்பாட்டைவிட்டும் மீறிப்போய் விட்டதென்று காரணம் சொன்னாரோ அந்த வாசகத்தை இப்போது பாருங்கள்.*

***நான் எந்த மாதிரியான கனவு காண்கிறேனெனில் கனவில் லா இலாஹ இல்லல்லாஹ் முஹம்மதுர் ரஸூலுல்லாஹ் என்னும் கலிமாவை ஓதுகின்றேன். ஆனால் முஹம்மதுர் ரஸூலுல்லாஹ் என்கின்ற இடத்தில் தங்களின் (அஷ்ரஃப் அலீ தானவீயின்) பெயரைக் கூறுகின்றேன். எனக்கு கனவிலும் விழிப்பிலும் உங்களின் நினைவுதான் இருந்தது. இருப்பினும் நல்ல நினைவோடு விழிப்பு நிலையிலிருக்கும்போது கலிமாவைத் தவறாக ஓதிவிட்டது நினைவுக்கு வந்தவுடன் இத்தகைய தவறான எண்ணங்களை விலக்க வேண்டுமென எண்ணுகிறேன். இத்தவறு மீண்டும் நிகழ்ந்துவிடக் கூடாதென்று கருதுகிறேன். இதே எண்ணத்தோடு அடியேன் உட்கார்ந்து விட்டேன்...***

***பின்னர் மறுபக்கம் மாறிப் படுத்தவனாக கலிமாவில் செய்துவிட்ட தவறுக்கு பரிகாரம் தேடிட, பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் பேரில் ஸலவாத்து ஓதத் துவங்கினேன். ஆனால் மீண்டும் நான் என்ன சொல்கிறேனென்றால், அல்லாஹும்ம ஸல்லி அலா ஸைய்யிதினா வநபிய்யினா வ மவ்லானா அஷ்ரஃப் அலீ என்று ஓதுகிறேன். ஆனால் இப்போது நான் விழித்த நிலையிலிருக்கிறேன் கனவேதும் காணவில்லை. ஆனால்***

***சக்தியற்றவனாயிருக்கிறேன். வகையற்றவனாயுள்ளேன். எனது நாவு எனது கட்டுப்பாட்டில் இல்லை....! (என்று அஷ்ரஃப் அலீயின் முரீது எழுதியது பற்றி தானவி ஸாஹிப் பதில் கொடுக்கிறார் இப்படி....) இந்த நிகழ்ச்சியில் நிம்மதி இருக்கின்றது. ஏனெனில் எவர் பக்கம் நீர் மீளுகின்(யாரிடம் இதைப்பற்றி வினவுகின்)றீரோ, அவர் (மவ்லவீ அஷ்ரஃப் அலீ தானவீ) இறைவனின் உதவியால் ஸுன்னத்துக்களை பேணக் கூடியவராயிருக்கிறார்.***

***(ஆதாரம்: அல் இம்தாத் எழுதியவர் அஷ்ரப் அலி தானவி , வெளியீடு : தானா பவன் ஸபர் மாதம் 1336 பக்கம் 35)***

**மொழிபெயர்ப்பாளரின் உரை....**

*சமீப காலமாக தமிழகத்தின் பல்வேறு பகுதிகளில் தப்லீக் ஜமாஅத்தினர் மீலாத் கூட்டங்களில் மிகுந்த ஈடுபாடு உடையவர்களைப் போன்று தம்மைக் காட்டிக் கொண்டு வருகின்றனர். காரணம் I.S.M. தவ்ஹீத் இயக்கம், மர்கஸெ ஸலபி போன்ற வஹ்ஹாபிய இயக்கங்களுக்கும் தங்களுக்கும் தொடர்பு எதுவும் இல்லையென்பதைப் போன்ற ஒரு கருத்தை ஜனங்களிடையே ஏற்படுத்தவும், மீலாத் விழாக்களில் கலந்து கொள்வதன்மூலம் தாங்களும் ஸுன்னத் வல் ஜமாஅத்தினர்தான் என்று ஜனங்கள் நம்பவேண்டுமெனவும் இத்தகைய சதித்திட்டத்தை மேற்கொண்டுள்ளனர்.*

*மேலும் குறிப்பாக தப்லீக் ஜமாஅத்தை ஆதரிக்கக் கூடிய உலமாப்பெருமக்கள், டவுன்காஜிகள், மத்ரஸாக்களின் ஆசிரியர்கள் போன்ற இவ்வியத்திலுள்ளோர் தங்களின் குருமார்கள் கற்றுக் கொடுத்த மேற்படி கலையை தற்போது கையாண்டு வருகின்றனர். இஸ்லாமிய பெருமக்கள் இவர்களை அடையாளம் கண்டு கொள்ள வேண்டும்.*

*ஒரு சாதாரண முஸ்லிம் கூட லாஇலாஹ இல்லல்லாஹ் அஷ்ரஃப் அலீ ரஸூலுல்லாஹ் என்று சொல்வது எத்தனை மாபெரும் தவறு, பாவமான செயலென்பதை அறிவான்.*



*இதைவிட, நல்ல நினைவோடு விழித்த நிலையில் அல்லாஹும்ம ஸல்லி அலாஸையிதினா வ நபிய்யினா அஷ்ரஃப் அலீ என்று சொன்னால் அதைப்பற்றி இஸ்லாமியச் சட்டம் என்ன தீர்ப்புத் தருமென்பதையும் மிக நன்றாக அனைவரும் அறிந்தே வைத்துள்ளனர். அஷ்ரஃப் அலீயை நபி, ரஸூல் என்று கூறுவது குஃப்ர் (இறைமறுப்பு) இல்லையா? நாவு தமது கட்டுப்பாட்டை விட்டும் மீறி விட்டதென்று காரணம் சொன்னால் அது போதுமானதாகிவிடுமா?*

*ஒரு கணவன் தனது மனைவியை தலாக்குச் சொல்லியபின் எனது நாவு என் வசத்திலில்லை. ஆதலால் இவ்வாறு சொல்லிவிட்டேன் என்று கூறினால் ஷரீஅத் அதனை ஏற்றுக் கொள்ளுமா?*

*உண்மையில் தானவீ ஸாஹிபிற்குள் வஹ்ஹாபியக் கொள்கை இல்லாமலிருந்திருக்குமேயானால், உடனே அவர்; மேற்கண்ட நிகழ்ச்சி பற்றி பதிலளிக்கும்போது, நீ உடனே தவ்பா செய்! மேலும் மீண்டும் நீ சரியானபடி கலிமாவைச் சொல்லி உனது ஈமானை புதுப்பித்துக் கொள்! கனவு நிலையிலும், விழிப்பிலும் நீ மேற்கண்டவாறு கூறியது குஃப்ராகும் என்றெல்லாம் கூறியிருப்பார்.*

*ஆனால் அதற்கு மாறாக தானவீ ஸாஹிப், உமது பீர், முர்ஷித் எவரிடம் இவ்விஷயத்தைப் பற்றி தொடர்பு கொண்டுள்ளாரோ, அவர் ஸுன்னத்துக்களை மிகுதமாகப் பேணக்கூடியவர் என்று கூறி, மேலும் மேலும் அவரது தவறை ஊக்குவிக்கின்றாரெனில், (அதாவது எந்த முரீதுடைய பீர் (மெய்ஞானக்குரு) ஸுன்னத்துக்களை மிகுதமாகப் பேணக் கூடியவராயிருக்கின்றாரோ, அந்த முரீத் கனவிலும் சரி! விழிப்பிலும் சரி!! எந்த நிலையிலும் தனது ஷைகை நபியென்றும், ரஸூலென்றும் கூறிக் கொள்ளலாம். அத்துடன் தன் நாவு தனது கட்டுப்பாட்டில் இல்லையென்றும் கூறிக் கொள்ளலாம். இப்படிப்பட்ட மேற்கண்ட வாசகங்களில் தானவீ*

ஸாஹிப் பகிரங்கமாக நபிமார் மற்றும் ரஸூல்மார்களை இழிவுபடுத்தியுள்ளார். (அல்லாஹ் காப்பானாக!)

இதுமட்டுமா? இதோ முஃமின்களான விசுவாசிகளுக்கெல்லாம் தாயாயிருக்கும் ஹள்ரத் உம்முல் முஃமினீன் பற்றி அஷ்ரஃப் அலீ தானவீ எப்பேர்ப்பட்ட எண்ணம் கொண்டிருக்கிறாரென்பதைப் பாருங்கள்.

மேற்படி மவ்லவீ ஸாஹிப் தனது முதுமையடைந்த விருத்தாப்பிய நிலையில், தனது முதல் மனைவி உயிரோடிக்கும்போது இளம் கன்னிப் பெண்ணாயிருந்த தனது முரீதாகிய சிஷ்யை ஒருத்தியை திருமணம் செய்து கொண்டார்.

இது பற்றிக் கேள்வியுற்ற இவரது சகோதரர், முதிய வயதில் ஏன் இப்படி மற்றவர்களை வருத்தப்படுத்துகின்றீர் என்று கேட்டு கடிதம் எழுத,.... அதற்கிவர் பதில் எழுதும்போது பல்வேறு விஷயங்களையும் எழுதிவிட்டுஇறுதியில் இப்படி எழுதுகின்றார்.

நற்குணம் வாய்ந்த இறைச் சிந்தனையுள்ள எனது முரீத் ஒருவர் என் வீட்டில் ஹள்ரத் ஆயிஷா வரவிருக்கின்றனர் என்பதாகக் கனவு கண்டு அதைப்பற்றி அவர் என்னிடம் வந்து கேட்டபோது; ஒரு இளம் கன்னிப் பெண் எனக்குக் கிடைப்பாள் என்று எனது சிந்தனைக்குத் தோன்றிற்று.

எவ்வாறு எம்பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் ஹள்ரத் ஆயிஷாவோடு நிகாஹ் செய்து கொண்டார்களோ (அப்போது அண்ணலாரின் வயது ஐம்பதுக்கும் அதிகம் ஆயிஷா நாயகி மிகமிக இளவயதினர்) அதே கதைதான் இங்கேயும் என்று பதில் எழுதினார்.
(ஆதாரம் : அல்இம்தாத் , வெளியீடு : தானாபவன் ஹிஜ்ரீ 1335)

இஸ்லாமிய நல்லுள்ளம் கொண்டோரே! இங்கு குறிப்பிடப்பட்டவர்கள் ஹள்ரத் உம்முல் முஃமினீன் (விசுவாசிகளின் தாய்) அன்னை ஆயிஷா ஸித்தீகா ரளியல்லாஹு அன்ஹா அவர்களாகும். இவர்களைத் தமது இளவயதுடைய மனைவியோடு ஒப்பிட்டு தன் முரீதுடைய கனவுக்குப் பலன் கூறுகின்றார் தானவீ.



இனி எந்த முஸ்லிமாவது கனவில் தனது தாயைக் கண்டுவிட்டு அதனைத் தன் மனைவியுடன் ஒப்பு நோக்குவானா? இல்லை! நிச்சயமாக இல்லையென்று கூறுவீர்களேயானால், முஸ்லிம்களே! நன்றாகச் சிந்தித்துப் பாருங்கள். உலக மாந்தரின் தாயைக் கனவில் கண்டதற்குப் பலன், தனக்கு இளம் பெண்ணொருத்தி மனைவியாக வாய்ப்பாள் என்று எப்படி இவரால் கூற முடிந்தது? தானவீ ஸாஹிப் அஹ்லுஸ்ஸுன்னத் வல் ஜமாஅத்தைச் சேர்ந்தவரா? அல்லது வஹ்ஹாபி நஜ்திகளின் கூட்டத்தைச் சேர்ந்தவரா என்பதைப் பற்றி விளக்கம் தரவேண்டிய அவசியம் இனியும் உண்டா என்ன?

காலங்காலமாக இந்திய நாட்டின் உபகண்டத்திலுள்ள அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாஅத்தின் உலமாப்பெருமக்களுக்கும் தானவியை வழிபடும் வஹ்ஹாபி தேவ்பந்தி மவ்லவீகளுக்குமிடையே முனாழரா(விவாதம்) நடைபெற காரணமாயுள்ள அந்த வாசகத்தை இப்போது பாருங்கள். ஒவ்வொரு விவாத மேடையிலும் தோல்வியைத் தழுவிய பின்பும்கூட நஜ்திக் கொள்கையும், தானவியின் குணமும் வாய்ந்த வஹ்ஹாபிகள் இவ்வாசகத்தைப் பற்றி தவ்பா (பாவமன்னிப்பு) கோரத்தயாராயில்லை.

மேலும் இவ்வாசகத்தைப் பற்றி விவாதிக்க அழைத்தால் இவர்களைச் சார்ந்த பெரும் பெரும் மவ்லவிகள் கூட ஏதாவது சாக்குப்போக்குச் சொல்லி வெகுண்டோடுகின்றனர். ஆனால் அந்தரங்கத்தில் இதே மவ்லவீகள் தானவீ ஸாஹிபுடைய இத்தகைய குப்ரான வாசகங்களையும் அவை எழுதப்பட்டுள்ள

*நூல்களையும் பரப்பிக் கொண்டேதானிருக்கின்றனர். தானவீ ஸாஹிபின் அந்த வாசகம் இதோ!*

***ஜைது கூறுவதைப் போன்று பெருமானாரின் பரிசுத்தக் குணாதிசியங்களில் அவர்களுக்கு 'இல்முல் கைப்' (மறைவானவற்றைப் பற்றிய ஞானம்) உண்டு எனத் திட்டப்படுத்துவது உண்மையான ஒன்றாயிருக்குமேயானால், இங்கு பார்க்கவேண்டிய விஷயம் யாதெனில் இங்கு 'கைப்' (மறைவானவற்றை பெருமானார் அறிகின்றனர் என்னும் விஷயத்தில்) கொஞ்சத்தை மட்டும் அறிகின்றார்களா? அல்லது சகல மறைவான விஷயங்களையும் (பெருமானார்) அறிகின்றார்களா? என்பதைப் பார்க்க வேண்டும். இனி, கொஞ்சத்தை மட்டும்தான் அறிகின்றார்களெனில், இதில் பெருமானாருக்கு என்ன தனிப்பட்ட விசேஷமிருக்கிறது? இத்தகைய மறைவான ஞானம்தான் ஜைது, உமர் போன்ற ஏன்! ஒவ்வோர் மழலைக் குழந்தைக்கும், பைத்தியக்காரருக்கும், பின்னும் சகல பிராணிகளுக்கும் மற்றும் கால்நடைகளுக்கும் கூடத்தான் இருக்கின்றது?***

***(ஆதாரம் : ஹிப்ழுல் ஈமான் பக்கம் 7)***
***நூலாசிரியர் : மவ்லவீ அஷ்ரஃப் அலீ தானவீ ஸாஹிப்***

*தானவீ ஸாஹிபுடைய மேற்கண்ட வாசகத்தின் இறுதி வாக்கியமான இதில் பெருமானாருக்கு என்ன தனிப்பட்ட விசேஷமிருக்கிறது? இப்படிப்பட்ட மறைவான ஞானம் தான் ஜைது, உமர் போன்ற ஏன்! ஒவ்வோர் மதலைக் குழந்தைக்கும், பைத்தியக்காரருக்கும், பின்னும் சகல பிராணிகளுக்கும் மற்றும் கால்நடைகளுக்கும் கூடத்தான் இருக்கிறது! (அல்லாஹ் காப்பானாக)*

*பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை இழிவுபடுத்தி தானவீ ஸாஹிபால் எழுதப்பட்ட இவ்வாக்கியத்திற்கான அரபு மற்றும் அரபல்லாத நாடுகளைச் சார்ந்த தலைசிறந்த உலமாப் பெருமக்கள் தானவீ*



*ஸாஹிப் மீது குஃப்ருடைய ஃபத்வா (மார்க்கத் தீர்ப்பு) வழங்கினர். ஹுஸாமுல் ஹரமைன் ஷரீபைன் என்னும் ஃபத்வாவைப் பாருங்கள். மேலும் இவ்வாசகத்தைக் குறித்து எண்ணற்ற நூல்கள், விளக்கங்கள், கட்டுரைகளும் எழுதப்பட்டு விட்டன. அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாஅத்தின் உலமாப்பெருமக்கள் இதைப்பற்றி வஹ்ஹாபிகள் தந்த எல்லாவகையான விளக்கங்களும் தவறானவையென்றும் நிரூபித்துள்ளனர். கியாமநாள் வரை எந்த வஹ்ஹாபியும் இனிமேல் இப்படிப்பட்ட இழிசெயலில் ஈடுபடத் துணிய மாட்டார்.*

*ஆதலால் இவ்வாசகம் குறித்து இனியும் விமர்சனம் செய்யாது மவ்லவீ அஷ்ரஃப் அலீ தானவீக் கடுத்து தப்லீக் ஜமாஅத்தின் ஸ்தாபகரான மவ்லவீ இல்யாஸ் ஸாஹிபைப் பற்றி இப்போது சொல்கிறேன்.*

# தப்லீக் ஜமாஅத்தின் ஸ்தாபகர் மவ்லானா இல்யாஸ் ஸாஹிப் காந்தல்வி பற்றி சில தகவல்கள்

மவ்லவீ இஸ்மாயீல் ஸாஹிப் தெஹ்லவீ, மவ்லவீ ரஷீத் அஹ்மத் கங்கோஹீ ஸாஹிப் மற்றும் மவ்லவீ அஷ்ரஃப் அலீ தானவீ ஸாஹிப் போன்றோரைப் பற்றி இதுவரை நீங்கள் நன்கு விளங்கிக் கொண்டு விட்டீர்களேயானால்,

மேலும் அவர்களது நஜ்தி குணமும், வஹ்ஹாபியத் தன்மையும் உங்களுக்குத் தெளிவாகப் புரிந்துவிட்டதெனில், மவ்லவி இல்யாஸ் காந்தல்வி ஸாஹிபைப் பற்றி பிரத்தியேகமாக எதுவும் தெரிந்து கொள்ளத் தேவையில்லை.

ஏனெனில், நபிமார் வலிமார். போன்றோரை இழிவுபடுத்தி அவர்களது கண்ணியம் மகத்துவத்தின்மீது புழுதி வாரித் தூற்றுவதில் இவர் ஆற்றிய தொண்டுகள் என்னவென்பதைப் பற்றி தெரிந்து கொள்வதைவிட, இவ்விஷயத்தில் இவரும் மேற்கண்ட வஹ்ஹாபியத் தலைவர்களை தக்லீத் செய்தவர்தான். (எவ்விதக் கேள்வியும் கேட்காமல் அவர்களைப் பின்பற்றக் கூடியவர்) அவர்களின் அசைவைக் கொண்டுதான் இவரும் அசைந்தார். அவர்களின்றி இவரில்லையென்பதை மட்டும் தெரிந்து கொள்ளுங்கள்.

இறைவனது நிறமாகிய ஸிப்கதுல்லாஹ்வை விட இவர்மீது இப்னு அப்துல் வஹ்ஹாப் நஜ்தியின்



தௌஹீதுடைய நிறமே மேலோங்கி நின்றது.

குறிப்பாக மவ்லவீ ரஷீத் அஹ்மத் கங்கோஹீ தான் மவ்லவீ இல்யாஸுடைய மிகப்பெரிய முறப்பி (இரட்சகர்) ஆசிரியர், மெய்ஞானப் போதகர் மற்றும் ஆன்மிகக் குரு எல்லாமே.

அதாவது முஹம்மத் இப்னு அப்துல் வஹ்ஹாப் நஜ்தியை முழுக்க முழுக்க ஹதீஸ்களைப் பேணி நடப்பவரென்றும், ஷிர்க் மற்றும் பித்அத் போன்றவைகளை விட்டும் தடுக்கக் கூடிய மாபெரும் வஹ்ஹாபியத் தலைவரென்றும் தீர்ப்பளித்த ஃபத்வா தந்த அதே மவ்லவீ ரஷீத் அஹ்மத் கங்கோஹீ தான் மவ்லவீ இல்யாஸ் ஸாஹிபடைய குரு, வழிகாட்டி!

தக்வியத்துல் ஈமான் என்னும் நூலை வைத்திருப்பதும், அதனைப் படிப்பதும் தான் 'அய்ன இஸ்லாம்' உண்மையான மார்க்கமென்று ஃபத்வா கொடுத்தவரும் இவரேதான்.

இளம் பிராயத்திலிருந்தே கங்கோஹீ ஸாஹிபின் அரவணைப்பில் வளரும் வாய்ப்பு மவ்லவீ இல்யாஸுக்குக் கிடைத்தது. வஹ்ஹாபியக் கொள்கையை இவரில் மிக நன்றாகவே உருவேற்றப்பட்டுள்ளது. இதோ தப்லீக் ஜமாஅத்தின் தலைசிறந்த பிரச்சாரகர்களில் ஒருவான மவ்லவீ அபுல் ஹஸன் நத்வீ என்பவரால் வரிசைப்படுத்தப்பட்ட ஹள்ரத் மவ்லானா முஹம்மத் இல்யாஸ் அவ்ர் உன்கீ தீனி தஃவத் என்னும் நூலில் எழுதப்பட்டுள்ள வாசகத்தைப் பாருங்கள்.

***ஹள்ரத் மவ்லானா ரஷீத் அஹ்மத் கங்கோஹீ ஸாஹிபோடு எப்போதும் கூடவே இருக்கின்ற பாக்கியமும், அவரது மஜ்லிஸுகளில் கலந்து கொள்ளக்கூடிய ஓர் வாய்ப்பும் மவ்லானா இல்யாஸ் ஸாஹிபுக்கு இரவும் பகலும் கிடைத்துக் கொண்டிருந்தது.***

***(ஆதாரம் : தீனி தஃவத் பக்கம் 45)***

முன்னரே மவ்லானா ரஷீத் அஹ்மத் ஸாஹிபும் மவ்லானா காசிம் நானூத்வியும் சேர்ந்திருந்ததை நீங்கள் பார்த்தீர்கள். இப்போது மவ்லவீ இல்யாஸ் ஸாஹிபுக்கு இப்பாக்கியம் இரவும் பகலும் கிடைத்துக் கொண்டிருந்ததைக் கொண்டு மவ்லவீ இல்யாஸ் ஸாஹிபுக்கு எத்தனை உயர்ந்த ஓர் சங்கைக்குரிய ஸ்தானம் கிடைத்திருக்கும்? எந்த வஹ்ஹாபியைக் கொண்டாவது இதனை யூகிக்க முடியுமா?

மேலும் மவ்லானா ரஷீத் அஹ்மத் ஸாஹிபோடு நெருங்கி கலந்திருக்கும் பொன்னான வாய்ப்பு இவருக்கு பத்துவயதிலிந்து இருபது வயது வரை நீடித்தது. ஆக மவ்லானா ரஷீத் அஹ்மத் ஸாஹிபுடைய அரவணைப்பில் தான் மவ்லவீ இல்யாஸ் பருவமெய்தி வாலிபமுமடைந்துள்ளார். இனி அடுத்த ஓர் வாசகத்தைப் பாருங்கள்.

***மனித வாழ்க்கையில் ஒருவனது இருப்பிடம் மற்றும் சுற்றுப்புறச் சூழ்நிலைகள் ஏற்படுத்தும் மாற்றங்களை ஏற்றுக் கொள்ளக் கூடிய மிகச்சிறந்த காலமெதுவோ, அப்படிப்பட்ட ஓர் காலக் கட்டத்தில்தான் மவ்லானா இல்யாஸ் ஸாஹிபுடைய வாழ்க்கை கங்கோஹில் மவ்லானா ரஷத் அஹ்மத் கங்கோஹியுடன் கழிந்தது. கங்கோஹிக்கு அவர்கள் வந்தபோது பத்து அல்லது பதினோரு வயதுப் பாலகராயிருந்தார்.***
***ஹிஜ்ரீ 1323ல் மவ்லானா ரஷீத் அஹ்மத் கங்கோஹி ஸாஹிப் இறந்தபோது இருபது வயது வாலிபராகயிருந்தார். ஆக பத்தாண்டு காலம் மவ்லானா உடைய சகவாசத்தில் கழிந்தது.***

***(ஆதாரம் : தீனி தஃவத் பக்கம் 45)***

மேலும் பத்தாண்டு காலமும் கங்கோஹி ஸாஹிபுடைய சகவாசத்தில் வெறுமனே வாழ்க்கை கழிந்துவிடவில்லை. மாறாக சிறுவராயிருந்த போதிலும் கங்கோஹி ஸாஹிப் மவ்லவீ இல்யாஸைத் தமது மெய்ஞானச் சீடராகவும், ஆன்மிகப் புதல்வராகவும் ஆக்கிக் கொண்டார். இதைப் பற்றிய



வாசகத்தையும் பாருங்கள்,....

***தமது வழக்கத்திற்கு மாற்றமான அசாதாரண குணநலன்களின் காரணமாக, அவருடைய (மவ்லானா ரஷீத் அஹ்மத் கங்கோஹியின்) விருப்பம் மற்றும் வேண்டுகோளின் பேரில் மவ்லானா இல்யாஸ் பைஅத்துச் செய்து கொண்டார். இன்னும் மவ்லானா இல்யாஸுடைய இயல்பில் தொடக்கத்திலிருந்தே நேசமென்னும் நெருப்புப் பொரிகள் அவரது உள்ளத்தில் கனன்று கொண்டிருந்தன. மவ்லானா அவர்களுக்கு மவ்லானா ரஷீத் அஹ்மத் கங்கோஹியுடன் எப்படிப்பட்ட ஒரு மானசீகமான தொடர்பு ஏற்பட்டுவிட்டதென்றால் அவரில்லாமல் நிம்மதியில்லையென்ற நிலை ஏற்பட்டுவிட்டது. சில சமயங்களில் இரவு நேரங்களில் எழுந்து வெறுமனே மவ்லானா ரஷீத் அஹ்மத் கங்கோஹியின் முகத்தையாவது பார்க்க வேண்டுமென்று சென்றுவிடுவேன் என்று கூறுவார். (ஆதாரம் : தீனி தஃவத் பக்கம் 46)***

வாசகப் பெருமக்களே! மவ்லவீ ஸாஹிபுக்கு மவ்லானா ரஷீத் அஹ்மத் கங்கோஹியுடன் எப்படிப்பட்ட ஆழமான தொடர்புகளிருந்தன? இருவருக்குமிடையே பரஸ்பரம், எவ்வளவு அன்னியோன்னியம், பாசப் பிணைப்பு போன்றவை இருந்ததென்பதைக் குறிப்பிடும்போது இரவு நேரங்களில் கூட படுக்கையைவிட்டும் எழுந்து மவ்லானா கங்கோஹீ ஸாஹிபுடைய முகத்தையாவது வெறுமனே காணச் சென்று விடுவேன் என்று மவ்லவீ இல்யாஸ் கூறுவதிலிருந்தே புரிந்து கொள்ளலாம்.

இனி இறைவன் திருமறையில் விசுவாசிகளுக்கு மூன்று சந்தர்ப்பங்களை தனிமையான நேரமெனக் குறிப்பிடுகின்றான். மூன்று சந்தர்ப்பங்களில் பிறரது உறங்குமிடத்திற்கு அவர்களின் அனுமதியின்றி செல்லக்கூடாதென விலக்கப்பட்டுள்ளது.
இனி கணவன் தனது மனைவி உறங்குமிடத்திற்கும், மனைவி தனது கணவன் உறங்குமிடத்திற்கும் செல்வதில்

தவறேதுமில்லை.

## இது பற்றி இறைவன் திருமறையில்,....

*அவர்கள் (மனைவிமார்கள்) உங்களுக்கு ஆடையாகவும், நீங்கள் (ஆண்கள்) அவர்களுக்கு ஆடையாகவும் இருக்கிறீர்கள் என்று கூறுகின்றான். அல்குர்ஆன்*

## அடுத்து விலக்கப்பட்ட அந்நேரங்களாவன,....

*பஜ்ருடைய தொழுகைக்கு முன்னும், பகல்பொழுதில் மதியம் (உணவருந்தியபின் சற்று கண்ணயரும்) நேரமும், இஷா தொழுகைக்குப் பின்னும் ஆக இம்மூன்று சந்தர்ப்பங்களும் உங்கள்மீது மறைக்கப்படக்கூடிய தனிமையான நேரங்களாகும்.*

*ஆனால் மவ்லவீ இல்யாஸ் பத்தாண்டு வரை மவ்லவீ ரஷீத் அஹ்மத் கங்கோஹீயுடன் சேர்ந்திருக்கும் பாக்கியம் பெற்ற இவருக்கு மேற்படி மவ்லவீயுடன் ஏற்பட்ட ஆழமான தொடர்பின் காரணமாக தம்மைக் கட்டுப்படுத்திக் கொள்ளும் ஆற்றல் இல்லாமற் போய்விட்டது. ஏதாவது ஒரு வகையில் அவருடன் சேர்ந்திருக்கக் கூடிய இனிமையை பெற்றுக் கொண்டாலொழிய அவருக்கு நிம்மதியென்பது கிடையாது.*

*எனவேதான் அவர்மீது கொண்ட ஏக்கத்தின் காரணமாக தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியாத நிலையில் இரவு நேரங்களில் அவரது முகத்தையாவது காண்பதற்குச் சென்று விடுவார். வாசகர்களே! புரிந்து கொண்டீர்களா?*

*இந்த இரு மவ்லவீ மார்களுக்குமிடையேயுள்ள பரஸ்பர நேசம், பாசப்பிணைப்பு மற்றும் இரவு நேரங்களில் படுக்கையிலிருந்து எழுந்து மேற்படி மவ்லவீயை காணச் செலும் பழக்கம் போன்றவற்றை சுட்டிக் காட்டுவது நமது நோக்கமல்ல.*

*மாறாக, நாம் வாசகர்களாகிய உங்களுக்குச் சுட்டிக் காட்ட விரும்புவது யாதெனில்,... கங்கோஹீ ஸாஹிபின் தொடர்பின் பாக்கியமிருந்த அனுக்கிரஹம் எவ்வளவு தூரம் மவ்லவீ இல்யாஸ் ஸாஹிபோடு இரண்டறக் கலந்துபோய் விட்டதென்பதையும், பத்துப் பதினோரு ஆண்டுகள் வரை தொடர்ந்தாற்போல் இந்த நஜ்தி சூழ்நிலையில் கல்வியும் பராமரிப்பும் பெற்றுக் கொள்வதில் கழிந்துள்ளது என்பதையும்தான். இப்படிப்பட்ட பராமரிப்பு, கல்வி, படிப்பினையனைத்தையும் பெற்றுள்ள மவ்லவீ இல்யாஸ் ஸாஹிபுடைய நஜ்திகுணம், வஹ்ஹாபியக் கொள்கை போன்றவற்றை பற்றி யார்தான் சந்தேகிக்க முடியும்?*



*அடுத்து கங்கோஹீ ஸாஹிபின் மரணத்திற்குப் பின் மவ்லவீ இல்யாஸ் ஸாஹிப் வேறொரு மெய்ஞானப் போதகரை ஏற்றுக் கொண்டார். ஆனால் அவரும் ஒரு வஹ்ஹாபியாகத்தான் இருந்தார் என்பதைப் பற்றி அதே தீனி தஃவத் என்னும் நூலைப் பாருங்கள்.*

***ஹள்ரத் மவ்லானா ரஷீத் அஹ்மத் ஸாஹிபுடைய மரணத்திற்குப் பிறகு (மவ்லவீ இல்யாஸ் ஸாஹிப்) அவர்கள் ஷைகுல் ஹிந்த் மவ்லானா மஹ்மூதுல் ஹஸன் ஸாஹிபிடம் வேண்டுகோள் விடுத்தார். அவர் மவ்லானா கலீல் அஹ்மத் ஸாஹிபை அணுகுமாறு ஆலோசனைக் கூறினார். எனவே ஸஹாரன்பூரைச் சேர்ந்த மவ்லானா கலீல் அஹ்மத் ஸாஹிபுடன் மவ்லானா இல்யாஸ் தமது தொடர்புகளை ஏற்படுத்திக் கொண்டனர். அவரது கண்காணிப்பிலும், வழிகாட்டலிலும் (மவ்லவீ இல்யாஸ்) அவர்கள் ஒரு மெய்ஞானச் சீடனது பல்வேறு நிலைகளைக் கடக்கலானார்கள்.***

***நூல் : தீனி தஃவத் பக்கம் 49 முதல் 50 வரை***

*மேலே குறிப்பிடப்பட்ட மவ்லவீ கலீல் அஹ்மத் ஸாஹிப் என்ற இவர் யார்? இவர் ஸுன்னத்வல் ஜமாஅத்தைச் சார்ந்த நேரிய கொள்கையுடைய ஒருவரென்று எண்ணிவிடாதீர்கள். இவரும் இந்திய நாட்டு வஹ்ஹாபிகளின் தலைவர்களில் குறிப்பிடத்தக்க மிக முக்கியமான ஒரு தலைவரே! திருத்தூதுவ*

நிந்தனையும், நபிகளார்மீது இகழ்ச்சியும் புழுதிவாரித்தூற்றும் ஒரு வஹ்ஹாபிதான் இவர். ஆதலால் இது சம்பந்தமாக இவர் தமது நூலில் எழுதிய ஒரு கனவைப் பற்றி இப்போது பாருங்கள்.

***ஒரு நல்லடியார் தமது கனவில் எம்பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களைக் காணும் பெரும்பேற்றினைப் பெற்றார். அப்போது பெருமானாரவர்கள் உர்தூ மொழி பேசுவதைக் கண்டு, பெருமானாரைப் பார்த்து தாங்கள் அரபு நாட்டவராயிற்றே! தங்களுக்கு உர்தூமொழி எப்படி வந்தது? என்று வினவ,.... அதற்கு அண்ணலார், எப்போதிருந்து நமக்கு தேவ்பந்த் மத்ரஸாவைச் சார்ந்த உலமாப்பெருமக்களில் தொடர்பு ஏற்பட்டதோ, அப்போதிருந்தே இம்மொழி நமக்கு வந்துவிட்டது என்று கூறினர். ஸுப்ஹானல்லாஹ்! இதன்மூலம் இந்த தேவ்பந்த் மத்ரஸாவின் சிறப்பு தெரியலாயிற்று.***

***(நூல் : பராஹீனே காத்திஆ பக்கம் 26)***

இவர்தான் மவ்லவீ இல்யாஸ் ஸாஹிபின் இரண்டாவது மெய்ஞானப் போதகர். இத்திருநாட்டில் எத்தனையோ ஆயிரக்கணக்கான இறையடியார்கள் அண்ணல் நபியை (ஜியாரத்) கனவில் காணும் பெரும்பாக்கியம் பெற்றுள்ளனர். அவ்வாறு கண்டவர்களுடன் அண்ணலார் அவரவர் மொழியிலேயே உரையாடினர். ஆனால் இந்த வஹ்ஹாபி தேவ்பந்திகளுக்கு கிஞ்சிற்றும் நபிகளார்மீது மரியாதையோ கண்ணியமோ இல்லாமற் போய்விட்டது.

இதன்றி உலக முழுமையும், இன்றும் முஸ்லிம்களிருக்கின்றனர். இவர்களில் நபிகளார்மீது அளவிலா நேசம் கொண்ட லட்சக்கணக்கானோர் நபிகளாரைக் கனவில் கண்டு அவர்களுடன் உரையாடும் நற்பேற்றையும் பெற்றுக் கொண்டுள்ளனர். இதில் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் தம்மிறைவனால் தமக்கு அருளப்பட்ட அளவற்ற அறிவு ஞானத்தைக் கொண்டு தம்மை



நேசிக்கும் ஒவ்வொருவருடனும் அவரவர்களது தாய்மொழியிலேயே உரையாடுகின்றனர் என்பதை ஒரு பாமர முஸ்லிம் கூட அறிவார்.

பேரொளிப் பெருந்தகை தாஹா நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு இறைவனே ஆசிரியனாக, கல்வி கற்பிப்பவனாக இருக்கும்போது, உர்தூ மொழியைக் கற்றுக்கொள்ள இந்த வஹ்ஹாபி மவ்லவீகளுடன் தொடர்பேற்படுத்திக் கொள்ள வேண்டிய அவசியம் பெருமானாருக்கு ஏற்படுமா என்ன? இறைவன் கூறுவதைப் பாருங்கள்!

(முஹம்மதே!) நீர் ஒரு போதும் மறக்க முடியாத வண்ணம் உமக்கு நாம் கற்பிப்போம். அல்குர்ஆன்

எனக்கு இறைவன் கற்றுக் கொடுத்தான். எனவே என்னுடைய கல்வி (மற்ற ஏனைய கல்வியுடையோரது கல்வியைக் காட்டிலும் மிகச் சிறந்ததாகும்.
(அல்ஹதீஸ்)

த்...து! காரித்துப்ப வேண்டும். இத்திருத்தூதுவ நிந்தனை புரியும் வஹ்ஹாபியத்தின்மீதும், இன்னும் புழுத்து நாற்றமெடுத்துப் போன நஜ்தியத்தின்மீதும், தமது மத்ரஸாவின் சிறப்பை வெளிப்படுத்துவதற்காக வேண்டி இத்தகைய அருவருக்கத்தக்க கனவொன்றைத் தானே கற்பனை செய்து கொண்டது மட்டுமின்றி, இதனை அச்சிட்டும் வெளியிட்ட அசுத்தமான நஜ்தி இனத்தின்மீது நூறாயிரம் கேடு உண்டாகட்டும். அவர்களுக்குக் கொஞ்சம்கூட வெட்கமில்லை!

நபிமார், வலிமார் போன்றோரது திருச்சமூகத்தைப் பற்றி (அலைஹிமுஸ்ஸலாம், வரஹ்மதுல்லாஹி அலைஹிம் அஜ்மஈன்) எவ்வகையிலாவது இகழ்ச்சி, நிந்தனை, கண்ணியக் குறைவு, அவமரியாதை செய்தாலொழிய இந்த வஹ்ஹாபிகளது தௌஹீத் பரிபூரணமடையாது என்னும் இவர்களது தீய

*கொள்கையைப் பின்னரே நான் கூறியிருக்கிறேன். ஆதலால் வஹ்ஹாபிகளனைவருமே இவ்விஷயத்தில் தொடர்ந்து அமல் செய்து வருவதைப் பாருங்கள். கங்கோஹி ஸாஹிபின் மரணத்திற்குப் பின் மவ்லவீ இல்யாஸ் ஸாஹிப் எந்த மெய்ஞான போதகரின் கையைப் பிடித்தாரோ, அவரும் வஹ்ஹாபியத் தவ்ஹீதில் பரிபூரண நிலையை அடையப் பெற்றிருந்தவரே! அவர் அவ்வாறிருந்ததால் தானே சிறிதும் தயக்கமின்றி நபிகளாரின் மகத்துவத்திற்கு மாசு கற்பிக்கும் வகையில் மேற்கண்டவாறு ஒரு கனவை பார்த்ததாக எழுதி அச்சிட்டு வெளியிட்டுள்ளார். மேலும் அவரது இஸ்லாமிய மனசாட்சி அதனை கொஞ்சங்கூட வெறுக்கவில்லை. அவருடைய ஈமானுக்குரிய ரோஷம்கூடதான் செய்தது சரிதானா என்பதைக்கூட ஆராயவில்லை!*

*சரி! அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களைப் பற்றி இந்த மவ்லவீ இல்யாஸ் ஸாஹிப் எந்த மாதிரியான கொள்கைக் கொண்டிருந்தார்? மேலும் இவர் தம்மைப்பற்றி எப்படி எண்ணிக் கொண்டிருந்தார்? எந்த வஹ்ஹாபிகளுக்கு இவர் மாணவராயிருந்தாரோ, அவர்களது கொள்கைக் கோட்பாடுகளும், சிந்தனையும் நிச்சயம் இவருள்ளே பரிணமித்து மிளிர்ந்து கொண்டுதான் இருந்திருக்குமென்பதில் ஒரு சிறிதும் ஐயமில்லை. இதோ அவரது பொன்வாக்குகளைக் கவனியுங்கள். இதனைத் தொகுத்தளிப்பவர் மவ்லவீ மன்ஸூர் நுஃமானி ஸம்பலி. இவர் தப்லீக் ஜமாஅத்தில் மிக முக்கியப் பிரச்சாரகர்களில் ஒருவராவார்.*

***ஒருமுறை மவ்லவீ இல்யாஸ் ஸாஹிப் கூறலானார்,.....***

***கனவில் நுபுவ்வத் (நபித்துவத்)துடைய நாற்பத்தாறு பங்கில் ஒரு பங்கு இருக்கிறது. பெருந்தவம், வணக்க வழிபாடுகள் போன்றவற்றால் கூட ஏற்படாத முன்னேற்றம் சிலருக்கு கனவில் ஏற்படுகிறது. ஏனெனில் கனவில் மெய்ஞான ஞானோதயங்கள் உண்டாகின்றன) (அதாவது இறைவன் மெய்யான ஞானத்தை உள்ளத்தில் தோன்றச் செய்கிறான்.) இத்தகைய ஞானோதயங்கள் நபித்துவத்தின் ஒரு பகுதியாகும். பிறகு ஏன் முன்னேற்றம் ஏற்படாது? ஞானத்தினால் இறையறிவு வளருகிறது. இறையறிவால் இறை நெருக்கம் வளருகிறது. இதனாலேயே ரப்பி ஜித்னீ இல்மா என்று கோருமாறு கட்டளை இடப்பட்டுள்ளது.***



மேலும் கூறுகிறார் :

*தற்போதெல்லாம் எனக்கு கனவுகளில் மெய்யான ஞானங்கள் உதிக்கின்றன. ஆதலால் எனக்கு அதிகமாக தூக்கம் வருவதற்கான முயற்சிகளைச் செய்யுங்கள். (வரட்சியின் காரணமாக தூக்கம் குறையத் தொடங்கியது. எனவே) நான் (மன்ஸூர் நுஃமானி) யுனானி மருத்துவர் மற்றும் ஆங்கில மருத்துவரின் ஆலோசனைப்படி தலையில் எண்ணை மாலிஷ் செய்வித்தேன். இதன்மூலம் தூக்கத்தில் முன்னேற்றம் ஏற்பட்டது.*

*மவ்லவீ இல்யாஸ் ஸாஹிப் கூறலானார்:*

***இந்த தப்லீக் செய்யும் முறையும் எனக்கு கனவில் வெளியானதே. 'குன்த்தும் கைர உம்மத்தின் உக்ரிஜத் லின்னாஸி தஃமுரூன பில்மஃரூஃபி வதன்ஹவ்ன அனில்முன்கரிவ துஃமினூன பில்லாஹி' என்று இறைவன் கூறுகிறான். இதன் விளக்கம் (தஃப்ஸீர்) எனக்கு கனவில் வெளியாயிற்று. நீர் (மவ்லவீ இல்யாஸ்) நபிமார்கள் (அலைஹிமுஸ்ஸலாம்) போன்று மக்களுக்காக வெளிப்படுத்தப்பட்டிருக்கின்றீர்.***

***(நூல் : மல்பூஜாத்தே மவ்லவீ இல்யாஸ் பக்கம் 40 முதல் 50 வரை)***

அல்லாஹ்வின்மீதும் அவனது தூதரான அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள்மீதும் விசுவாசம் கொண்டுள்ள முஸ்லிம்களே! நன்றாகக் கவனியுங்கள். இந்த வஹ்ஹாபி தமது நிலையை நபித்துவத்துக்குக் குறைத்துக் காட்டத் தயாராயில்லை. மேலும் இவர்கள் தங்களின்

மெய்ஞானப் போதகர் அல்லது தங்களின் ஆசிரியர் அல்லது தங்களைப் பற்றி குறிப்பிடும்போது நபி அல்லது ரஸூலுக்குச் சமமான ஒரு அந்தஸ்தைத்தான் காட்ட முயலுகின்றனர் என்பதற்கு அனுபவப் பூர்வமான சாட்சியங்கள் நிறையஉண்டு.

மவ்லவீ இஸ்மாயீல் தெஹ்லவி ஸாஹிப் தமது மெய்ஞானப் போதகர் ஸையத் அஹ்மத் பரேலியை பற்பல விஷயங்களில் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு ஒப்பானவரென்று எழுதியுள்ளார். ஸையத் அஹ்மதுடைய அறியாமை, அறிவற்றத் தன்மையை திருநபியவர்களது உம்மி என்னும் நிலையுடன் ஒப்பிட்டிருக்கிறார். இது பற்றி 'ஸிராத்தே முஸ்தகீம்' என்னும் நூலைப் பார்க்க.

மேலும் இதே நூலில், நபிகளாரை தொழுகையில் ஒருமித்த நிலையில் சிந்திப்பதை (மஆதல்லாஹ்) மாடு, மற்றும் கழுதை ஆகியவற்றை சிந்திப்பதைவிட இழிவானதென்று எழுதியுள்ளார். இதைப்பற்றி முன்னால் நாம் பார்த்தோம். ஆனால் அதே நூலில் ஸையத் அஹ்மத் பரேலியாகிய தமது மெய்ஞானப் போதகரைப் பற்றி குறிப்பிடும்போது,

***ஹக்குதஆலா எனது பீர் (மெய்ஞானப் போதகர்) உடைய தோற்றத்தைத் தவிர வேறு எந்த வடிவில் தனது பேரொளியை என்பேரில் வெளிப்படுத்தினாலும்கூட அதன்பக்கம் சிந்தனை கொஞ்சங்கூட செல்லாது. (மஆதல்லாஹ்)***

***(நூல் : ஸிராத்தே முஸ்தகீம்)***

**மொழிபெயர்ப்பாளரின் உரை:**

நபிகளாருக்கு 'உம்மீ' என்றொரு பெயருண்டு. உம்மீ என்றால் கல்லாத கற்பிக்கப்படாத என்பது பொருளாகும். நபிகளார் யாராலும் எந்த விஷயமும் கற்பிக்கப்படாதவர்கள். இறைவன் மட்டுமே அவர்களுக்கு கற்பித்தான். தவிர மனிதரில் எவரும் நபிகளாருக்கு ஒரு எழுத்தைக் கூட கற்றுக்



கொடுத்ததில்லை. தாம் பெற்ற ஞானங்களனைத்தையும் பெருமானார் இறைவனிடமிருந்தே பெற்றனர். ஆதலாலேயே உம்மீ நபி (ஸல்) அவர்கள் என்றழைக்கப்பட்டனர். வஹ்ஹாபி, தேவ்பந்தி, ஜமாஅத்தே இஸ்லாமி போன்ற வழிகெட்ட இயக்கங்களனைத்துமே நபிகளாரை கல்வியற்றவர், கற்காதவர், அறிவில்லாதவர் என்னும் பொருளிலேயே உம்மீ நபி என்று குறிப்பிடுகின்றனர். எனவேதான் ஸையத் அஹ்மத் பரேலியுடைய அறியாமை, கல்வி கற்காமை போன்றவற்றை நபிகளாருடன் மவ்லவீ இஸ்மாயீல் தெஹ்லவியையும் ஒப்பிடுகின்றார்.

மவ்லவீ அஷ்ரஃப் அலீ தானவீயோ கனவில் தனது கலிமா ஓதுவதையும், விழிப்பில் தன்மீது ஸலவாத்து ஓதுவதையும் ஆகுமான ஒன்றெனக் கூறினார். இதில் மவ்லவீ இல்யாஸும் இதே வஹ்ஹாபிய நஜ்திக் குணத்தின் நிறத்தையுடையவராயிருந்ததால் துவக்கத்தில் கனவென்பது நபித்துவத்தின் ஒரு பகுதி என்றார். பின்னர் மெய்யான ஞான உதிப்புகள் தோன்றும் ஒரு வழிதான் கனவென்று கூறி அதனை உறுதிப்படுத்தினார். இறுதியாக அவரது இருதயத்திலிருந்த எண்ணம் மிகத் தெளிவாக வெளிப்பட்டுவிட்டது.

அதாவது நபித்துவத்தின் ஒரு பகுதி மேற்படி நபருக்கு கனவென்ற வடிவில் கிடைத்து விட்டது. மெய்ஞான உதிப்புகள் ஞானோதயங்கள் போன்றவை மேற்படி நபருக்கு நபிமார்களுக்குக் கிடைத்தது போன்று கிட்டியது. ஆதலால் நபிமார்களைப் போன்று மேற்படி மவ்லவீ ஸாஹிப் மக்களுக்காகவே (நல்வழிப்படுத்த) வெளிப்படுத்தப்பட்டார்.

காதியானிகளில் ஒரேயொரு குலாம் அஹ்மத் மட்டும் தான் நபியானான். ஆனால் இந்த வஹ்ஹாபி தேவ்பந்திகளில் ஒருவரையடுத்து மற்றொருவர் என ஒருவர்பின் ஒருவராக நபித்துவத்தின் பங்காளிகளாகத் தென்படுகின்றனர்.

**மொழிபெயர்ப்பாளரின் உரை....**

***அதாவது மவ்லவீ இஸ்மாயீல் தெஹ்லவி ஹக்குத்தஆலாவைத் தனது மெய்ஞானப் போதகருடைய உருவத்தில் மட்டுமே பார்ப்பார். அவ்வாறில்லையெனில் அவர்; அல்லாஹ்வை திரும்பிக்கூட பார்க்கமாட்டார். சுருங்கச் சொல்வதாயின், இவரைப் பொறுத்தவரையில் இறைவன் இவரது பீர் ஸாஹிபுடைய உருவத்தில்தான் இருக்க வேண்டும். இல்லையெனில் இவர் இறைவனை ஏறெடுத்துக் கூட பார்க்க மாட்டார். லா ஹௌல வலா குவ்வத்த இல்லாபில்லாஹ்.***

*நபித்துவத்தில் பங்காளியாவதிலும், நபிமார்களைப் போன்று வெளிப்படுத்தப்படுவதிலும் மவ்லவீ இல்யாஸ் ஸாஹிபுக்கு இருக்கும் இப்பேரார்வம் நாம் அறிந்தவரையில் இது மவ்லவீ கங்கோஹீ ஸாஹிபின் வாயிலாக இவருக்குத் தோன்றவில்லை. மாறாக நபித்துவத்தை தனக்கு ஹலாலாக்கிக் கொள்வதில் இவருக்குள்ள இந்த ஆர்வம் அநேகமாக தானவி ஸாஹிபிடமிருந்துதான் இவருக்குக் கிடைத்திருக்க வேண்டும். ஏனெனில் மவ்லவீ இல்யாஸுக்கு பிறரது கட்டுரை, நூல்கள் போன்றவற்றைவிட, தானவீ ஸாஹிபுடைய கட்டுரைகள், நூல்கள் தாம் மிகமிக விருப்பமானவை.*

*மேலும் இவர் நபிமார்களைப் போன்று வெளிப்படுத்தப்பட்டதன் காரணம் யாதெனில், அது அல்லாஹ் மற்றும் ரஸூல் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் நெறிமுறைகளை பரப்புவதற்காக என்று எண்ண வேண்டாம். மாறாக, தானவீ ஸாஹிபுடைய கண்ணியக் குறைவற்ற இழிவான வஹ்ஹாபியத்தையும், அவரது நஜ்திக் கொள்கையினையும் போதிக்கவும், பரப்பவும் தான் மவ்லவீ இல்யாஸ் ஸாஹிப் வெளிப்படுத்தப்பட்டார். இதனை அவரே கூறுகிறார். கேளுங்கள்.*

***ஒருமுறை மவ்லவீ இல்யாஸ் ஸாஹிப் இப்படிக் கூறலானார்கள் ஹள்ரத் மவ்லானா தானவீ ஸாஹிப் மிகப்பெரிய வேலை***



***செய்திருக்கிறார்கள். எனது மனம் விரும்புகிறது. கல்வி ஞான போதனைமுறை அவர்களுடையதாகவும், அதனைப் போதிக்கும் தப்லீக் முறை என்னுடையதாகவுமிருக்க வேண்டும். ஆக இவ்வாறு அவருடைய போதனைகள் விரிவாகிவிடும்.***

***(நூல்: மல்பூஜாத்தே மவ்லவீ இல்யாஸ் பக்கம் 47)***

*முஸ்லிம்களே! இறைவனுக்காக சற்றுச் சிந்தியுங்கள். மவ்லவீ இல்யாஸும் தப்லீக் ஜமாஅத்துக்காரர்களும் எந்த நோக்கத்துடன் கிளம்பியுள்ளனர் என்பதைப் பற்றி இன்னும் உங்களுக்கு சந்தேகமுள்ளதா?*

*தொழுகையையும், நோன்பையும் பரப்புவதுதான் அவர்கள் நோக்கமா? இவர்கள் கலிமாவை பரப்புவதைத்தான் விரும்புகிறார்களா? நாயகத் தோழர்கள், மற்றும் இறைநேசச் செல்வர்கள் போன்று இறை வணக்கத்தின்மூலமும், நபிவழியில் நடப்பதைக் கொண்டும் மக்களை ஈர்ப்பதுதான் இவர்களின் நோக்கமா? பரிதாபம்! பரிதாபத்ம! முஸ்லிம்களே! கப்ருக்கு ஒவ்வொருவரும் தனித்தனியோதான் போக வேண்டியுள்ளது. அங்கு எந்த ஜமாஅத்தும் இருக்காது. எந்தப் பிரிவும் உங்களுக்கு உதவப் போவதில்லை. எனவே இறைவனை சர்வஞானமுடையவனென்றும், சகலவற்றையும் அறியக் கூடியவனென்பதையும் மனதில் கொண்டு மேற்கண்ட வாசகங்களை மிகுந்த பொறுப்புடன் கூர்ந்து கவனித்தீர்களேயானால் உங்களுக்குப் புரிந்துவிடும். மவ்லவீ இல்யாஸ் ஸாஹிப் மற்றும் அவரது ஒருமித்த கொள்கைகளையுடைய அவருடைய சகாக்களின் நோக்கங்கள் என்னவென்பதும், இந்த தப்லீக் ஜமாஅத்தினர் இங்குமங்கும் அலைந்து திரியக்கூடிய அவர்களது உழைப்புகள், இஜ்திமாக்கள் அனைத்துமே வஹ்ஹாபிய்யத்தை பரப்புவதும், நஜ்திகளுடைய தௌஹீதை பொதுமக்கள் வரை எத்திவைப்பதையும் தவிர வேறொன்றுமில்லையென்பதையும் நன்கு விளங்கிக் கொள்ளலாம்.*

*மேலும் தப்லீக் ஜமாஅத்தினர் ஒவ்வோர் இடங்களிலும்*

கூறக்கூடிய தொழுகை, கலிமா நன்மையை ஏவுதல், தீமையைத் தடுத்தல் என்னும் தலைப்புக்கள், பயான்கள் அனைத்தும் அஹ்லுஸ்ஸுன்னத் வல் ஜமாஅத்தைச் சார்ந்த ஒன்றுமறியா அப்பாவி முஸ்லிம்களை ஏமாற்றுவதற்காக விரிக்கப்படுகின்ற வலைகளாகும். இவ்விஷயம் மிக மிக நம்பந்தகுந்த ஒன்றே என்பதற்குரிய சாட்சி இதோ மவ்லவி இல்யாஸ் ஸாஹிப் தமது வாயாலேயே கூறுவதைக் கேளுங்கள்.

***(மவ்லவீ இல்யாஸ் ஸாஹிப்) ஒருமுறை தமது உற்ற நண்பரும் மிகப் பரந்த நோக்குடைய ஆலிமாகிய மவ்லவீ ளஹீருல் ஹஸன் (M.A. அலிகர்) என்பாரிடம் கூறினார்.***

***ளஹீருல் ஹஸன்! எனது கருத்தை ஒருவரும் விளங்கிக் கொள்ள மாட்டேனென்கிறார்கள். ஜனங்கள் இதை (தப்லீக் ஜமாஅத்தை) தொழுகைக்கு அழைக்கும் ஒரு இயக்கமென்று எண்ணிக் கொண்டிருக்கின்றனர். சத்தியமாகக் கூறுகிறேன். இது ஒருபோதும் தொழுகைக்கு அழைக்கும் இயக்கமல்ல. ஒருநாள் மிக்க பேராவலோடு கூறினார்கள். மியான்! ளஹீருல் ஹஸன்!! ஒரு புதிய சமுதாயத்தைப் படைக்க வேண்டும்.***

***(நூல் : தீனி தஃவத் பக்கம் 226)***

எவ்வாறு முஹம்மதிப்னு அப்துல் வஹ்ஹாப் நஜ்தி ஒரு கூட்டத்தை உருவாக்கி அதன்மூலம் அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாஅத்தினர்மீது தாக்குதல் நடத்தினானோ.

மேலும் எவ்வாறு உஸ்மான் ரளியல்லாஹ், நபிகளாரின் திருமகளார் பீவி ஃபாத்திமா மற்றும் நபித்தோழர்கள், நபிகளாரின் குடும்பத்தினர்களான அஹ்லெபைத்துக்கள் (ரிள்வானுல்லாஹி அலைஹிம் அஜ்மஈன்) போன்றோரின் புனிதமிகு கப்ரு ஷரீப்களை தகர்த்தெறிந்து ஷஹீதாக்கினானோ, அத்துடன் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் புனித ரவ்ளா ஷரீஃபின் முகப்பிலிருந்த இரு குப்பாக்களை இடித்து தரைமட்டமாக்கினானோ,



அதேபோன்ற ஒரு வஹ்ஹாபி கூட்டத்தை- சமுதாயத்தை மவ்லவீ இல்யாஸும் தப்லீக் ஜமாஅத்தினரும் உருவாக்க விரும்புகின்றனர். இத்தகைய ஒரு கூட்டத்தை தானவி ஸாஹிபுடைய போதனை நல்லுபதேசங்களை பொதுமக்களிடையே பரப்புவதன்மூலம்தான் உருவாக்க முடியும். இதைப் பற்றி மவ்லவீ இல்யாஸ் ஸாஹிபே கூறுகின்றார்.

***ஹள்ரத் (தானவிய)அவர்களுடைய போதனைகள் மற்றும் நல்லுபதேசங்கள் நிலைநிறுத்தப்பட வேண்டும். மேலும் அவற்றை அதிகமதிகம் பரப்புவதற்கான முயற்சிகள் மேற்கொள்ளப்பட வேண்டும்.***

***(நூல் : மல்பூஜாத்தே மவ்லவீ இல்யாஸ் பக்கம் 57)***

இப்போது நான் மூன்றாம் கேள்விக்குரிய பதிலை இத்துடன் முடிக்கின்றேன். எந்த மவ்லவீகளது கொள்கையினைப் பற்றி என்னிடம் வினவப்பட்டதோ, அதைப்பற்றி தேவைக்குத் தகுந்த அளவிற்கு அவர்களது நூல்களைக் கொண்டே மேற்கோள்காட்டி போதிய தகவல்களை சமர்ப்பித்துள்ளேன்.

இதன்மூலம் தப்லீக் ஜமாஅத்தைச் சார்ந்த மேற்கண்ட மவ்லவீகள் எந்தக் கொள்கையுடையோர் என்பது பகற்கால சூரியன் மற்றும் பௌர்ணமி இரவின் சந்திரனைப் போன்று மிகத் தெளிவாக வெளிச்சமாக்கப்பட்டு விட்டது. அஹ்லுல் ஈமான் என்னும் விசுவாசங்கொண்ட நல்லடியார்களுக்கும், நேர்மையும் நீதியும் கொண்ட மார்க்கப் பற்றுதலுடையோருக்கும் உண்மை என்னவென்பது தெளிவாகிவிட்டன. உண்மையை ஏற்று நடப்போர், நிச்சயம் உண்மையையும், நல்லுபதேசத்தையும் ஏற்றுக் கொள்வார்கள்.

*இனி எவரது உள்ளத்தில் துவக்கத்திலிருந்தே நபிமார்கள் (அலைஹிமுஸ்ஸலாம்) வலிமார்கள் (ரஹ்மதுல்லாஹி அலைஹிம்)மீது வஞ்சகமும், துவேஷமும் ஆகிய தீப்பொறிகள் உள்ளதோ, அவர்களைப் பற்றி நமக்கு சிறிதும் கவலையில்லை. நெறி கெட்டவர்கள் நிச்சயம் வழி தவறிப் போவார்கள். அவர்களுடைய உள்ளங்களில் வியாதி உண்டாயிருக்கின்றது. ஆதலால் அல்லாஹ் அவர்களுக்கு வியாதியை அதிகப்படுத்தினான்.*

*இறைத்தூதர்கள் பற்றியும், இறைநேசர்கள் பற்றியும் இழிவாக, கண்ணியக் குறைவாக, அவமரியாதை செய்து எழுதப்பட்ட நூற்றுக்கணக்கான வாசகங்களைக் கண்ட, கேட்ட பின்பும்கூட, உண்மை நிலையை விளங்கிக் கொள்ளாமல், அசட்டையாக கண்ணைத் திறந்து பார்க்காமலிருந்தார்களென்றால் அவர்களைப் பற்றி இதையன்றி வேறு என்னதான் கூற முடியும்?*

*அவர்களுக்கு இருதயங்களிருக்கின்றன. அவற்றைக் கொண்டு அவர்கள் விளங்கிக் கொள்ள மாட்டார்கள். இன்னும் அவர்களுக்கு கண்களிருக்கின்றன. அற்றைக் கொண்டு அவர்கள் பார்க்க மாட்டார்கள். இன்னும் அவர்களுக்கு செவிகளிருக்கின்றன. அவற்றைக் கொண்டு அவர்கள் செவியேற்க மாட்டார்கள். அவர்கள் மிருகங்களை போலிருக்கிறார்கள். அன்றியும் அவர்கள் மிக வழிகெட்டவர்கள். அவர்கள்தான் மறந்தவர்கள்.*

*(அல்குர்ஆன் 7, 179)*

நெஞ்சில் பட்ட தீக்காயத்தால் உள்ளம் கொப்பளித்தது
வீட்டின் விளக்கால் வீடே பற்றி எரிந்தது.

*–கவிதை*



## கேள்வி: 4

**தப்லீக் ஜமாஅத்தைச் சேர்ந்த மவ்லவீகள் மற்றும் ஏனைய வஹ்ஹாபியத் தலைவர்களுக்கு ஆங்கிலேயரது ஆட்சியில் ஊதியங்கள் கொடுக்கப்பட்டு வந்தன.**

**மேலும் இந்தியாவில் ஆட்சியை ஆங்கிலேயர்கள் கைப்பற்றிய பின்னர் மதத்தின் பெயரால் முஸ்லிம்களிடையே பிளவுகளை ஏற்படுத்தவும், ஒவ்வொரு வீடுதோறும் பிரிவினைவாதம் மற்றும் சண்டை சச்சரவு போன்றவற்றை உருவாக்கவும் ஆங்கிலேயர்கள் சில மவ்லவீகளுடன் சேர்ந்து சதி செய்து வஹ்ஹாபிய நஜ்திக் கொள்கையை இந்திய நாட்டில் உருவாக்கினர் என்றும் சிலர் கூறுகின்றனர்.**

**இவையெல்லாம் உண்மையா? உண்மைதான் என்றால் அதற்குரிய விபரங்களை தக்க ஆதாரங்களுடன் தயை கூர்ந்து விளக்க வேண்டுகிறேன்.**

**இஸ்லாமியத் தொண்டன்,**
**மவ்லானா, அல்ஹாஜ் ஹகீம்**
**அபுல் இர்ஃபான் கலீல் ஹஜார்வீ கத்தீப் ஜாலி**
**மஹல்லா மஸ்ஜித், பெங்களூர் சிட்டி.**

## பதில்:4

திப்பு சுல்தான் (ரஹ்மதுல்லாஹி அலைஹி) அவர்கள் ஷஹீதாக்கப்பட்ட பின்னர் ஆங்கிலேயர்கள் இந்திய நாட்டில் முழுமை வாய்ந்த ஆதிக்கம் வரப்பெற்றனரென்பதில் எவ்விதச் சந்தேகமுமில்லை. ஏனெனில் ஆங்கிலேயரது ஆதிக்கத்தைத் தடுக்கக் கூடிய இறுதி எல்லையாக மைசூரின் ஆட்சி அமைந்திருந்தது. ஆனால் அதே நாட்டைச் சார்ந்த துரோகிகள் மற்றும் வஞ்சகக் குணங்கொண்ட அதிகாரிகள் செய்த சூழ்ச்சியால் மைசூரின் ஆட்சி அழிந்தது. ஆதலால் ஆங்கிலேயர்கள் மைசூரைக் கைப்பற்றிய பின்னர் தங்களின் ஆட்சியை தக்க வைத்துக் கொள்ள வேண்டி சிந்திக்கத் துவங்கினர்.

இதற்காகவென்றே இந்திய அரசியலில் நிபுணர்களான தலைசிறந்த ஆங்கிலேயர்களின் குழுவொன்று தமது ஆட்சியை நிலைநிறுத்துவதற்காகக் கூடிற்று. அக்கூட்டத்தில் வைத்து சில விஷயங்கள் மிகமிக அடிப்படையானவை என்ற அளவில் விவாதிக்கப்பட்டன.

**சமுதாய மற்றும் நாட்டுக்கு உயிர் நீத்த தியாகிகள்!**

(1) ஆங்கிலேயர்களுக்கு பெருவாரியான நஷ்டம் முஸ்லிம்களை எதிர்ப்பதில் தான் ஏற்பட்டது. உதாரணமாக,....

நவாப் ஸிராஜுத் தௌலா கி.பி. 1756ல் ஆங்கிலேயர்களுக்கெதிராக அறப்போர் புரிந்தார். இவரையடுத்து மீர்ஜஃபருடைய மருமகன் மீர் காஸிம் தமது முழுபலத்துடன் ஆங்கிலேயர்களை எதிர்த்துப் போரிட்டார். இதேபோன்று நாவப் ஹைதர் அலியும், திப்புசுல்தானும் ஏழுமுறை கிழக்கிந்தியக் கம்பெனியை சென்னைக் கடற்கரையோரத்திலிருந்து விரட்டியடித்தனர்.

திப்பு சுல்தானது ஆங்கிலேய எதிர்ப்பியக்கத்தின் காரணமாகத்தான் ஆப்கானிஸ் தானத்தில் கி.பி. 1790ல், ஜமான் ஷாஹ் வாலி ஆங்கிலேயருடன் போரிடுவதற்காக இந்திய எல்லைவரை வந்தார். (இதைத்தவிர, கி.பி. 1757ம் வருடம் நடந்த புரட்சியில் பஹதூர்ஷாஹ் ஜபர் புரட்சிக்காரர்களுடன் தலைமை தாங்கி ஆங்கிலேயர்களுக்கெதிராக இந்திய நாட்டின் சுய ஆட்சிக்கான பிரகடனம் செய்தார்.

அத்துடன் இந்திய நாட்டைச் சார்ந்த இஸ்லாமிய மார்க்கத்தின் அறிஞர் பெருமக்களான உலமாப்பெருமக்கள் ஆங்கிலேயர்களுக் கெதிராக சன்மார்க்க அறப்போர் புரிய வேண்டுமென மார்க்கத் தீப்பு (ஃபத்வா) வழங்கியதுடன் களத்திலும் இறங்கி விட்டனர். மவ்லானா பஜ்லுல் ஹக் கைராபாதி (ரஹ்மதுல்லாஹி அலைஹி) மற்றும் அவரைச் சார்ந்தோரும் தங்களின் உயிரைத் துச்சமென எண்ணி ஆங்கிலேயர்களுக்கெதிராக கிளர்ச்சி செய்யத் துவங்கினர்.



கிளர்ச்சி செய்ததாலேயே மவ்லானா அவர்கள் ஆங்கிலேயர்களால் கைது செய்யப்பட்டு அந்தமான் தீவுக்கு நாடு கடத்தப்பட்டனர். பின்னர் அங்கு வைத்தே அவர்கள் தமது இன்னுயிரை நீத்தனர்.

**முஸ்லிம் சமுதாயம்!**

(2) இஸ்லாமியர்கள் இந்திய நாட்டில் சுமார் ஏழு எட்டு நூற்றாண்டுகளாகவே அரசோச்சி ஆட்சி புரிந்து வந்துள்ளனர். ஆதலால் எதிர்காலத்தில் ஆங்கிலேய ஆதிக்கத்தை ஒழிக்க ஏதாவது புரட்சியோ, கலகமோ ஏற்படுமேயானால், அது இஸ்லாமியர்களால்தான் ஏற்பட முடியும். மேலும் ஆங்கிலேயரது நாசகாரப் போர்க் கருவிகளும், அழிவுத்திறன் படைத்த ஆயுதங்களும் இப்போதைக்கு தற்காலிகமாக முஸ்லிம்களை அடக்கி வைத்திருக்கலாம். ஆனால் இஸ்லாமியரது உள்ளத்தில் அடக்கி வைக்கப்பட்டிருக்கும் ஜிஹாதாகிய சன்மார்க்கப் போர் புரியும் வீர உணர்வு எப்போது வேண்டுமானாலும் திடீரென்று எரிமலை போன்று வெடிக்கக்கூடும். அநியாயமிழைக்கப்பட்ட, அடிமைப்படுத்தப்பட்ட இம்முஸ்லிம் சமுதாயத்தின் கைகளும், காலும் வேண்டுமானால் வலிமை குன்றிப் போயிருக்கலாம். ஆனால் சுதந்திரத் தாகமும், ஆட்சிவெறி என்னும் போதை அவர்களின் சிந்தனையைவிட்டும் இன்னும் அகன்றிருக்காது.

**வஞ்சகக் குணம் கொண்ட படைத்தலைவர்கள்!**

(3) பல இடங்களில் இஸ்லாமியப் படைகள் ஆங்கிலேயரிடம் தோல்வியுற்றதற்குரிய முக்கிய காரணம், காட்டிக் கொடுக்கும் துரோகிகளாயிருந்த அதன் படைத் தலைவர்கள் தாம். இத்துரோகிகள் ஒரு பக்கம் இஸ்லாமிய ஆட்சியாளர்களது நம்பிக்கைக்குரியோராக மிக முக்கியமான உயர்ந்த உத்தியோகப் பொறுப்புகளில் அமர்ந்திருந்தனர். ஆனால் மற்றோர் பக்கம் ஆங்கிலேயருடன் மிக ஆழமான நட்பும் வைத்துக் கொண்டிருந்தனர். ஆங்கிலேயர்கள் அவர்களுக்குத் தந்த பெரும் பெரும் லஞ்சங்கள் அவர்களது கண்களைக்

குருடாக்கி விட்டன.

முஸ்லிமென்னும் வேடந்தரித்திருந்த இவ்வஞ்சகர்கள் குறுகிய கால சுகமான சொகுசு நிறைந்த வாழ்வுக்காக கனவு கண்டு முழு சமுதாயத்தின் மானமரியாதை அனைத்தையும் அந்நியர்களுக்கு ஏலம் விட்டு விட்டனர்.

**தேச மற்றும் சமுதாய துரோகிகள்!**

*(4) தக்காணத்து நிஜாம் முதலாம் ஆஸிப் ஜாஹ், கர்னாடகாவைச் சார்ந்த நவாப் வாலாஜா முஹம்மத் அலி, வங்காளத்தின் நவாப் மீர்ஜஃப்பர், மீர்ஸாதிக், மீர்குலாம் அலி மற்றும் மஹ்தி அலிகான் போன்றோரும், ஆங்கிலேயருடன் சதி செய்து தனது சகோதரர் ஜமான் ஷாஹ் உடைய கண்களைத் தோண்டி எடுத்த அவரது சகோதரன் மஹ்மூத்போன்ற நாட்டைக் காட்டிக் கொடுக்கக்கூடிய தேசத் துரோகிகள் ஆங்கிலேயர்களது கைப்பாவைகளாக மட்டும் மாறாதிருந்திருப்பார்களேயானால் இந்திய நாட்டை ஆண்டு கொண்டிருந்த இஸ்லாமிய சமுதாயத்தை அவ்வளவு எளிதில் அடிமைப்படுத்தியிருக்க முடியாது.*

**உலமாப்பெருமக்களின் ஆதிக்கம்!**

*(6) இந்திய நாட்டை இறுதியாக அரசாண்ட மிகப்பெரும் சிறப்புக்குரிய சக்ரவர்த்தி முகலாயப் பேரரசின் சிரோன்மணி மாமன்னர் அவ்ரங்கஜீப் ஆலம் கீரியாவார். இலங்கையிலிருந்து நைனிடால் வரையிலும், வங்காளத்திலிருந்து பஞ்சாப், சிந்து வரையிலும் பரந்து விரிந்திருந்த இஸ்லாமியப் பேரரசு இவரின் மறைவுக்குப்பின் வீழ்ச்சியுறத்துவங்கிற்று. இவர் ஒரு மிகச்சிறந்த இஸ்லாமிய மார்க்க அறிஞருமாவார். இவரால் தொகுக்கப்பட்ட ஃபதாவா ஆலம்கீரி என்னும் மிகப்பெரும் மார்க்கச் சட்ட தீர்ப்பு நூல் இன்றும் இஸ்லாமிய நல்லுலகில் மிகச்சிறந்த ஆதார நூலாக போற்றப்படுகிறது. ஆக இந்திய நாட்டில் இறுதியாக இருந்த இஸ்லாமிய ஆட்சியின் கடிவாளம் உலமாப் பெருமக்களைப் பின்பற்றி நடப்போரின் கைகளில் இருந்தது போல் தெரிய வருகிறது.*



**ஆங்கிலேயர்களின் கைக்கூலிகள்!**

*(6) 'மஹ்தி அலிகான்' ரெஸிடெண்ட் (ஆங்கிலேயரின் கையாள்) பம்பாய் கவர்னர் டங்கனின் தூண்டுதல் பேரில் ஆப்கானிஸ்தான் ஈரான் எல்லைப் பிரதேசங்களில் 'ஷியா, ஸுன்னி' என்னும் பிரிவுச் சண்டையை முஸ்லிம்களிடையே உருவாக்கினான். அத்தோடு ஆங்கிலேயர்களுக்கெதிராக ஜமான் ஷாஹ்வாலி போட்ட திட்டத்தையும் வீணாக்கினான்.*

இதுவரை மேற்கண்ட விஷயங்களனைத்தையும் கருத்தில் கொண்டு மிகுந்த கவனத்துடன் ஆலோசனை செய்தபின் இந்திய நாட்டில் தங்களின் ஆட்சியை நிலைநிறுத்திக் கொள்ள ஆங்கிலேயர்கள் இஸ்லாமியர்களுடன் மேற்கொண்ட அணுகுமுறையைப் பற்றி இப்போது கொஞ்சம் பார்ப்போம்.

*(1) முஸ்லிம்களிடையே மதத்தின் பெயரால் பிளவுகளை உருவாக்க வேண்டும் நாரே தக்பீர் என்னும் ஒரு முழக்கத்தைக் கேட்டு ஒன்று திரளக் கூடிய முஸ்லிம் சமுதாயத்தின் ஒற்றுமை உலகிலுள்ள குஃப்ரிய்யத்தான இறைமறுப்பு அனைத்துக்கும் ஒரு பேராபத்தாகும்.*

*இனி இச்சமுதாயத்தில் உருவாக்கப்படப் போகும் இப்பிளவுகளின்மூலம் இச்சமூகம் நூற்றுக்கணக்கான வருடங்கள் தங்களுக்குள் சச்சரவை உருவாக்குவதன்மூலம் சண்டையிட்டுக் கொண்டு அழிந்துபோக வேண்டும்.*

*(2) இஸ்லாமியர்களின் ஒற்றுமையென்னும் கடிவாளம் உலமாப்பெருமக்களின் கைகளில் உள்ளது. ஆதலால் இதற்காக சில மவ்லவீகளை விலை கொடுத்து வாங்கி அவர்களுக்கு, மாதா மாதம் ஊதியங்களும் நிர்ணயம் செய்து அந்த உலமாப்பெருமக்களைக் கொண்டே பிரிவினை, பிளவு என்னும் விஷவித்தை முஸ்லிம்களிடையே பரப்பவேண்டும்.*

*(3) தொழில், வாணிபம், போர் புரியும்கலை*

முதலானவற்றில் இஸ்லாமியர்கள் பெறக்கூடிய வளர்ச்சியானது, மீண்டும் அவர்களை ஆட்சி அதிகாரத்தில் கொண்டு அமர்த்தக் கூடுமாதலால்,

இவையனைத்தையும் துன்யா தாரி (லௌகீகம்) விஷயங்களாகுமென்றும், இவை ஆகுமான மார்க்கத்திற்குட்பட்டதல்ல என்றுகூறி இவையனைத்தையும் விட்டு முஸ்லிம்களை ஒதுக்கி வாழச் செய்ய வேண்டும்.

மேலும் தொழில், வாணிபம், போர் பயிற்சி போன்றவற்றில் ஈடுபடுவோர் தீன்தாரியாக, மார்க்கப் பற்றுடையவராக இருக்க முடியாதென்ற ஒரு தவறான கருத்தை இஸ்லாமியர்களிடையே உருவாக்க வேண்டும்.

இறைவனின் பாதையில் அறப்போர் (ஜிஹாத்) செய்தல் மற்றும் ஆட்சி செய்தல் போன்றவற்றின் நன்மைப் பலன்களை அவர்களைவிட்டும் மறக்கடிக்கச் செய்து வெறுமனே கலிமா, தொழுகை, தஸ்பீஹ் தஹ்லீல் முதலியவற்றிலேயே மார்க்கத்தை இஸ்லாமியர்கள் முடக்கிவிட வேண்டும்.

மேலே சுருக்கமாக விபரிக்கப்பட்ட மூன்று அம்சங்களையும் ஏறத்தாழ இரண்டரை நூற்றாண்டுகள் வரை இந்திய நாட்டை ஆட்சி செய்த ஆங்கிலேயர்கள் முழுக்க முழுக்க மிகத் தீவிரத்தோடு செயல்படுத்தினர். இங்கிலாத்தி (லண்டனி)லிருந்து கடல் வழியாக ஆறு, ஏழாயிரம் மைல் தொலைவைக் கடந்து இந்திய நாட்டுக்குள் வந்து நுழைந்த நரிக்குணம் படைத்த ஆங்கிலேயர்கள் இந்திய வாழ் முஸ்லிம்களிடையே சண்டைச் சச்சரவுகளைத் தோற்றுவித்து நாளடைவில் கோடிக்கணக்கான இஸ்லாமியர்கள்மீது ஆதிக்கம் பெற்று பல ஆண்டுகள் வரை மிக எளிதாக ஆட்சி செய்யும் ஒரு தகுதியைப் பெற்று விட்டனர்.

தங்களின் இவ்வஞ்சக சூழ்ச்சித் திட்டங்களுக்கு ஆங்கிலேயர்கள் யார் யாரைப் பயன்படுத்தினர்? தங்களின் நாவன்மையாலும், எழுத்தாற்றலாலும் ஆங்கிலேயர்களுக்கு



பணிவிடை செய்த அந்த மவ்லவீகள் யார்? ஆங்கிலேயரின் ஆதிக்கம் இந்திய நாட்டில் வன்மைபெற தப்லீக் பிரச்சாரப் பணிகள் மற்றும் ஜிஹாத் அறப்போர் ஆகியவற்றில் ஈடுபட்டிருந்தவர்கள் யார்? என்பதைப் பற்றியெல்லாம் விரிவாகத் தெரிந்து கொள்ள வேண்டுமெனில், பாஸ்பான், என்னும் பத்திரிகை ஆசிரியர் மவ்லானா முஷ்தாக் அஹ்மத் ஸாஹிப் நிஜாமி (இலாஹாபாத்) அவர்கள் எழுதிய நூலான கூன் கே ஆன்ஸூ (ரத்தக் கண்ணீர்) என்னும் நூலைப் பாருங்கள்.

இந்நூலில் மவ்லானா அவர்கள் மிக்கப் பொறுப்போடும், திறனாய்ந்த கவனத்தோடும் பல வரலாற்றுச் சம்பவங்களை தொகுத்தளித்துள்ளனர். ஆங்கிலேயர்களுக்கு வழிப்பட்டு நடந்த அந்த மவ்லவீகள் இஸ்லாமிய சமூகத்திற்கு ஊறுவிளைவித்த அவர்களின் நடைமுறைகளை அவர்களது நூல்களிலிருந்தே மவ்லானா நிஜாமி ஸாஹிபவர்கள் எடுத்துக் காட்டுகின்றனர்.

மேலும் 'கூன் கே ஆன்ஸூ' என்னும் இந்நூலில் நமது இஸ்லாமிய சமுதாயத்திற்கு ஏற்பட்ட அழிவு, பேராபத்து, பரிதாபமிக்க வேதனைகளைக் கொண்ட வரலாறு மட்டுமில்லை. மாறாக நமது சமுதாயத்தில் தோன்றிய துரோகிகளை அடையாளங் காட்டும் ஆதாரங்கள் நிறைந்த பதிவேடுகளும் நிறைந்திருக்கின்றன. அவற்றை காணும் தன்மான உணர்வும், ரோஷமும் கொண்ட எந்த ஒரு முஸ்லிமுடைய உள்ளத்திலும் தீப்பற்றி எரியும் கண்களிலிருந்து இரத்தக் கண்ணீர் வடியும்.

ஆதலால் நான்காம் கேள்விக்கு பதில் தரும் வகையில் கூன் கே ஆன்ஸூ என்னும் அந்நூலிலிருந்த சில வாசகங்களை உங்கள்முன் சமர்ப்பிக்கிறேன். தப்லீக் ஜமாஅத்தைத் தோற்றுவித்த மற்றும் அவ்வியக்கத்தை தலைமையேற்று நடத்திய மவ்லவீகளோடு தொடர்புள்ளவை அவ்வாசகங்கள். அவர் (மவ்லவீ)கள் தான் இந்திய நாட்டின் வஹ்ஹாபிகளுக்கெல்லாம் தலைமை வகிப்போராகக் கருதப்படுகின்றனர். இவ்வாசகங்கள் அந்த மவ்லவீகளது நூல்களின் பக்க ஆதாரங்களோடு கீழே தொகுத்துத் தரப்படுகின்றது.

***ஸையத் ஸாஹிபுடன் முஜாஹிதீன்கள் ஒன்று திரள ஆரம்பித்தனர். உடன் மவ்லானா இஸ்மாயீலுடைய ஆலோசனையின்பேரில் இலஹாபத்தைச் சேர்ந்த செல்வந்தர் ஷைகு குலாம் அலியவர்கள் மூலம் தொடர்பு கொண்டு வடமேற்கு மாகாண லெப்டினன்ட் கவர்னருடைய சமூகத்திற்கு நாங்கள் சீக்கியர்களுடன் ஜிஹாத் செய்ய ஆயத்தஞ் செய்து கொண்டிருக்கிறோம். இதில் ஆங்கில அரசுக்கு ஆட்சேபணை ஏதுமில்லையே! என்று கேட்டோம். அதற்கவர்கள்.... எங்களின் செயல் திட்டம் மற்றும் அமைதிக்கு எவ்வித பங்கமும் ஏற்படாதிருக்குமேயானால் நமக்கு எவ்வித ஆட்சேபணையுமில்லையென்று லெப்டினன்ட் கவர்னர் ஸாஹிப் தெளிவாக எழுதி விட்டார்.***

***(நூல் : ஹயாத்துத் தைய்யிபா பக்கம் 302)***
***தொகுப்பு : மீர்ஜா ஹைரத் தெஹ்லவி***

மேலே குறிப்பிடப்பட்ட இதே மவ்லவீ இஸ்மாயீல் உடைய தக்விய்யதுல் ஈமான் நூலுடைய வாசகங்களை ஏற்கனவே முன்னால் நீங்கள் படித்திருக்கின்றீர்கள்.

அடுத்து ஸையத் ஸாஹிப் என குறிப்பிடப்படுபவர் மேற்படி மவ்லவீ இஸ்மாயீலுடைய மெய்ஞானப் போதகர் மற்றும் ஆன்மிகத் தந்தையாகும். இவர் ஸையத் அஹ்மத் பரேலியென்ற பெயருடன்பிரச்சித்திப் பெற்றவர். இவரைப் பின்பற்றுவோர் இவரது காலத்தில் இவரை முஜாஹித் என்றும், ஷஹீத் என்றும் இன்றுள்ளோரும் போற்றிப் புகழுகின்றனர்.

மார்க்க அறிவுள்ள வாசகப் பெருமக்கள் நன்கு சிந்தித்துப் பாருங்கள். மேலே கூறப்பட்ட வாசகத்தில் ஜிஹாத் சன்மார்க்க அறப்போர் என்று குறிப்பிடப்பட்டுள்ளதே, அது; ஆங்கிலேயர்களது அனுமதி மற்றும் அவர்களுடைய தூண்டுதல் காரணமாக நடத்தப்படுகின்றதெனில், அது ஜிஹாத் பீ ஸபீலில்லாஹ்வா? இறைப் பாதையில் இறை திருப்தியை நாடி



செய்யப்படும் சன்மார்க்க அறப்போரா? என்பதை சிந்தித்துப் பாருங்கள்.

இன்னும் கேளுங்கள்,....

***கல்கத்தாவில் மவ்லவீ இஸ்மாயீல் ஜிஹாதைப் பற்றி பயான் செய்யத் துவங்கினார். இன்னும் சீக்கியர்களது அக்கிரமங்களால் அவதியுற்றோருடைய அவலநிலையை விளக்கிக் கொண்டிருந்தார்.***

***அப்போது ஒருவர் எழுந்து நின்று, நீங்கள் ஏன் ஆங்கிலேயர்களை எதிர்த்து ஜிஹாத் செய்ய ஃபத்வா கொடுப்பதில்லை என்று கேட்டார். அதற்கு மவ்லவீ இஸ்மாயீல் அவர்கள்,....***

***அவர்களு(ஆங்கிலேயரு)டன் ஜிஹாத் செய்வதென்பது எவ்வகையிலும் வாஜிபில்லை. ஏனெனில், முதலாவது: நாம் அவர்கள் குடிமக்களாயிருக்கிறோம். இரண்டாவது: நமது மார்க்கக் கடமைகளை நாம் நிறைவேற்றுவதில் அவர்கள் கொஞ்சங்கூட தலையிடுவது கிடையாது. அவர்களது ஆட்சியில் நமக்கு சகல வகையிலும் சுதந்திரமுள்ளது. எனவே அவர்கள்மீது எவரேனும் தாக்குதல் நடத்தினால், அப்படி தாக்குவோரை எதிர்த்து போரிட வேண்டியது முஸ்லிம்களது கடமையாகும். நமது கவர்மெண்டுக்கு (அரசுக்கு) எவ்விதப் பங்கமும் ஏற்படக் கூடாது.***

***(நூல் : ஹயாத்துத் தைய்யிபா, பக்கம் 296)***

அநேகமாக மவ்லவீ இஸ்மாயீல் ஸாஹிபுடைய இப்பயானை படித்த பின்னர் மவ்லவீ இஸ்மாயீல் ஸாஹிபுடைய ஜிஹாதானது தமது பரங்கி எஜமானர்களை மகிழ்விக்கவும், பிரிட்டிஷ் அரசாங்கத்தை வலுப்படுத்தவும் தானென்பதில் யாருக்கும் எவ்விதச் சந்தேகமும் இருக்க முடியாது. ஆகையால் தான் மவ்லவீ இஸ்மாயீல் கூறுகின்றார்,....

அவர்கள் (ஆங்கிலேயர்)மீது எவராவது தாக்குதல் நடத்தினால் அப்படி தாக்குவோரை எதிர்த்துப் போரிட வேண்டியது முஸ்லிம்களது கடமையாகும். நமது கவர்மெண்டுக்கு (அரசுக்கு) எவ்விதப் பங்கமும் ஏற்படக் கூடாதென்று,

கற்றுணர்ந்த இஸ்லாமியப் பெருமக்கள் நன்கு கவனியுங்கள். ஈமானற்ற, அநியாயக்கார ஆங்கிலேயரது ஆட்சியை தமது தலையில் தூக்கி வைத்துக் கொண்டு ஆங்கிலேயர்களின் எதிரிகளுடன் ஜிஹாத் (போர்) செய்வது ஃபர்ளு (கடமை) என்று மவ்லவீ இஸ்மாயீல் கூறுகிறார். இன்னும் காஃபிர்களாகிய ஆங்கிலேயர்களுக்கு அடிமைகளாக இஸ்லாமியர்களிருக்க வேண்டும். அதற்காக அந்த அராஜகர்களான ஆங்கிலேயரின் ஆட்சியைப் பாதுகாக்கப் போரிடுதல் சன்மார்க்க அறப்பேரரான ஜிஹாதாகும். அதுமட்டுமல்ல, அது இஸ்லாமியர்கள்மீது கடமையுமாகும் என்பதை உறுதிப்படுத்துவதற்காக திருமறை வசனம் அல்லது ஹதீஸ் போன்றவற்றின் ஆதாரங்கள் மிகத்திறன் வாய்ந்த எந்த ஆலிமுக்காவது தோன்றியிருக்குமா? ஆனால் இந்த தப்லீக் ஜமாஅத்தினரால் ஷஹீத் என்று கொண்டாடப்படும் மவ்லவீ இஸ்மாயீலுடைய அபாரமான அறிவுக்கு அது தென்பட்டுள்ளது. அதனால் தானே ஆங்கிலேயரின் எதிரிகளுடன் போரிடுவதை ஃபர்ளு கடமையென்று இஸ்லாமியர்கள்மீது சுமத்துகிறார்.

உண்மை என்ன தெரியுமா? பராக்கிரமசாலிகளான ஆங்கிலேயர்களின் தரப்பிலிருந்து எவருக்கும் தெரியாமல் இரகசியமாக இந்த மவ்லவீகள் வாங்கிக் கொண்டிருந்த லஞ்சம் செய்த பேரற்புதம் தான் இது.

எனவேதான் ஜிஹாதுடைய மைதானத்தில் கூட வானமண்டலத்தின் மலக்குகளுக்குப் பகரமாக ஒவ்வோரிடத்திலும் இந்த ஐரோப்பிய ஷைத்தான்கள் ஸையத் அஹ்மத் ஸாஹிபுக்கும், மவ்லவீ இஸ்மாயீலின் வகையறாவுக்கு



உதவியாளராகக் காணப்பட்டனர். ஆகையால் இதைப் பற்றி விரிவாகத் தெரிய மவ்லவீ, அபுல் ஹஸன் அலி நத்வியால் எழுதப்பட்ட நூல் ஸீரத்தே சையத் அஹ்மத் முதல் பாகத்தின் இப்பகுதியைப் படியுங்கள்.

***இதற்குள் குதிரைமீது சவாரியாகி ஒரு ஆங்கிலேயன் சில பல்லக்குகளில் உணவுப் பொருட்களைச் சுமந்து கொண்டு படகுக்கருகில் வருவதைப் பார்த்தோம். அருகில் வந்த ஆங்கிலேயன்,.... பாதிரி ஸாஹிப் எங்கேயிருக்கிறார்? என்று வினவினான். உடனே ஹள்ரத்தவர்கள் படகிலிருந்து நான் இங்கேயிருக்கிறேன் என்று பதில் தந்தனர். ஆங்கிலேயன் உடனே குதிரையைவிட்டும் கீழே இறங்கி தலையில் அணிந்திருந்த தனது தொப்பியைக் கழற்றிக் கையில் வைத்துக் கொண்டு படகை அடைந்து,.... நலம் விசாரித்தபின் தங்களின் வருகையைப் பற்றி செய்தி தருமாறு மூன்று நாட்களாக எனது வேலையாட்களை இங்கேயே நிறுத்தி வைத்திருந்தேன் என்று கூறி மேலும்,.... இன்று ஹள்ரத்தவர்கள் தமது கூட்டத்தினருடன் என் வீட்டுக்கு முன்புறமாக வந்து சேரக்கூடிய சாத்தியக் கூறுகள் நிறைய இருப்பதாக என் வேலையாட்கள் எனக்குத் தகவல் தந்தனர். அதன் பேரில் தங்களுக்காக சூரியன் மறையும் வரை நான் உணவு தயாரிப்பதில் மும்முரமாயிருந்தேன். இதுகேட்ட ஸையத் ஸாஹிபவர்கள், கொண்டுவரப்பட்ட உணவுப் பொருட்களை தமது பாத்திரங்களுக்கு மாற்றுமாறு ஆணையிட, உணவு பெற்றுக் கொள்ளப்பட்டு கூட்டத்தினருக்கு விநியோகிக்கப்பட்டது. இதன்பின் அந்த ஆங்கிலேயன் இரண்டு மூன்று மணி நேரம் வரை தங்கியிருந்த பின் அங்கிருந்து சென்று விட்டான்.***

***(நூல்: ஸீரத்தே ஸையத் அஹ்மத் முதல் பாகம் பக்கம் 190)***

மேலே கண்ட வாசகங்களை வாசகர்கள் திரும்பத்திரும்பப் படித்துப் பாருங்கள். மவ்லவீ இஸ்மாயீல் தெஹ்லவியுடைய மெய்ஞானப் போதகர் சையத் அஹ்மத்

பரேலி ஸாஹிப் ஆங்கிலேயருடன் எத்துணை ஆழமான ரகசியத் தொடர்பு கொண்டிருந்தார். அதுமட்டுமா! பன்றியைச் சாப்பிடக்கூடிய ஆங்கிலேயரது வீட்டில் சமைக்கப்பட்ட உணவை கொஞ்சங்கூட தயக்கமின்றி அவரும் அவரது கூட்டத்தாரும் எவ்வாறு உண்டு மகிழ்ந்தனர் என்பதை யோசித்துப் பாருங்கள்.

மேலும் இந்த மவ்லவீகளது புகழ்பெற்ற ஜிஹாதில் உண்மையில் ஆங்கிலேயருடைய சதித் திட்டங்களுக்கு செயலுருவங்கள் கொடுக்கப்பட்டு வந்தன. அப்பாவியான முஸ்லிம்களோ, இம்மவ்லவீகளுடைய ஜுப்பாவையும் தலைப்பாகையையும் கண்டு நம்பி இறைவனின் பாதையில் அறப்போர் புரியப் போகிறோமென்ற தவறான நல்லெண்ணத்துடன் கூட்டங் கூட்டமாக ஒன்று திரண்டனர்.

ஆனால் வெள்ளையனுக்கு வழிப்படும் இப்பரங்கியர்களின் ஏஜெண்டுகளோ தமது இரகசியமான சுயநல நோக்கங்களுக்காக வேண்டி கொஞ்சமும் தயங்காமல் அப்பாவி முஸ்லிம்களைப் பயன்படுத்தினர். அத்துடன் ஆங்கிலேயர் வகுத்துத் தந்த திட்டங்களுக்குத் தக்கவாறு இஸ்லாமியர்களிடையே பிரிவினையை உருவாக்கும் கடமையை செவ்வனே செய்துவந்தனர். (இதைப்பற்றி அடுத்தடுத்து வரும் பக்கங்களில் காணலாம்.)

ஏழுஆண்டு காலம் வரை லண்டனில் வசித்த எனது நண்பர் கேப்டன் அப்துல் ஹமீத் எனக்கு தெரிவித்த விஷயம் யாதெனில்,

அரபு, பார்ஸி போன்ற மொழிகளில் நன்கு தேர்ச்சி பெற்றவர்களுக்கு ஆங்கில அரசாங்கம் உயர்ந்த ஊதியம் கொடுத்து மார்க்க அறிஞர்கள், மெய்ஞானப் போதகர்கள் முதலான வேடங்களில் இந்தியா மற்றும் ஆப்கானிஸ்தான் நாடுகளுக்கு சிலரை அனுப்புகின்றது. இவர்கள்தமது



திறமையைக் காட்டி மக்களை தம் வசப்படுத்திக் கொள்கின்றனர். பின்னர் அவ்வப்போது தங்களின் மெய்ஞானச் சீடர்களுக்கு கராமத்துச் செய்வதாகவும், இறைவனிடமிருந்து தமக்குக் கிடைப்பதாகக் கூறி பெருந் தொகைகளை கொடுத்து தங்களின்இசைவுக்குத் தக்கவாறு நடக்கச் செய்வர். அவசியமேற்படும் நேரங்களில் தமது இவ்வறிவற்ற மெய்ஞானச் சீடர்களைக் கொண்டு இஸ்லாமியர்களிடையே பல புதிது புதிதான மதக்கோட்பாடுகளை உண்டாக்கி பெரும் குழப்பங்களை செய்யத் தூண்டுவார்கள்.

தங்களின் ஏஜெண்டுகளான இந்த மவ்லவீகளை ஆங்கிலேயர் பெரிதும் கண்ணியப்படுத்துவர். இவர்களை மவ்லவீயென்றோ மவ்லானா என்றோ அழைப்பதற்குப் பதிலாக பாதிரி ஸாஹிப் என்றே அழைப்பர். ஸையத் அஹ்மத் பரேலி ஸாஹிபுடைய மேலே விபரிக்கப்பட்ட நிகழ்ச்சியை கொஞ்சம் உங்கள் கண்முன்னே நிறுத்தி சிந்தித்துப் பாருங்கள். அவரைப் பின்பற்றி நடக்கக்கூடிய மவ்லவீ அபுல் ஹஸன் நத்வீயுடைய விரிவான பயானை மீண்டுமொரு முறை படித்துப் பாருங்கள். அப்படி படித்துப் பார்த்தால் இந்த (இஸ்லாமிய) சமுதாயத்திற்கு நிகழ்ந்துவிட்ட அவல நிலையைக் கண்டு உங்களின் உள்ளம் குமுறும் தங்களின் மனச்சாட்சியை விற்று நாட்டையும் சமுதாயத்தையும் பகைவரிடம் ஏலம் விடக்கூடிய துரோகிகள் ஒவ்வொரு காலத்திலும் தோன்றிக் கொண்டு தானிருந்தனர் என்பதும் புரியும்.

முன்கூட்டியே போட்ட திட்டப்படி குறிப்பிட்ட நேரத்தில் பல்லக்குகளில் உணவுப் பொருட்களைச் சுமர்ந்துகொண்டு சையத் அஹ்மத் மற்றும் மவ்லவீ இஸ்மாயீலிடம் ஆங்கிலேயர்கள் வருகை தருதல். மேலும் இவ்வாறு புகழ்பெற்ற முஜாஹிதீன்களது உணவுக்காக வேண்டி விசேஷமான முறையில் ஏற்பாடுகளைச் செய்து வைத்தல் போன்ற இவையனைத்தும் என்ன? இஸ்லாத்தின் தப்லீக் பிரச்சாரத்திற்காகவா? அல்லது அல்லாஹ்வின் பாதையில்

புரியப்போகும் சன்மார்க்கப் போராகிய ஜிஹாதுக்காகவா? இல்லையெனில், பின்னர் எதற்காக என்பதை ஈமானுடைய ஒவ்வொருவரும் தெளிந்த சிந்தனை, அறிவு போன்றவற்றைக் கொண்டு மிக எளிதில் விளங்கிக் கொள்வர்.

ஸையத் அஹ்மத், மவ்லவீ இஸ்மாயீல் மற்றும் அவர்களின் அபிமானிகளுக்கு வெறும் உணவு மட்டும்தான் வந்து கொண்டிருந்ததென எண்ணவேண்டாம். மாறாக, வெவ்வேறு பெயர்களில் அவர்களுக்கு பெரும்பெரும் தொகைகளும் முறையாக வந்து கொண்டிருந்தன. இதைப்பற்றி 'தவாரீகே அஜீபஹ்' என்னும் நூலிலிருந்து ஒரு வாசகத்தைப் பாருங்கள்.

***ஸையத் ஸாஹிப் ஜிஹாதில் மும்முரமாக ஈடுபட்டிருந்தநேரம் அப்போது டில்லியைச் சேர்ந்த தனவந்தர்கள் மூலமாக முஹம்மத் இஸ்ஹாக் என்பவரிடமிருந்த சையத் ஸாஹிபுடைய பெயருக்கு ஏழாயிரம் ரூபாய்க்கான ஒரு உண்டி (ஒருவகை செக் போன்றது) அனுப்பப்பட்டது. பஞ்சாபில் உரியவருக்கு அத்தொகை (ஸையத் அஹ்மத் ஸாஹிபுக்கு) பட்டுவாடா செய்யப்படாததால் ரூபாய் ஏழாயிரம் திருப்பித் தரப்பட வேண்டுமென முன்சீப் கோர்ட்டில் வழக்கொன்று தொடரப்பட்டு தீர்ப்பும் ஆனாது. பின்னர் ஆக்ராவுடைய ஹைகோர்ட்டில் அப்பீல் செய்யப்பட்டு வாதிக்கே மீண்டும் சாதகமாக தீர்ப்பாயிற்று.***

***(நூல் : தாரீகே அ4பஹ் பக்கம் 89)***

வாசகப் பெருமக்களே! ஆங்கிலேயனின் நரித்தனம் கொண்ட சாமார்த்தியத்தைப் பாருங்கள். ஒருபக்கம் தனது ஏஜெண்டுகளுக்கு உணவு முதலியவற்றை ஏற்பாடு செய்கிறான். மற்றோர் பக்கம் பெரும் பெரும் தொகைகளை உண்டியின்மூலம் அனுப்புகிறான் வேறோர் பக்கமாக ஸையத் ஸாஹிப் மற்றும் மவ்லவீ இஸ்மாயீல் உடைய கராமத்துகளென்ற கட்டுக்கதைகளை இஸ்லாமியர்களிடையே



பரப்புவதற்காகவென்றே சிலரை ஊதியங்கொடுத்து முஸ்லிம்களிடையே உலவ விடுகிறான்.

இத்தனை சாகசங்களும் எதற்காக? ஆங்கிலேயனிடம் விலைபோய்விட்ட இம்மவ்லவீமார்களின் கண்ஜாடைக்கு இஸ்லாமிய சமுதாயத்தின் ஒரு பெரும் பகுதியை ஆடச் செய்தவற்காக. பிறகென்ன குறைச்சல்! மதத்தின் பெயரால் முஸ்லிம்களைக் கொண்டே முஸ்லிம்களின் கழுத்தை அறுக்க வேண்டியதுதான்.

மேலும் சரியான ஒரு சந்தர்ப்பத்தில் முஜாஹிதீன்களெனப்படும் சன்மார்க்க அறப்போர் வீரர்களை போர்க்களத்திலேயே அனாதையாக தவிக்க விட்டு விட்டு சையத் அஹ்மத் எப்படி மாயமாய் மறைந்து போனாரென்பதை அவரது அபிமானி எத்துணை நயம்பட நாகரீகமாகத் தமது அபிமானம் பொங்க எடுத்துரைக்கிறார் பாருங்கள்!

மற்றொரு நபர் விபரித்ததாவது,....

***அதே நாளன்று நாங்கள் சையத் ஸாஹிபவர்களை ஒரு மலைக் குன்றுக்கருகில் தேடிக் கொண்டிருந்தோம். திடீரென கொஞ்ச தூரத்தில் சலசலப்புக் கேட்க, நான் அங்கு போய் பார்த்தபோது,...***

***சையத் ஸாஹிபும், அவருடைய இருவழித் துணைவர்களும் அங்கே அமர்ந்திருந்தனர், நான் ஸலாம் சொல்லி முஸாபஹாவும் செய்து கொண்டேன். பின்னர், ஹள்ரத்! ஏன் திடீரெனத் தலைமறைவாகி விட்டீர்கள்? தங்களைக் காணாமல் அனைவரும் மிகவும் பரிதவித்துப் போய்விட்டனர். இறுதியில் வேறுவழியின்றி ஒரு குறிப்பிட்ட ஒருவரை நாங்கள் கலீஃபாவாகத் தேர்ந்தெடுத்துக் கொண்டோம். அத்துடன் அவரிடம் பைஅத்து (வாக்குப் பிரமாணமு)ம் செய்து கொடுத்தோமென்று மிக்கப் பணிவுடன் நான் சொல்ல,...***

***இதுகேட்ட ஸையத் ஸாஹிபவர்கள், எங்களை மிகவும் பாராட்டிவிட்டு, தற்போது நமக்கு தலைமறைவாயிருக்க வேண்டுமென உத்திரவாகியுள்ளது. ஆதலால் நாம் வர இயலாது என்று கூறினார்கள். அதன்பின்னர் எங்களைச் சேர்ந்தவர்களின் நிலையையும், நலன்களையும் விசாரித்தபின்னர் அங்கிருந்து கிளம்பி விட்டார்கள்.***

***உடனே நானும் அவர்களுடன் செல்ல அனுமதி கேட்கவும், வேண்டாமென தடுத்து விட்டார்கள். பிறகு நான் மிகவும் முயன்று அவர்களுடன் செல்ல எத்தனிக்கவும் எனது கைகால்கள் கனத்துவிட்டன. நான் அப்படியே நின்றிருந்தேன். யாஅல்லாஹ்! நான் இனி எவ்வாறு நடப்பேனாயென்று வியப்பும், இயலாமையும் மேலிட நின்றிருந்தேன். தமது வழித் துணைவர்களுடன் ஹள்ரத் சையத் ஸாஹிப் இதற்குள் மாயமாய் மறைந்து விட்டனர்.***

மூன்றாவதாக ஒருவர் விபரித்த செய்தியானது,....

***நாங்கள் ஸையத் ஸாஹிபவர்களை தேடித் தேடி அலைந்து கொண்டே ஒருநாள் ஒரு கிராமத்திற்கு வந்து சேர்ந்தோம். அங்குள்ளோரிடம் விசாரித்தபோது, புதிதாகக் கட்டப்பட்டிருந்த ஒரு கப்ரு அப்போதுதான் இடித்துத் தள்ளப்பட்டிருந்ததென்பதை அறிந்தோம். உயரமாக கப்ரு இருந்த காரணத்தால் ஸையத் ஸாஹிபவர்கள்தான் அதனை இடிக்கச் செய்தார்களென்பதை தெரிய வந்தபோது, உடனே அங்குமிங்குமாக சையத் ஸாஹிப் இருக்கிறார்களா எனத் தேடினோம். ஆனால் ஒரு துப்பும் கிடைக்கவேயில்லை.***

***(நூல் : அர்வாஹெ ஸலாஸஹ் பக்கம் 140)***

*பார்த்தீர்களா? இவர்கள் ஜிஹாது செய்யும் லட்க்ஷணத்தை தங்கள்கூட வந்த முஜாஹிதீன்களையெல்லாம் நடு மைதானத்தில் பரிதவிக்க விட்டுவிட்டு தலைமறைவாக இருக்கச் சொல்லி இவருக்கு உத்திரவாகியுள்ளதாம். தலைமையில்லாத முஸ்லிம்கள் தரிகெட்டு வாக்கு விவாதங்களில் மூழ்கி பிளவு பட்டுப்போய் சீக்கியர்களின் தாக்குதலுக்கு இரையாகி கொல்லப் படட்டும் என்றுதானே! உடன் வந்த தொண்டர்களை நடுக்காட்டில் தனியாக விட்டுவிட்டு வருவதற்குப் பெயர்தான் ஜிஹாதா? முஸ்லிம்களை சீக்கியர்களிடம் மாட்ட விட்டுவிட்டு இவரை மட்டும் தலைமறைவாயிருக்குமாறு இவருக்கு உத்தரவிட்டதுயார்? அல்லாஹ்வா? ஆங்கிலேயனா? முஸ்லிம்கள் சீக்கியர்களால் கொல்லப்பட்டு அழியும்போது ஆங்கிலேயத்துரைமார்களின் பாதங்களில் மண்டியிட்டுப் பரிசுகளையும் பாராட்டுகளையும் பெற்றுக் கொள்வதற்காகத்தான் தலைமறைவாகி ஓடிவிட்டார்களா? முஸ்லிம் சகோதரர்களே! சிந்தியுங்கள். இவரையும் இவருடைய மெய்ஞானச் சீடர் மவ்லவீ இஸ்மாயீலையும் தான் தப்லீக் ஜமாஅத்தினர் ஷஹீதென்று பட்டம் தந்து சிறப்பிக்கின்றனர். மேற்கண்ட வாசகத்தில் மூன்றாவது நபர் தரும் விபரங்களை மீண்டும் வாசகர்கள் நன்கு கவனியுங்கள்.*



***புதிதாகக் கட்டப்பட்டிருந்த ஒரு கப்ரு அப்போதுதான் இடித்துத் தள்ளப்பட்டிருந்த தென்பதை அறிந்தோம். உயரமாக கப்ரு இருந்த காரணத்தால் சையத் ஸாஹிபவர்கள்தான் அதனை இடிக்கச் செய்தார்களென்று தெரியவந்தது.***

இது ஒன்றும் புதிதல்ல! மகான்களின் கப்ரு ஷரீஃப்களை இடித்தல், மார்க்கப் பெரியோர்களின் கப்ருகள்மீது கட்டப்படும் குப்பாவை கட்டிடத்தை உடைத்தெறிதல், சாதாரண இஸ்லாமியர்களின் கப்ருகளை இடித்துத் தரைமட்டமாக்குதல் போன்ற இவையனைத்தும் நஜ்தி வஹ்ஹாபிகளின் பழம் பெரும்பொழுது போக்குகளும் விருப்பமான செயல்களுமாகும். ஆதலால்தான் முஹம்மதிப்னு அப்துல் வஹ்ஹாப் நஜ்தி ஒருமுறை கூறினான்.

எனக்கு மட்டும் வாய்ப்புக் கிடைத்தால் முஹம்மத்

ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் கப்ரு ஷரீபை தோண்டி உடைத்தெரிந்து விடுவேன். காரணம், அத்துடன் உலகிலிருந்து ஷிர்க் ஒழிந்துபோய் விடுமென்று (மஆதல்லாஹ்)

இதனால்தான் ஸையத் அஹ்மத் ஸாஹிபும் மவ்லவீ இஸ்மாயீல் சாஹிபும் முஸ்லிம்களின் கப்ருகளை உடைத்தெரிந்து கொண்டலைந்திருக்கின்றனர்.

ஆகையால் எல்லைப் புற மாகாணத்தில் வாழ்ந்து வந்த மிகவும் ரோஷங் கொண்ட முஸ்லிம்கள் துவக்கத்தில் இந்த ஜுப்பா தலைப்பாகை அணிந்த பரங்கியரின் ஏஜெண்டுகளை மிகவும் கண்ணியப்படுத்தி வந்தபோதிலும், இவர்களது உண்மையான வஹ்ஹாபியக் கொள்கையைத் தெரிந்தபோது கொதித்தெழுந்தவர்களாய் இறுதியில் மிகமிக இழிவான முறையில் இவர்களை இம்முஸ்லிம்களே கொன்று போட்டனர்.

இங்கு இன்னொன்றையும் கவனிக்க வேண்டும். அதாவது ஸையத் அஹ்மத் ஸாஹிபும், மவ்லவீ இஸ்மாயீல் தெஹ்லவியும் யாருடன் ஜிஹாத் செய்தார்களென்பதை நீங்கள் தெளிவாகப் புரிந்து கொள்ளுதல் அவசியம். இந்திய நாட்டு முஸ்லிம்களை இவர்கள் இருவரும் எவ்வாறு குஃப்ரை ஒழிக்க, இஸ்லாத்தைப் பரப்ப, இறைவேதத்தை முழங்கச் செய்ய நாயகத் தோழர்கள் ஜிஹாத் செய்தார்களோ அதேபோன்றுதான் நாமும் ஜிஹாத் செய்யப் போகிறோமென்னும் ஆவலில் முஸ்லிம்கள் இவ்விருவரது தலைமையிலும் ஒன்று திரண்டனர். ஆனால் எல்லைப்புற மாகாணத்தை அடைந்தபோது அங்கு நிலைமை நேர்மாறாக இருந்தது. முஸ்லிம்களைக் கொண்டே முஸ்லிம்களை கருவறுக்கக் கூடிய சதித்திட்டம் உருவாக்கப்பட்டிருப்பது அங்கு போன பின்புதான் தெரியவந்தது.

மவ்லானா ரஷீத் அஹ்மத் கங்கோஹீ தப்லீக் ஜமாஅத்தை ஸ்தாபித்த மவ்லவீ இல்யாஸ் காந்தல்வி உடைய மெய்ஞானப் போதகர் சொல்வதைக் கேளுங்கள்,...



அம்பேட்டி நகரில் வசிக்கும் ஹாபிஸ் ஜானி என்பவர் தம்மிடம் கூறியதாக ஹள்ரத் மவ்லானா ரஷீத் அஹ்மத் கங்கோஹீ இது பற்றிக் கூறியதாவது,...

***நாங்கள் (ஹாபிஸ் ஜானியும் அவரது தோழர்களும்) காபிலாவு (போராளிகளின் கூட்டத்து)டன் போய்க் கொண்டிருந்தோம். அவ்வப்போது வழியில் ஹள்ரத் சையத் ஸாஹிபவர்களின் பற்பல கராமத்துக்களையும் நாங்கள் கண்டோம். மவ்லவீ அப்துல் ஹை ஸாஹிப் லக்னவி, மவ்லவீ இஸ்மாயீல் தெஹ்லவி, மவ்லவீ முஹம்மத் ஹுஸைன் ராம்பூரி ஆகியோரும் எங்களுடன் வந்து கொண்டிருந்தனர். இந்த ஹள்ரத்மார்களும் சையத் ஸாஹிபுடன் சேர்ந்து ஜிஹாதுக்காக சென்று கொண்டிருந்தனர். யாகிஸ்தானுடைய அதிகாரி யார் முஹம்மத் கான் என்பவருடன் ஸையத் ஸாஹிபவர்கள் முதன்முதலாக ஜிஹாத் செய்தனர். (நூல் : தத்கிரத்துர் ரஷீத், இரண்டாம் பாகம், பக்கம்: 270)***

இஸ்லாமியர்களை அடிமைகளாக்க வேண்டுமென்பதற்காக முஸ்லிம்களைக் கொண்டே முஸ்லிம்களைக் கருவறுப்பதற்காக பரங்கியக் கொள்ளைக் கூட்டத்தினர் என்னென்ன சாகசங்களைக் கையாண்டுள்ளனர் என்பது நியாயவுள்ளம் படைத்த நேர்மையாளர்களுக்கு இதற்கு மேலுமா மூடுமந்திரமாயிருக்க முடியும்?

ஆங்கிலேயரின் கரங்களை வலுப்படுத்த வேண்டுமென்ற தீய நோக்கத்துடன் இஸ்லாம் மற்றும் தௌஹீதென்னும் போர்வையில் இஸ்லாமியர்களிடையே பிரிவினை, பிளவு என்னும் நஞ்சைக் கலந்த மவ்லவீகளும், மெய்ஞானப் போதகர்களும் யார் யாரென்று தெரியவில்லையா? வாய்ப்புக் கிடைத்தால் முஸ்லிம்களைக் கொண்டே முஸ்லிம்களை கொன்று தீர்க்கக் கூடிய இச்சமுதாயத் துரோகிகள் யாரென்று இன்னும் புரியவில்லையா? இறைவன் எவருக்கு நல்லறிவையும், அகப்பார்வையையும் வழங்கியுள்ளானோ, அவர்களுக்கு

மேற்கொண்டு விளக்கப்படுத்தத் தேவையில்லை என்பது என் எண்ணம்.

ஆனால் மேற்கண்ட வெள்ளையர்களிடம் சோரம் போய்விட்ட மவ்லவீமார்களையும், மெய்ஞானப் போதகர்களையும்தான் தேவ்பந்தைச் சார்ந்த வஹ்ஹாபிகள் இன்றும் வலி, ஷஹீத், குத்பு, முஜாஹித் என்று பாராட்டுக்கள் வழங்கி கண்ணியப்படுத்தி வருவதோடு, இவர்களது பெயர்களுடன் ரஹ்மத்துல்லாஹி அலைஹி என்றும் சேர்த்துக் கூறி வருகின்றனர்.

வெள்ளையருக்கு வழிப்பட்டு நடந்த இம்மவ்லவீகளால்தான் நஜ்தி வஹ்ஹாபியக் கொள்கைகள் இந்திய நாட்டில் பரப்பப்பட்டன என்னும் ஒரேயொரு காரணத்திற்காகவே இவர்களை இப்படியெல்லாம் பாராட்டுகின்றனர். மவ்லவீ இஸ்மாயீல் தெஹ்லவியும் அவரது ஆன்மிகத் தந்தை மெய்ஞானப் போதகர் ஸையத் அஹ்மத் ஸாஹிபும் எவ்வாறு ஜிஹாத் செய்தார்களென்பதைப் பார்த்தீர்கள். இனி இவர்கள் எவ்வாறு ஷஹீதானார்க (அமரத்வமானார்க)ளென்பதை சுருக்கமாகப் பார்ப்போம். கூன்கே ஆன்ஸு நூலாசிரியர் இப்ப எழுதுகிறார்டி,....

***ஸையத் அஹ்மத் மற்றும் மவ்லவீ இஸ்மாயீல் தெஹ்லவியும் 'பீச்தார்' என்னுமிடத்திற்கு போய்ச் சேர்ந்தபோது, அங்குள்ள தனவந்தர் பதஹ்கான் என்பவர் துவக்கத்தில் இவர்களுக்கு மிகவும் மரியாதை பணிவிடை செய்து வந்தார். இவர்களும் சிறிது நாட்கள் வரை அங்கே தங்கியிருந்தனர். ஆனால் நாளடைவில் இவர்களிருவரும் அங்குள்ளோரிடம் அநியாயமும் அக்கிரமமும் செய்ய ஆரம்பித்தனர். அங்கு வாழ்ந்த மக்களை தீயநெறி கொண்டோரென்றும், தீயமார்க்கமுடையோரென்றும் கூறத் துவங்கினர். நிலைமை மிகவும் மோசமாகவே இவர்களிருவரையும் அதே ஸ்தலத்தில் பட்டான்கள் தீர்த்து விட்டனர். தமது அக்கிரம அழிச்சாட்டியத்தால் இவ்விருவரும் பட்டான் களால் கொல்லப்பட்டனர்.***

***(நூல் : கூன்கே ஆன்ஸூ முதல்பாகம் பக்கம் 36)***



இதுவரை நாம் சொல்லி வந்த ஆதாரங்களைக் கொண்டு மவ்லவீ இஸ்மாயீல் தெஹ்லவியுடைய ஜிஹாத் என்னும் போராட்டம் மற்றும் இட்டுக் கட்டப்பட்ட அவரது ஷஹாதத்துடைய உண்மை நிலையையும் விளங்கியிருப்பீர்கள். இனி இந்த மவ்லவீ இஸ்மாயீல் தெஹ்லவி தான் இந்திய நாட்டிலுள்ள வஹ்ஹாபிகள் மற்றும் தேவ்பந்த் உலமாப்பெருமக்களின் இமாமாக, தலைமை ஸ்தானம் வகிப்பவராகக் கருதப்படுகிறார்.

ஆதலால் வஹ்ஹாபி மவ்லவீகள் ஒரு பக்கம் முஸ்லிம்களிடையே தவ்ஹீத் தொழுகை என்ற போர்வையில் நஜ்தி வஹ்ஹாபியக் கொள்கையை பிரச்சாரம் செய்து கொண்டிருந்தனர். மறுபக்கம் ஆங்கிலேயரின் ஏஜெண்டுகளாயிருந்து கொண்டு மேலே விபரிக்கப்பட்ட தங்களின் பிரச்சாரங்களால் முஸ்லிம்களிடையே பிரிவினை சண்டை சச்சரவு என்னும் விஷக் கிருமிகளைப் பரப்பி வந்தனர். இதனால் ஒற்றுமையுடன் சுமுகமாக கட்டுக்கோப்பாக வாழ்ந்த வந்த முஸ்லிம் சமுதாய ஒற்றுமையை நிரந்தரமாகச் சீர்குலைத்து அழித்துவிட்டனர். இனிமேல் என்றைக்குமே ஒருங்கிணைய இயலா வண்ணம் அவர்களிடையே பகைமையை வேரூன்றச் செய்துவிட்டனர்.

(அவர்களின் செயலுக்காக அல்லாஹ் அவர்களை வெட்டினான்.)

மவ்லவீ இஸ்மாயீல் தெஹ்லவிக்குப்பின் மவ்லவீ ரஷீத் அஹ்மத் கங்கோஹி, மவ்லவீ அஷ்ரஃப் அலீ தானவீ, மவ்லவீ இல்யாஸ் காந்தல்வி போன்றோரும் கூட ஆங்கிலேயரின்

அடிவருடிகளாகத்தான் இருந்தனர். சையத் அஹ்மத் பரேல்வி மற்றும் மவ்லவீ இஸ்மாயீல் தெஹ்லவியுடைய அதே சாயம் இவர்கள்மீதும் ஏறித்தானிருந்தது. அதற்கேற்றாற்போல் ஆங்கிலேயரும் இவ்வடிவருடிகளை ஆதரித்து இவர்களுக்கு வாரி வாரி வழங்குவதில் குறையேதும் விட்டு வைக்கவில்லை.

ஆதலால் இவர்களைப் பற்றி வரலாற்றுப் பூரணமான சில சாட்சிகளை விளக்கத்திற்காக தருகிறேன். படித்துப் பாருங்கள்.

***மவ்லவீ ரஷீத் அஹ்மத் கங்கோஹி கூறுகிறார்.... சிலரது தலைக்குமேல் மரணம் துள்ளித் திரிந்து கொண்டிருந்தது. அமைதியும், நலனும் நிறைந்த கம்பெனி (ஆங்கிலேய ஆட்சியின் அந்நாட்களை அவர்கள் மதிக்கவில்லை தங்களின் கருணையுள்ளம் கொண்ட கவர்மெண்டு (ஆங்கில அரசு)க்கு எதிராக அவர்கள் புரட்சிக்கொடி ஏற்றினார்கள்.***

***(நூல் : தத்கிரத்துர் ரஷீத் பக்கம் 83)***

இஸ்லாமியர்கள்மீது அராஜகத்தை கட்டவிழ்த்துவிட்ட ஆங்கிலேயர்கள், இஸ்லாமிய வீரர்களைக் கொன்றுகுவித்தப் பரங்கியர்கள், இஸ்லாமியப் பெண்களின் கற்பை சூரையாடிய காமுகர்கள் இந்த நாட்டைவிட்டுப் போகிறோம், போகிறோமென்று நம்மிடையே சண்டை சச்சரவுகளை உருவாக்கி விட்டு விட்டுப் போயினர். அதனால் இன்றுவரை நமது சமுதாயம் அடைந்த இழப்புக்களுக்கு ஈடே கிடையாது. அவர்களைத்தான் மவ்லவீ ரஷீத் அஹ்மத் கங்கோஹி மேற்கண்டவாறு புகழ்மாலை சூட்டுகிறார். ஆம்! இதே அநியாயம் நிறைந்த ஆங்கிலேயே ஆட்சியைத்தான் மவ்லவீ ரஷீத் அஹ்மத் கங்கோஹி அமைதியும் நலனும் கொண்ட அரசென்று போற்றிப் புகழ்ந்து மதிக்கத்தக்க ஒன்றெனக் குறிப்பிடுகிறார். இஸ்லாமியர்களது விரோத ஆட்சியை கருணையுள்ளம் கொண்ட கவர்மெண்ட் என்று வர்ணிக்கிறார். பிரிதோரிடத்தில் இவர் கூறுவதைப் பற்றி மேலும் கேளுங்கள்.



***உண்மையில் நான் சர்க்காரு (ஆங்கில அரசு)க்கு அடி பணிந்தவன். இந்தப் பொய்யர்களால் எனது முடியைக்கூட பிடுங்க முடியாது. அப்படியே ஒருக்கால் நான் கொல்லப்பட்டாலும் சர்க்கார் எஜமானனாயிருக்கிறது. அது விரும்பியதைச் செய்ய அதற்கு முழு அதிகாரமுண்டு. (நூல் : தத்கிரத்துர் ரஷீத் பக்கம் 80)***

இது மவ்லவீ ரஷீத் அஹ்மத் கங்கோஹி ஸாஹிபின் சுயவர்ணனை நான் சர்க்கார் எஜமானனாக இருக்கிறது. அது விரும்பியதைச் செய்ய அதற்கு முழு அதிகாரமுண்டு.

ஆங்கிலேயருக்கு விசுவாசம் கொண்டு அவர்களுக்கு அடிபணிந்து நடக்கும் இந்த மவ்லவீமார்கள் இஸ்லாமிய மக்களிடம் விசுவாசமாகவும், அல்லாஹ் ரஸூலுக்கு அடிபணிந்தும் நடப்பார்களென்று எந்த அறிவுள்ள முஸ்லிமாவது எதிர்பார்க்க முடியுமா?

இரண்டாவதாக இவர் கூறும் இவ்வாசகம் வெள்ளையர்களுக்கு வழிப்பட்டு நடக்கும் இம்மவ்லவீகளது கொள்கைகளும், ஈமானும் எத்தன்மையானது என்பதை அம்பலப்படுத்துகின்றது. அதாவது, தங்களின் உயிருக்கும் உடமைக்கும் எஜமானனாகவும், அவற்றை தான் விரும்பியவாறு ஆட்டிப் படைப்பவனாக இறைவன் இருக்கிறானென்பதை ஈமான் கொள்ளாது பரங்கியரைத் தமது எஜமானன் என்றும், சர்க்கார் விரும்பியதைச் செய்ய அதற்கு அதிகாரமுள்ளதென்றும் எழுதுகின்றார். அது மட்டுமா! அதனைத் தமது செயல் மூலமாகவும் நிரூபித்துக் காட்டுகின்றனர் இந்த வஹ்ஹாபிய மவ்லவீகள்.

ஆதலினாலேயே இப்பரங்கியர் இட்ட ஆணைகளுக்கொப்ப முஸ்லிம்களிடையே சண்டை சச்சரவுகளை உருவாக்கினார்கள். வேற்றுமை, பிரிவு, பிளவு என்னும் நரகத்தின் நெருப்பை கொழுந்துவிட்டெறியச் செய்தார்கள். வெள்ளையர்களும் இவர்களின்இப்புனித பணிக்காக பெரும்பெரும் தொகைகளை ஊதியமாகத் தந்து

ஊக்குவித்தனர். இதன்றி அவ்வப்போது பெருந்தொகைகளையும் சன்மானமாக வேறு வழங்கிவந்தனர்.

எனவே மவ்லவீ அஷ்ரஃப் அலீ தானவீக்கும் உயர்ந்த சம்பளம் வெள்ளையர்களால் மாதந்தோறும் தரப்பட்டு வந்தது. இதைப்பற்றி இதே ஜமாஅத்தைச் சேர்ந்த ஒரு பொறுப்புள்ள மவ்லவி கூறுவதைக் கேளுங்கள்,....

***மவ்லவீ ஹிப்ஜுர் ரஹ்மான் ஸாஹிபுக்கு பதில் தரும் வகையில் கல்கத்தா ஜம்இய்யத்துல் இஸ்லாம் சபைத் தலைவர் மவ்லவீ ஷப்பீர் அஹ்மத் ஸாஹிப் தேவ்பந்தி கூறியதாவது:***

***இதோ பாருங்கள்! எங்களைச் சேர்ந்தவர்களாலும் உங்களைச் சேர்ந்தவர்களாலும் பெரும் சான்றோரெனவும், தலைவரென்றும், ஒப்புக் கொள்ளப்பட்டவர் மவ்லானா அஷ்ரஃப் அலீ தானவீ, அவருக்கு அரசாங்கத்திடமிருந்து மாதந்தோறும் அறுநூறு ரூபாய் தரப்பட்டு வந்ததென்று அவரைப்பற்றி சிலர் சொல்லக் கேள்விப்பட்டதுண்டு.***

***(நூல் : மகாலிமத்துஸ் ஸத்ரைன் பக்கம் 10 முதல் 11)***

மவ்லானா பஜ்லுல் ஹக் கைராபாதி போன்ற சத்தியவந்தர்களான உலமாப்பெருமக்களை நாடு கடத்தி, சில உலமாப்பெருமக்களை தூக்கிலிட்டுக் கொன்று மற்றும் பல உலமாப்பெருமக்களை சிறையிலடைத்துக் கொடுமைப்படுத்திய அநியாயமும் அழிச்சாட்டியமும் புரிந்த ஆங்கிலேயரின் அரசாங்கம்தான் தப்லீக் ஜமாஅத்தினரால் 'ஹகீமுல் உம்மத்' என்று கொண்டாடப்படும் மவ்லவீ அஷ்ரஃப் அலீ தானவீக்கு மாதா மாதம் ரூ. 600 வீதம் தந்து வந்தனர். இன்றைக்கல்ல! இந்தியா சுதந்திரமடைவதற்கு முன்னாலேயே அன்று அத்தொகை எத்தனை பெரிய தொகை என்பதை யோசித்துப் பாருங்கள். இத்தனையும் எதற்காக? இந்த உலமாப்பெருமக்களெல்லாம் சேர்ந்து ஆங்கிலேய



அரசுக்கெதிராக கிளர்ச்சி செய்யவைப்பதன்மூலம் மீண்டும் பத்ரு, ஹுனைன் போன்ற ஜிஹாதுக்கு வழிவகுத்துவிடக் கூடாதே என்பதற்காகத்தான் இந்திய நாட்டின் இந்த வஹ்ஹாபி மவ்லவீகளுக்கு பரங்கியரது அரசாங்கம் லஞ்சம் கொடுத்து வந்தது.

ஏகத்துவ வழிப்பாடு கொண்ட இஸ்லாமியர்களின் நாரே தக்பீர் என்னும் முழக்கமே பரங்கியரை இங்கிலாந்தை நோக்கி விரட்டி விடுமென்ற பயம்தான் அவர்களின் வாயைப்பொத்த மாதா மாதம் அறுநூறு ரூபாய் கொடுத்து மவ்லவீ அஷ்ரஃப் அலீ தானவீ போன்றோரை விலைக்கு வாங்கிற்று.

இஸ்லாமியப் பெருமக்களே! நன்கு சிந்தித்துப் பாருங்கள். மவ்ல அஷ்ரஃப் அலீ தானவீக்கு மாதா மாதம் தரப்பட்ட அந்த அறுநூறு ரூபாய் இஸ்லாமிய மார்க்கத்தைப் பரப்பவா ஆங்கிலேயர்கள் தந்தார்கள்? அவர்களுக்கு இஸ்லாத்தின் வளர்ச்சிமீது அத்துணை கரிசனமா என்ன? யோசித்துப் பாருங்கள்! இவர்களுக்குப் பணம் தந்து ஊக்குவித்த அதே வேளையில் ஆங்கிலேயர்கள், இவர்களின் உள்ளத்தில் அணுவளவாவது இஸ்லாத்தின்மீது நல்லெண்ணம் கருணை இருந்திருக்குமேயானால், மார்க்கத்தின் அறிஞர் பெருமக்களாகிய உலமாப்பெருமக்களை கண்ணியப்படுத்த வேண்டுமென்ற நோக்கமிருந்திருக்குமேயானால்,....

மவ்லானா பஜ்லுல் ஹக் கைராபாதி, மவ்லானா பஜ்லுர் ரஸூல் பதாயூனி, மவ்லானா ஜாபர் தானேசரி, மவ்லானா லுத்புல்லாஹ் அலீகரி, முஃப்தி இனாயகத் அஹ்மத் காகூர்வி, முஃப்தி மஜ்ஹர் கரீம் தர்யாபாதீ போன்ற நூற்றுக்கணக்கான உலமாப் பெருமக்களை, அதுவும் இஸ்லாதின் கண்ணியத்தையும் முஸ்லிம்களின் வாழ்வும் காக்க வேண்டி முன்வந்த இந்நன்மக்களை கி.பி. 1857ன், காலத்திற்கு முன்னரே ஆங்கிலேய அரசு கைது செய்து நாடு கடத்தியதே! இவர்களுக்கெல்லாம் மாதா மாதம் ஊதியம் எதுவும்

*தரப்படவில்லையே! ஏன்?*

மவ்லானா பஜ்லுல் ஹக் கைராபாதி மற்றும் அவருடன் ஒத்துழைத்த உலமாப் பெருமக்களின் தலைகளை வேண்டுமென்றால் வெட்டி வீழ்த்த முடியும்! ஆனால் அவர்களது சொற்களையும், எழுத்தையும் மட்டும் விலைபேசி வாங்க ஒருக்காலும் முடியாது.

இவர்கள் இந்திய வாழ் இஸ்லாமிய மக்களுக்காக பாடுபட்ட கலப்பற்ற தூய எண்ணங்கொண்ட சிறந்ததோர் வழிகாட்டிகள், உண்மையில் இவர்கள் நாயிபே ரஸூலா (ரஸூலின் பிரதிநிதியா)க தமது சொல், செயல், உயிர், பொருள், ஆவி அனைத்தையும் தியாகம் செய்தவர்கள். நபிகளாரின் திருப்பேரர் ஹள்ரத் இமாமுல் ஆலி மக்காம் ஸூஸைன் ரளியல்லாஹூ அன்ஹூவைப் போன்று தம்முயிர், தம்முயிருக்கும் இனிய தமது புதல்வர்கள், சுற்றத்தாரனைவரின் செங்குருதியையும் கொட்டி இந்திய நாட்டை கர்பலா களமாக்கிடத் துடித்தவர்கள். ஆங்கிலேயரின் பாதத்தை வருடி அவர்களிடம் பைஅத் (வாக்குப் பிரமாணம்) செய்வதை தங்களின் ஈமானுடைய ரோஷத்திற்கெதிரான செயலென்று கருதியவர்கள். இதனால்தான் இவர்கள் ஆங்கிலேயரின் கண்களை அடிக்கடி உறுத்திக் கொண்டிருந்தனர். பிரிட்டிஷ் அரசும் இவர்கள்மீது தனது அராஜகத்தை இடைவிடாது எப்போதும் தொடர்ந்து நடத்திக் கொண்டிருந்தது.

ஆனால் இதற்கு நேர்மாறாகத் தங்களை வழிப்பட்டு, தங்களின் அடிகளை வருடிவாழ்ந்த ஒற்றர் படைகளான மவ்லவீகளுக்கு இந்த ஆங்கிலேயர்கள் தமது கருவூலப் பெட்டகங்களின் கதவுகளைத் திறந்துவிட்டனர். அதுமட்டுமல்ல? இம்மவ்லவீகளுடைய உற்றார், உறவினர் போன்றோரிடம்கூட ஆங்கிலேயரது தயாள சிந்தையில் கருணை பொங்கிப் பிரவாகமெடுத்தது ஈகை பெருக்கெடுத் தோடிற்று.



மாதாமாதம் மவ்லவீ அஷ்ரஃப் அலீ தானவீக்கு அறுநூறு ரூபாய் சம்பளம் கொடுத்து வந்த ஆங்கிலேயர்கள் மவ்லவீ அஷ்ரஃப் அலீ தானவீயின் சகோதரர் மஜ்ஹர் அலீக்கு ரகசிய ஒற்றர்படை பிரிவில் உயர் அதிகாரி என்னும் பெரிய உத்தியோகத்தையும் கொடுத்தனர். இதற்குரிய வரலாற்றுச் சிறப்புமிக்க ஆதாரத்தைப் பாருங்கள்.

***மவ்லானா மர்ஹூம் தானவீ (காலஞ்சென்ற மவ்லானா அஷ்ரஃப் அலீ தானவீயின் சகோதரர் சி.டீ.டி.யாக குற்றப் புலனாய்வுத் துறையில் பெரிய அதிகாரியாக இறுதிவரை இருந்தார். அவர் பெயர் மஜ்ஹர் அலீ என்பதாகும்.***

***(நூல்: மக்தூபாத்தே ஷைகு பக்கம் 297 முதல் 299)***

மேற்கண்ட வாசகம் ஒன்றும் தெரியாத ஒரு சாதாரண மனிதர் கூறியதென்றெண்ண வேண்டாம். மாறாக தாருல் உலூம் தேவ்பந்தின் தலைமை ஆசிரியரான மவ்லவீ ஹூஸைன் அஹ்மத் ஸாஹிப் கூறும் வாசகமாகும். இவ்வாசகம் மக்தூபாத்தே ஷைகு என்னும் நூலின் இரண்டாம் பாகத்தில் அச்சிட்டு வெளியாகியுள்ளது.

இன்னும் மஜ்ஹர் அலீக்கு இஸ்லாமியர்களிடையே உளவு பார்ப்பதற்காக பெரிய உத்தியோகத்தைக் கொடுத்து மவ்லவீ அஷ்ரஃப் அலீ தானவீ ஸாஹிபைக் கொண்டு ஆங்கிலேயர் என்ன வேலை வாங்கியிருப்பார்கள்? மாதந்தோறும் அறுநூறு ரூபாய் சம்பளம் தந்து என்ன சேவைகளை செய்யச் சொல்லியிருப்பார்களென்பதை வாசகர்கள் நன்கு உணர்ந்திருப்பீர்கள்.

வாசகர்களே! நன்கு நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். முன்னால் மூன்றாம் பாகத்திலேயே மவ்லவீ இல்யாஸ் ஸாஹிப் காந்தல்வி தப்லீக் ஜமாஅத்தை உருவாக்கியது பற்றிய காரணத்தைக் கூறியதை இப்போது மீண்டும் உங்கள் நினைவுக்குக் கொண்டு வாருங்கள். கல்வி

ஞான போதனை மவ்லானா அஷ்ரஃப் அலீ தானவீயுடையதாகவும் என்றும், இவ்வாறு அவரது போதனை விரிவாகி விடுமென்றும் இம்முறையில் தானவீ ஸாஹிபுடையபோதனைகள் அனைவரிடமும் பரப்பப்பட வேண்டுமென்றும் மவ்லவீ இல்யாஸ் தமது உள்ளக்கிடக்கையை வெளிப்படுத்தியிருந்ததைப் பார்த்தீர்களல்லவா! இவர் யாரைப் பற்றி இவ்வாறு குறிப்பிட்டாரோ, அதே மவ்லவீ தானவீ ஸாஹிபுக்குத்தான் மாதந்தோறும் அறுநூறு ரூபாய் சம்பளமும். ஆங்கில அரசின் உளவுத் துறையில் அவரது சகோதரருக்குப் பெரிய பதவியும்!

இதுமட்டுமா? தப்லீக் ஜமாஅத்தை ஸ்தாபித்த மவ்லவீ இல்யாஸ் ஸாஹிபும் கூட ஆங்கிலேயரின் அனுக்கிரஹத்தைப் பெற்றவரே! இவருக்கும் மாதந்தோறும் ஆங்கிலேயரால் ஊதியம் தரப்பட்டு வந்தது. இது பற்றிய ஆதாரப் பூர்வமான வாசகத்தை டில்லி நகரத்தின் அகில இந்திய ஜமாஅத்துல் உலமா சபையின் பிரதம நிர்வாகியாயிருந்த மவ்லவீ ஹிப்ஜுர் ரஹ்மான் ஸாஹிப் ஸியோஹார்வி கூறுவதைக் கேளுங்கள்.

***இல்யாஸ் ஸாஹிபுடைய தப்லீக் இயக்கத்திற்கு ஆரம்ப காலத்தில் அரசாங்கத்திலிருந்து (ஆங்கிலேய அரசிடமிருந்து) ஹாஜி ரஷீத் அஹ்மத் ஸாஹிப் என்பவர்மூலம் சில தொகைகள் கிடைத்து வந்தன. பின்பு நிறுத்தப்பட்டு விட்டன என்பதாக டில்லி நகருடைய ஜமாஅத்துல் உலமா சபையின் பிரதம நிர்வாகி மவ்லானா ஹிப்ஜுர் ரஹ்மான் கூறினார். (நூல் : மக்காலி மத்துஸ் ஸத்ரைன் பக்கம் 8)***

வாசகப் பெருமக்களே! ஈமானின் ஒளியின்மூலம் நீதியென்னும் பார்வையைக் கொண்டு மேற்கண்ட வாசகங்களை திரும்பப் படித்துப் பாருங்கள். இஸ்லாமியர்களுக்கெதிரான ஆங்கிலேய அரசு எப்படிப்பட்ட தந்திரமுள்ள வஞ்சகக் குணம் படைத்த பித்தலாட்டக்காரர்களையெல்லாம் முஸ்லிம்களிடையே வேவு பார்க்க நியமித்திருந்ததென்பதை சிந்தித்துப் பாருங்கள்.



சாதாரண பாமரத்தனமான கல்வியறிவற்ற முஸ்லிம்கள் மட்டுமல்ல! பெரும் பெரும் பொறுப்புக்களிலிருந்த சிறந்த உயர்கல்வி கற்ற முஸ்லிம்கள்கூட இப்பரங்கியரின் கூலிப்படைகளை எள்ளளவுகூட சந்தேகிக்கவில்லை. நீண்ட தாடியுடன் ஜுப்பாக்களணிந்து தொப்பி தலைப்பாகையுடன் தஹஜ்ஜுத் தொழுகையைக்கூட தவறவிடாத மலக்குகளைப் போன்று பரிசுத்த வேடந்தரித்து வந்த இவர்கள் உண்மையில் பரங்கிப் பேய்களின் அழகிய கைப்பாவைகளாயிருப் பவர்களென்று யார்தான் சந்தேகிக்க முடியும்? தமது கைப்பாவைகளான இவர்களை ஆங்கிலேயர்கள் முஸ்லிம்களிடையே பகைமையையும் பிளவையும் உருவாக்க தங்களது இஷ்டப்படியெல்லாம் எப்படி ஆட்டுவித்தாரென்று யாருக்குத்தான் தெரியும்?

இனி தப்லீக் ஜமாஅத்தில் நடப்பதென்ன? தீனுடைய வேலை, தீனுக்காக உழைத்தல், தப்லீக் எனப்படும் இஸ்லாமியப் பிரச்சாரம் போன்ற பெரிய பெரிய வார்த்தைகளையெல்லாம் கூறி அப்பாவி முஸ்லிம்களை மிக நீண்ட தூர பயணங்களுக்கெல்லாம் அழைத்துச் செல்கின்றனர்.

ஆனால் தீனுடைய வேலை, **கஷ்த், இஜ்திமா, சில்லா** என்னும் பெயரில் பாமர முஸ்லிம்களின் ஜேப்புகளிலிருக்கும் பணம் காசுகள், பஸ், ரயில் கட்டணங்களென்னும் வடிவில் இந்திய நாட்டில் மட்டும் மாதந்தோறும் குறைந்தபட்சம் சுமார் 25 லட்ச ரூபாய்களாவது அரசுக்கும், பிறரது கைகளுக்கும் போய் சேருகின்றன.

இதன்றி, டில்லி, பம்பாய், கல்கத்தா, போபால், சென்னை போன்ற நகரங்களிலுள்ளோர் தங்களின் வாணிபத்தையும் தொழிலையும் விட்டுவிட்டு தீனுக்காக உழைக்கிறேனென்று சில்லாக்களில் சென்று தொழில் வியாபாரம் போன்றவற்றில் போதிய கவனம் செலுத்தாததால் தமது வழக்கமான வாடிக்கையாளர்களையும் இறுதியில் இழந்து விடுகின்றனர்.

இவ்விதம் ஒரு வியாபாரிக்கு குறைந்த பட்சம் நூறு ரூபாய் இழப்பு ஏற்படுகிறதென்று வைத்துக் கொண்டால்கூட, இந்த தப்லீக் ஜமாஅத்தினர் வாதிப்பதைப் போன்று ஒரு லட்சம் பேர் தமது வாணிபம் தொழில் முதலியவற்றை விட்டு விட்டு தப்லீக்கில் சென்றால் குறைந்தது ஒரு கோடி ரூபாய் இஸ்லாமிய சமூகத்திற்கு இழப்பு ஏற்படுகின்றது.

மார்க்கத்திற்காகப் பாடுபட வேண்டும் தீனுக்காக சேவை செய்ய வேண்டும் என்னும் தூய நல்லெண்ணத்துடன் வரும் அப்பாவி முஸ்லிம்களுக்கு இத்தகைய ஒரு பெரும் பேரிழப்பு.

ஆனால் தப்லீக்கில் பொறுப்புள்ளவர்கள் ஊர் ஊராகச் சுற்றித் திரிந்து தமது முழு நேரத்தையும் அதற்காகவென்றே செலவழிப்பவர்களுக்கு எப்படி வருவாய் வருகின்றதென்னும் ரகசியம் இந்த அப்பாவி முஸ்லிம்களுக்கு எப்படித் தெரியும்?

பெரும் வலிமார்கள் போல் வேடமிட்டு நொடிக்கு நூறு தடவை அல்லாஹ்வுக்காக, அல்லாஹ்வின் பாதையில் என்று சுற்றிக் கொண்டிருப்பவர்களின் செலவினங்களுக்கு மாயமாகப் பணம் எப்படி வருகிறதென்பதை பிறர் எவ்வாறு அறிவர்? அல்லாஹுத்தஆலா அப்பாவி முஸ்லிம்களின் கண்களைத் திறக்கட்டும். அவர்கள்மீது கருணை புரியட்டும். முக்காலத்தையும் உணர்ந்து தன் உம்மத்தினர்க்கு அறிவித்துத் தந்த மெய்யறிவிப்பாளர் எம்பெருமான் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் யுக முடிவுக்குச் சமீபத்தில் தோன்றக் கூடியவையென்று அறிவித்த அனைத்துக் குழப்பங்களிலிருந்தும் இஸ்லாமிய சமுதாயத்தை இறைவன் காப்பாற்றுவானாக!

அல்லாஹ்வின் பேரருளால் நான்காம் கேள்விக்கான பதிலை நான் இத்துடன் முடிக்கின்றேன். இறுதியாக நீதியுள்ளம் கொண்ட நேர்மையாளர்களிடம் மிகுந்த



வேதனையுடன் கூடிய ஒரு வேண்டுகோள்!

ஒரு கணம்! ஆம்!! ஒரே ஒரு கணம் இறைவன் உங்கள் முன் இருக்கிறான் என்று நிச்சயப்படுத்திக் கொண்டு அமைதியாக ஆழ்ந்த சிந்தனை செய்து பாருங்கள். இதுவரை வாசித்துக் கொண்டு வந்த அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்களை இழிவுபடுத்தித் தூஷித்து அவர்களின் கண்ணியம், மகிமை, சிறப்பு போன்றவற்றின்மீது புழுதி வாரித்தூற்றியவர்கள்மீது உங்களுக்கு நேசமுள்ளதா? வெறுப்புள்ளதா என்று! இத்திருத்தூதுவ நிந்தனையாளர்கள்மீது உங்களின் இருதயத்தில் விரோதமும், வெறுப்பும் இருக்குமேயானால் இறைவன் உங்களின் இருதயத்தில் ஈமானுடைய செல்வத்தைத் தந்தமைக்காக அவனுக்கு நன்றி கூறுங்கள்.

ஒருக்கால், இத்தனை விளக்கத்துடன் விபரமாக இத்திருத்தூதுவ நிந்தனையாளர்களைப் பற்றி தெரிந்த பின்னும் இந்நெறி கெட்ட ஆங்கிலேயரது ஒற்றர்களைப் பற்றி நெஞ்சில் நல்லெண்ணமும், மதிப்பும், கண்ணியமும் இருக்குமேயானால் உடனே தவ்பா செய்து தங்களது நிலைகளை சீர்திருத்திக் கொள்ள முயற்சியுங்கள்.

ஆம்! இஸ்லாமியர்களைப் பிரித்து அவர்களுக்குள் பிரிவினையை உண்டாக்குவது போன்ற சாகசங்களெல்லாம் மரணம் என்ற ஒரு விக்கலுடன் விலகிப்போய்விடும். கப்ரில் யாருடனும் யாரும் துணைக்கு வரப்போவதில்லை. பெற்றோர், பிள்ளைகள், உற்றார், உறவினர், ஆசிரியர் ஆன்மீகக்குரு போன்ற அனைவரின் நேசத்தைவிட அல்லாஹ், ரஸூலின் மீதுள்ள கண்ணியமும் சங்கையும் மிகுந்திருக்கும்பட்சம் அவர்களுக்கு கப்ருடைய இருள்நீங்கி திருநபியவர்களின் பேரொளியால் பரவசமும் ஆனந்தமும் ஏற்படும்.

இவர்களே ஜெயசீலர்கள், இறைவன் இவர்களுக்குத் தனது ரஹ்மத் மற்றும் திருப்பொருத்தத்தைக் கொண்டு

நன்மாராயம் கூறுகின்றான். இவர்களுக்கே நிஃமத்தென்னும் அருட்கொடைகள் கொண்ட சுவனம் தங்குமிடமாகும்.
(அல்குர்ஆன்)

ஆனால் நிலைமை இதற்கு நேர்மாறானதாயிருக்குமேயானால், இறைவனின் வேதனைமிக்க கொடிய தண்டனையும், அக்கப்ரிலிருந்தே துவங்கிவிடும். நரகத்தில் கொண்டு சேர்க்கும்வரை இவ்வேதனை விடப்போவதில்லை.

இதில் கவனிக்கத்தக்க விஷயம் யாதெனில், ஒருவர் சுவர்க்க வாதியா? நரகவாதியா? என்பதை முடிவு செய்யக்கூடிய பதிலுக்கான கேள்வியே இருலோக நாயகர் பேரொளிப் பெருந்தகை எம்பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களைப் பற்றியதாகுமாதலால்,....

கப்ருடைய இச்சோதனையில் தனது ஹபீபுடைய ஈடுஇணையில்லா மாபெரும் அருஞ்சிறப்பைக் கேள்வியாகக் கொண்டு முடிக்க வேண்டுமென்பதுதான் எல்லாம் வல்ல அந்த ஏகனின் நாட்டம் போல் இருக்கிறது. யார் இக்கேள்விக்கு சரியான விடையளிக்கின்றாரோ, அவர் வெற்றிபெற வேண்டும்.

இதற்கு மாறாக, இக்கேள்விக்கு பதிலளிக்காமலோ, அல்லது தப்புந் தவறுமாக உளறினாலோ, இனி என்றென்றைக்கும் தோல்வியைத் தழுவியராக நரகைத் தவிர்த்து வேறு இருப்பிட மற்றவராகிவிட வேண்டுமென்பது இறைவனின் நியதியாகும்.

எனவே **‘மன் ரப்புக உமதிறைவன் யார்?’ ‘வமாதீனுக்க உமது மார்க்கம் என்ன?’** என்ற முதல் இரு கேள்விக்கும் சரியான விடையளித்து விட்டாலுங்கூட, **‘மாதகூலு ஃபீஹக்கி ஹாதர் ரஜுல் இவரைப் பற்றி நீர் என்ன கூறுகின்றீர்?’** என்னும் மூன்றாவது கேள்விக்குச் சரியானவிடையளிக்காவிட்டால் முதல் இரு கேள்விக்கும்



அளித்த சரியான பதிலும் வீணாகித்தான் போய்விடும்.

எவ்வாறு தொழுகையில் தக்பீர் தஹ்ரீம், (தக்பீர் கட்டுதல்) கியாம், (நிற்குதல்) கிராஅத், (ஓதுதல்) ருகூவு, (குனியுதல்) ஸுஜூது (சிரவணக்கம் செய்தல்) முதலான அனைத்தையும் ஷரீஅத்திற்குட்பட்ட நிலையில் ஒழுங்காக நிறைவேற்றிய போதிலும், தொழுகையின் இறுதிநிலையான காயிதா (இருப்பு)வை ஷரீஅத்திற்கு மாற்றமாகச் செய்துவிட்டால் தொழுகை முழுவதுமே வீணாகிப் போகின்றதோ, அதேபோலத்தான் இந்த இறுதிக் கேள்வியுமாகும்.

வபில்லாஹித் தௌபீகி வஹுவல் முஸ்தஆன், வமா அலைனா இல்லல் பலாக், வஸல்லல்லாஹு தஆலா அலாகைரி கல்கிஹீ முஹம்மதின் வஆலிஹி வ ஸஹ்பிஹி அஜ்மஈன் பிரஹ்மத்திக்க யாஅர்ஹமர் ராஹிமீன். ●